# ஹலோ! ரஸிகர்களே.

## இதோ நீங்கள் விரும்பிய ரேடியோ.



இதுதான்
"ரேமண்டு ஸ்வர்ண ஒலி ரேடியோ"

எல்லா அலைகளிலும் ஒலிபரப்பும் ரேமண்டு 5-வால்வ் ஸெட்டுதான் நீங்கள் யுத்தம் முடிந்ததும் வாங்க விரும்பிய உயர்தர ரேடியோ. மற்றைய ரேடியோக்களில் கிடைக்காத ஒலி சுத்தமும் ஒரு தனி இனிமையையும் இதில் காண்பீர்கள்.

ரேமண்டு ரேடியோவின் முக்கிய அம்சங்கள் மாசு மருவற்ற ஒலி. அலைவிலா கல்லிருந்து. மற்ற ஸ்டேஷன்களினாலோ, காற்று, மழையினாலோ தொந்திரவு கிடையாது. எவ்வித சீதோஷ்ண மாறுதலாலும், ஒலியில் பழுதிருக்காது.

அழகும் கவர்ச்சியும் பொருந்திய ரேமண்டு ரேடியோ, ரஸிகர்களுக்கு ஒருவித தொந்திரவும் இருக்கக்கூடாதென்றே உறுதியாகவும் நேர்மையாகவும் செய்யப்பட்டது. வெகு சுலபமாக 200-250 V AC/DC கரண்டு சப்ளையில் உபயோகிக்கலாம். விலையும் வெகு சகாயம்.

## ஜாபிதா விலை ரூ. 520

துறைமுகங்களில் வாங்குவோருக்கு
விலை ரூ. 390 (மாடல் F. 15 D. A.C.)

ரேமண்டு எலக்டிரிக் ஸெட்டுகள் அழகிய வால்நட் பிளாஸ்டிக் பெட்டிகளில் கண்ணைக் கவரும் வர்ணங்களில் அமைந்தவை. கைக்கடக்கிய சைஸ் — 15" × 9" × 8". அதிகப்படியான லவுட்ஸ்பீக்கர், கிராமபோன் பிக்அப் இவைகள் பொருத்துவதற்கு பிரத்தியேக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.



ரேமண்டு பிளாஸ்டிக் லவுட்ஸ்பீக்கர் வெகு அழகாக டிஸைனில் செய்யப்பட்டது. உள்ளே தூசுபுக முடியாது. ஒலியை குறைக்கவோ, அதிகமாக்கவோ வசதியுண்டு. கரகரப்பின்றி தேவையான அளவு ஒலி கொடுக்கும்.
துறைமுகங்களில் விலை ரூ. 105

ஸோல் ஏஜண்ட்ஸ் :

**SMALMIN**

தபால் பெட்டி 794. பம்பாய் 1.

---

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

**மெஸர்ஸ். எஸ். ஐ. ஏஜன்ஸீஸ், மதராஸ்**


நேஷனல்
மாச் ஒர்க்ஸ்
அனில் மார்க்கு தீப்பெட்டிகளையே வாங்கி உபயோகியுங்கள்
பெட்டி உறுதியாகவும், குச்சி வெண்மையாகவும், மருந்து கெட்டியாகவும், எண்ணிக்கை சரியாகவும் இருக்கும்
மழை காலத்திற்கு உத்தரவாதமுள்ளவை
நீங்கள் ஒவ்வொரு குரோஸ் தீப் பெட்டிகளை வாங்குவதும் ஒரு ஏழை இந்தியனுக்கு ஒரு நாள் உணவு கொடுப்பதாகும்.
ANIL
SAFETY MATCHES
சிவகாசி.



உலக முழுவதிலும் ஒவ்வொரு மாதமும் கோடிக் கணக்கில் விற்பனையாவதே ஒரு மருந்துப் பொருளின் பொது ஜனத் தேவையையும் அதன் மேன்மையையும் எடுத்துக் காட்டும். இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்படும் **ப்ரூக்லாக்ஸ்** என்னும் பிரபல சாக்கலேட் விரேசன மருந்து தனிச் சிறப்பு வாய்ந்தது.

**ப்ரூக்லாக்ஸில்** சேர்ந்துள்ள எல்லா மூல மருந்துப் பொருள்களும் திறமை வாய்ந்த நிபுணர்களால், சுத்தத்தின் உயர்தரத்தை ஸ்தாபிக்கும் பொருட்டு நன்கு பரிசீலனை செய்யப்படுகிறது.

**ப்ரூக்லாக்ஸ்** உற்பத்தியில் ஒவ்வொரு வில்லையிலும் மூலப் பொருள்கள் சம அளவில் விநியோகிக்கப்பட்டிருப்பது முக்கிய அம்சங்களில் ஒன்று.

கை படாமல், மிகவும் சுகாதார முறையில் யந்திரங்களினாலேயே வில்லைகளாகி, பாக் செய்யப்படுகிறது. இங்ஙனம் தயார் செய்யப்படும் இந்த **ப்ரூக்லாக்ஸின்** மகிமை உலகத்தின் 75 பிரதான பாகங்களில் சிறந்ததென நிலைநாட்டப் பெற்றுள்ளது.

குழந்தைகளும் சரி, பெரியவர்களும் சரி ருசி மிக்க **ப்ரூக்லாக்ஸ்** சாக்லெட் வாசனையை விரும்புகின்றனர். இது ஒரே இரவில், இனிமையாக வயிற்றில் திருகலின்றி நிவர்த்தியளிக்கிறது. **ப்ரூக்லாக்ஸ்** உபாதையின் மூலஸ்தானத்திற்கே சென்று சாதாரணமாகக் குடலில் ஏற்படும் மலச்சிக்கலை நிவர்த்திக்கிறது.

THE BRITISH
# BROOKLAX
CHOCOLATE LAXATIVE
*for Constipation*

டிஸ்ட்ரிப்யூட்டிங் ஏஜண்டுகள்:
ஓரியண்டல் மர்க்கண்டைல்
ஏஜன்ஸி,
99, அரமனேக்காரத் தெரு - மதராஸ்

தீபாவளி வாழ்த்துக்கள்

★

பகடியேடு கண்ணாம்பா, C.S.R. ஆஞ்சநேயலு
குமாரி, S. P. ராஜாராம், அஞ்சலி தேவி,
குமாரி பாமா (பரத நாட்டியம் புகழ்)

மற்றும் பலர் நடிக்கும்



# "சீவகங்கா"

தெலுங்கு

டைரக்ஷன் : C. S. R.

படப்பிடிப்பு : ஸ்ரீதர்

கதை, வசனம் : B. T. நரசிம்மாச்சாரி

ஸ்டுடியோ : சோபனாசலா

நடனம் : V. சத்தியம்

கலை : வர்மா

சங்கீதம் : P. நாகேஸ்வர ராவ்

சென்னை நகரம், தமிழ்நாடு, மலபார், சிலோன் விநியோக உரிமையாளர்கள் :
லக்ஷ்மி பிக்சர்ஸ், 6-வது ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர்

நைஜாம் சமஸ்தானம் : டெக்கான் பிலிம் டிஸ்ட்ரிபூட்டர்ஸ், ஹைதராபாத்.

இதர பிரதேசங்களுக்கு :
தயாள் ப்ரொடக்ஷன்ஸ், 53, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, மவுண்ட் ரோடு, மதராஸ்


தீபாவளி! தீப மங்கள ஜோதி!
இந்தியாவிலுள்ள எஃகு உபயோ
கிப்பவர்கள் எல்லாருக்கும்
எங்கள் நல்வாழ்த்துக்கள்.
எங்கும் மங்களம் பெருகுக.
TATA
பிரசுரம்:
தி டாட்டா அயர்ன் அன்டு ஸ்டீல்
கம்பெனி (லிமிடெட்)
தலைமை செல்ஸ் ஆபீஸ்:
102-A, கிளைவ் தெரு, கல்கத்தா



# மெய்ப் பொருள்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

ஆருணேய குலத்தில் பிறந்த சுவேத கேதுவுக்கு வயது பன்னிரண்டாயிற்று.

பையனைப் பார்த்துத் தகப்பனார் உத்தாலகர் சொன்னார்: "அப்பனே, யாரேனும் ஒரு குருவைத் தேடி அவரிடம் மாணவனாக அமர்ந்து கல்வி கற்று வருவாயாக. நம்முடைய குலத்தில் பிறந்த எவரும் இதுவரையில் பிறவிப் பிராமணனாக வளர்ந்தது கிடையாது. உன்னால் நம்முடைய குலத்துக்கு ஒரு பழியும் ஏற்படக் கூடாது."

* * *

படித்தும் பண்படாத பிராம்மணர்களுக்குப் பழைய நாட்களில் ஒரு தனிப் பெயர் உண்டு. "பிரம்மபந்து" என்பார்கள். "பிராம்மணர்களுக்குச் சொந்தக்காரன்" என்று பொருள். அதாவது பண்பாடு அடையாமல் பிறவியினால் மட்டும் பிராமணன். க்ஷத்திரியர்களிலும் இவ்வாறே க்ஷத்திரிய ஆசாரமும் பண்பாடும் இல்லாதவனை "க்ஷத்ரபந்து" என்பார்கள். பெயருக்கு மாத்திரம் பிராம்மணர்கள், பெயருக்கு மாத்திரம் க்ஷத்திரியர்கள் அந்தக் காலத்திலும் இருந்தார்கள் என்றும் அவர்களைப் பெரியோர்கள் பழித்தார்கள் என்றும் இதனால் தெரிகிறது.

* * *

தகப்பனார் சொல்லியவாறு பையன் ஒரு குருவிடம் அமர்ந்து பன்னிரண்டு வருஷம் படித்தான். இருபத்து நான்காவது வயதில் தகப்பனாரிடம் திரும்பி வந்தான். நான்கு வேதங்களையும் நன்றாகப் படித்து விட்டுத் திரும்பினான். குருகுலவாசம் செய்து திரும்பியபோது சுவேதகேது, தான் மகா பண்டிதன் என்று இறுமாப்புக் கொண்டவனாக வந்து சேர்ந்தான். தகப்பனார் இதைப்பார்த்து வருத்தமடைந்தார்.

எக்காலத்திலுமே படிப்பானது இறுமாப்பை உண்டாக்கி வந்தது. உண்மையான அறிவு அடையாமல் பல நூல்களைக் கற்றும் பயனில்லை என்பதை அந்தக் காலத்திலும் கண்டிருந்தார்கள்.

வித்யா கர்வத்தோடு திரும்பிய சுவேதகேதுவைப் பார்த்துத் தகப்பனார் சொன்னார்:—

"அன்புக்குரியவனே! எல்லாம் படித்து முடித்து விட்டேன், பண்டிதனாகி விட்டேன் என்று கர்வம் கொண்டிருக்கிறாய்! உண்மை அறிவை அடைந்தவன் 'நான் பெரிய பண்டிதன்' என்று தன்னைத் தானே பாராட்டிக் கொள்ள மாட்டான். எல்லாப் படிப்பிலும் முக்கியமான படிப்பு ஒன்று உண்டு. அதை நீ குருவினிடம் பெறவில்லை போலிருக்கிறது. சொல்லுக்கும், எண்ணத்துக்கும், அறிவுக்கும் அடங்காத பொருளைப் பற்றிக் குருவினிடம் கேட்டுத் தெரிந்து கொண்டாயா?"

தந்தை இவ்வாறு சொல்லக் கேட்டதும் மகன் திகைத்தான். தான் கற்றறியாத விஷயமும் ஒன்று இருக்கிறது என்பதை அறிந்தவுடனே அவனுடைய இறுமாப்புக் கரைந்து போயிற்று. நல்ல குலத்தின் பாரம்பரிய குணமாகிய அடக்கத்தை மறுபடியும் அடைந்தான். "சொல்லுக்கு அடங்காததும் கற்பனைக்கும் அறிவுக்கும் விஷயமாகாததுமான பொருளை உணர்த்தும் உபதேசமும் உண்டா?" என்று தகப்பனாரை விநயமாகக் கேட்டான்.

* * *

பரத பூமியில் நடைபெற்ற பகவத்கீதை உபதேசக் கதை அனைவருக்கும் தெரியும். கதைகளுக்குள் தலை சிறந்த அந்தக் கதையைப் பாரத நாட்டில் அறியாதாரில்லை. நசிகேதனுக்குக் கடோபநிஷத்தை உபதேசித்த கதையும் ஒரு உத்தமமான தோற்று



வாய். நசிகேதனுடைய தந்தை செய்த யாகத்தில் தம்முடைய எல்லாப் பொருள்களையும் தானம் கொடுத்தார். "பால் மாறிய பசுக்களைத் தானம் கொடுத்து என்ன பயன்? என்னை யாருக்காவது தானம் கொடுங்கள்!" என்று நசிகேதன் அடிக்கடி தொந்தரவு செய்வது பொறுக்காமல், "உன்னை யமனுக்குக் கொடுக்கிறேன்!" என்றார் தந்தை. அதையே நிச்சயமாய்க் கொண்டு யமலோகத்துக்குச் சென்றான் நசிகேதன். யமன் கொடுப்பதாகச் சொன்ன பல இன்பங்களையும் வேண்டாம் என்று மறுத்துவிட்டு மெய்ப்பொருள் உபதேசத்தையே வரமாகத் தரவேண்டும் என்று நசிகேதன் வற்புறுத்தி ஞானம் பெற்றான் என்பது கடோபநிஷத்தின் தோற்றுவாய்.

அவ்வாறே சாந்தோக்ய உபநிஷத்தின் ஆறாவது அத்தியாய உபதேசத்துக்குத் தோற்றுவாயும் சிறந்த முறையில் அமைந்திருக்கிறது. படித்த பண்டிதர்களுக்குச் சுபாவமாக உண்டாகும் இறுமாப்பைத் தோற்றுவாயாக அமைத்து விசுவரூப மெய்ப்பொருளின் உபதேசத்தை ரிஷி நமக்கு அருளுகிறார்.

* * *

விநயத்துடனே "புலனுக்கும் அறிவுக்கும் எட்டாத பொருளை உணரச் செய்யும் படிப்பு ஒன்று உண்டா?" என்று கேட்ட மகனைப் பார்த்து உத்தாலகர் சொல்கிறார்:— "பிரியத்துக்குரிய மைந்தனே! மண்ணினால் செய்யப்பட்ட பாண்டங்கள் பலவிதம் உண்டு. ஆனால் ஒரு மண்ணுக் கட்டியை ஆராய்ந்து தெரிந்து கொண்டால், சட்டியும் பானையும் குடமும் எல்லாம் தெரிந்து விடும். மண் என்கிற பொருளை அறிந்தால் மண்ணினால் ஆகிய சகல பண்டங்களையும் அறிந்தபடியாகும். உருவ வேறு பாட்டுக்கு வெவ்வேறு பெயர்கள் தரப்பட்டிருக்கின்றன. உண்மையில் சட்டியும் பானையும் கலயமும் ஓடும் அனைத்தும் ஒன்றே. மண் என்பதே பொருள்; மற்றவை யெல்லாம் தோற்ற வேறுபாடுகள். மண்ணுக்கும் மண் பாண்டங்களுக்கும் உள்ள சம்பந்தமே பரம்பொருளுக்கும் உலகத்தில் காணப்படும் பல வேறு பொருள்களுக்கும் உள்ள சம்பந்தம்."

மேற்கண்ட சாந்தோக்ய உபநிஷத்தின் உபதேசத்தையே திருவள்ளுவர்,

> எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப் பொருள் காண்பது அறிவு

என்னும் அருமையான குறளில் குறிப்பிட்டார்.

'மெய்ப் பொருள்' என்பது உபநிஷத்தில் 'சத்து' என்று சொல்லப்படும் அநாதி மூலப் பொருள். அனைத்தும் கடந்த மூலப் பொருளுக்குத் தமிழர்கள் வைத்திருக்கும் சிறந்த பெயர் 'கடவுள்'. அந்த மொழி ஆண்பாலுமல்ல; பெண்பாலுமல்ல. 'சிவன்' 'தேவி' என்பதைப்போல் ஆண்பாலாகவோ, பெண்பாலாகவோ இல்லாமல், பால் இறந்த பொருண்மையைக் காட்டும் எழுத்து முடிவோடு நிற்கிறது. பரம்பொருளுக்குத் தமிழில் வைக்கப்பட்டிருக்கும் தனிச் சிறப்பு மொழியான 'கடவுள்' என்பது.

உலகத்துக் கெல்லாம் உபாதான காரணமாகிய பொருளை ஆராய்ந்து அறிந்தால் உலகம் முழுவதையும் அறிந்ததாகும். மெய்ப் பொருளை அறிந்தால் எல்லாப் பொருள்களின் உண்மைத் தன்மையை



அறிவோம். சட்டிக்கும், பானைக்கும், ஓட்டுக்கும் உபாதான காரணம் மண். அதைப்போல் அனைத்துக்கும் மூலப் பொருளான பஞ்ச பூதங்களுக்குமே உபாதான காரணம் ஒன்று உண்டு. அதுவே கடவுள்; அறிவைக் கடந்த பொருள்; அனைத்திலும் உள்ளிருக்கும் உண்மைப் பொருள்.

"மகனே! பொன் மணி ஒன்றை ஆராய்ந்தால் பொன்னால் செய்யப்பட்ட எல்லாப் பொருள்களையும் அறியலாமல்லவா? உருவ வேறுபாடுகளும் உருவத்துக்கு உரித்தாய பெயர் வேறுபாடுகளும் பல இருக்கும். அவை எவ்வாறாயினும் உண்மையில் பொன் என்பதே பொருள். கை வளையல்கள், கழுத்தில் போடும் பொன் மாலை, நுனியில் நெய்யப்பட்ட சரிகை முதலிய எல்லாவிதப் பொருள்களையும் தனித்தனியாக ஆராய வேண்டியதில்லை. ஒரு பொன்மணியை ஆராய்ந்தால் போதும். அதனின்று அனைத்தின் தன்மையையும் அறிவோம். நகத்தை வெட்டும் ஒரு * கத்தரிக்கோலை எடுத்துக் கொண்டு ஆராய்ந்தோமானால் கரும்பொன்னாலாகிய எல்லாப் பண்டங்களையும் ஆராய்ந்ததாகும். அனைத்தும் இரும்புதான். வடிவமும், வடிவத்துக்கு உரித்தான பெயர்களுமே வேற்றுமைப்படும். இதைப் போன்றதே நான் உனக்குச் சொன்ன மெய்ப் பொருள் உபதேசம்" என்றார் உத்தாலகர்.

தகப்பனார் சொன்னதைக் கேட்ட சுவேதகேது சொல்லுகிறான்: "அப்படியாயின் என்னுடைய ஆசார்யரும் நான் வணங்கிய மற்றப் பெரியார்களும் இந்த விஷயத்தை அறிந்தவர்களில்லை யென்று தோன்றுகிறது. அறிந்திருந்தால் அவர்கள் இதை எனக்கு உபதேசித்திருப்பார்கள். ஐயனே! தாங்களே இதை மேலும் எனக்கு விளக்கி யருள வேண்டும்" என்றான்.

"அப்படியே" என்றார் உத்தாலகர்.

* * *

"பிரியத்துக்குரியவனே! முதலில் உலகத்தில் மெய்ப் பொருள் ஒன்றே யிருந்தது. வேறுபாடு அற்றுத் தனித்து நின்றது. அதுவன்றி வேறு எந்தப் பொருளும் இருக்கவில்லை. முதன் முதலில் ஒன்றும் இருக்க வில்லை என்றும், சூன்யமாக இருந்தது என்றும், அதன்பின் பொருள் உண்டாயிற்று என்றும் சிலர் சொல்லுவார்கள். சூன்யத்தினின்று எவ்வாறு பொருள் உண்டாக முடியும்? சூன்யம் சூன்யமாகவே கிடக்கும். ஆகையால் அந்தக் கொள்கை தவறு. அறிவாக ஒரு மெய்ப் பொருள் இருந்தது. அதுவே அனைத்துக்கும் மூல காரணம். நிமித்தம், உபாதானம் என்னும் இரண்டுவித காரணமும் அதுவே. குடத்துக்குக் குயவன் நிமித்த காரணம்; களிமண் உபாதான காரணம். பிரபஞ்சத்துக்கு இரண்டுவித காரணமுமாக அறிவு மெய்ப் பொருள் ஒன்றே நின்றது."

'சத்து' என்றால் விமலசத்து,—அல்லது மெய்ப் பொருள். முதலில் 'சத்து' தனித்து நின்றது, பிறகு அது வேறுபாடுகள் கொள்ள எண்ணி உலகம் முழுவதும் உண்டாயிற்று என்கிற இந்த உபநிஷத்துக் கொள்கையில் தற்கால பௌதிகப் புலவர்கள் ஒப்புக் கொண்டிருக்கும் வழிமுறைப் * பரிணாமக் கொள்கை அடங்கியிருக்கிறது.

இந்த மந்திரத்தை வியாக்கியானம் செய்யுமிடத்தில் ஸ்ரீ சங்கராச்சாரியார் தற்காலப் புலவர்கள் வற்புறுத்தும் பௌதிக † அவிநாசத்துவத்தையும் எடுத்துச் சொல்லுகிறார். சூன்யத்தி லிருந்து பொருள் உண்டாகாது; இருக்கும் பொருள் அழிந்து சூன்யமாகாது; உருவ வேறுபாடே உண்டாகும். நீர் உலர்ந்து மறைந்தால் ஆவியாகிக் காற்றில் கலந்து போனதேயாகும்; அழிந்து போகவில்லை. விதையிலிருந்து முளை முளைத்துச் செடி உண்டாவது எப்படி? விதையிலுள்ள உயிரும் பொருளும், காற்றி லிருந்தும் மண்ணி லிருந்தும் வெய்யிலிலிருந்தும் பொருளைத் திரட்டி உண்டாக்கிக் கொள்கின்றன. இல்லாத பொருள் உண்டாவதில்லை; இருந்த பொருள் இல்லாமற் போவதுமில்லை. சட்டி, குடம், பானை அனைத்தும் களிமண்ணின் வேறுபாடுகள். அவ்வாறே செடி, மரம், ஆடு, மாடு, மனிதன் இவை யனைத்தும் அறிவு மெய்ப் பொருளின் உருவ வேறுபாடுகள். ஒன்றுமில்லாமல் சூன்யமாக இருந்து பிறகு அனைத்தும் உண்டாயிற்று என்கிற கொள்கை தவறு. எப்போதும் எல்லாமே இருந்தது. சிருஷ்டி என்பது அறிவு மூலப் பொருள் உருவ வேறுபாடுகள் அடைவது தான். சாந்தோக்கியமும் இதுவே; பௌதிக விஞ்ஞான சாஸ்திரமும் இதுவே.

* * *

"அறிவாக இருந்த விமலசத்து தனியாக இருக்கப் பிரியப்படாமல் 'நான் பலவாறாக வேண்டும்' என்று எண்ணிற்று. உடனே அதனின்று தீ உண்டாயிற்று. பிறகு அந்த வெப்பம் 'நான் பலவாறாக வளரவேண்டும்' என்று விரும்பிற்று. வெப்பத்தினின்று நீர் உண்டாயிற்று."

ஆதி மூலப் பொருள் வெறும் களிமண் போன்றதன்று. களி மண்ணும் குயவனும் கலந்தது போன்ற பொருள். அதுவே எண்ணிற்று; அதுவே வேறுபாடு அடைந்தது.

"மெய்ப் பொருளின் விருத்தி உருவமான தீயானது 'நான் பலவாறாகி வளரவேண்டும்' என்று விரும்பிற்று. நீரினின்று அன்னம் உண்டாயிற்று."

அன்னம் என்பதற்கு விரிந்த பொருள் கொடுக்க வேண்டும். அன்னம் என்றால் இந்தப் பூமி முழுவதுமே என்பது சாஸ்திரம். மண்ணிலிருந்தே எல்லா வித உணவுப் பொருளும் உண்டாகிறது. ஆகையால் 'அன்னம்' என்பது மண் அல்லது பூமி என்பதற்கு ஒரு பெயராகச் சாஸ்திரத்தில் வழங்கி வருகிறது.

'தீ எண்ணிற்று' 'நீர் எண்ணிற்று' என்கிற பொழுது, தீயிலும் நீரிலும் நிற்கும் விமல சத்துப் பொருளாகிய பராசக்தி எண்ணிற்று என்று வைத்துக் கொள்ள வேண்டும். ஆதி காரணமான மெய்ப் பொருளானது உருவ வேறுபாடுகளைக் கொண்டு நீரும் மண்ணுமாக அசேதனமாய் நின்றாலும் அவற்றினுள் அந்தர்யாமியாக நிற்கும் பராசக்தியின் குணம் அதில் அழிந்து போகவில்லை. மெய்ப்

---

* அக்காலத்தில் கத்தரிக்கோலும் அதனால் நகத்தை வெட்டுவதும் உண்டு என்பதை இதனின்று காணலாம்.

* Evolution Theory; †Conservation of matter.

பொருளின் போக்கே பிரகிருதி நியதிகள். கண்டதும் காணப் போவதுமான இயற்கைப் பரிணும முறைகள் மெய்ப் பொருளின் வேகமே.

* * *

“அந்த ஆலமரத்தின் பழம் ஒன்று கொண்டு வா!” என்ருர் உத்தாலகர்.

“இதோ” என்று ஒரு பழத்தைக் கொண்டு வந்து காட்டினுன் சுவேதகேது.

“அதைப் பிளக்கிப் பார். உள்ளே என்ன இருக்கிறது?” என்ருர் தந்தை.

“சின்னஞ் சிறு விதைகள்” என்ருன் மகன்.

“அந்த விதைகளில் ஒன்றை நசுக்கிப் பார். உள்ளே என்ன இருக்கிறது?”

“உள்ளே ஒன்றும் காணவில்லை.”

“மகனே! கண்ணுக்குப் புலப்படாததும், இந்தச் சிறிய விதைக்குள்ளே இருப்பதுமான அணுப் பொருளிலே ஒரு பெரிய ஆல மரம் முழுதும் இருக்கிறது. அதனின்று இலைகளும் விழுதும் கொண்ட ஆலமரம் வெளிப்படுகிறது. இதைப் போலவே அணுமாத்திரமான மூலப் பொருளிலிருந்து சகலமும் உண்டாகிறது. அதுவே பிரபஞ்சத்திற்கு ஆத்மா! அதுவே நீயும்!” என்ருர் உத்தாலகர்.

ஒரு சின்னஞ் சிறு விதைக்குள் மரத்தின் முழு வடிவமும் இலக்கணங்களும் அவ்வளவும் அடங்கி நிற்பதால் அல்லவோ அதினின்றும் மரம் உண்டாகிறது? ஒரே மண்ணில் நடப்பட்ட விதைகள் காற்றும் நீரும் உட்கொண்டு தத்தம் வடிவத்தோடும் இலக்கணங்களோடும் வெவ்வேறு மரங்களாக உண்டாகின்றன. இவ்வளவும் சிறு விதைக்குள் அணுப் பிரமாணத்தில் அடங்கி நிற்பதைக் காட்டி ரிஷி உத்தாலகர் அணுதி மூலப் பொருளைப் பற்றி உபதேசித்தார். இந்நிலை பிரம்மாண்டமான சந்திர சூரிய நட்சத்திரங்களும் மலைகளும் ஆறுகள் சமுத்திரமும் கோடிக் கணக்கான ஜீவ பேதங்களும் ஒரு அணுவான சத்து அல்லது மெய்ப் பொருளிலிருந்து உண்டாயிற்று என்று நம்புவது எப்படி என்பதாகச் சந்தேகப்பட்ட மகனுக்குத் தந்தை ஆலமரத்து விதையைக் காட்டி விளக்கிச் சொன்ருர். “சின்னஞ் சிறிய விதையிலிருந்து ஆலமரம் எவ்வாறு உண்டாயிற்று? மரமும் கிளையும் இலையும் விழுதும் ஆல மரத்தின் பாலும் எல்லா லட்சணங்களும் அந்தச் சிறு விதைக்குள் முதலில் அடங்கிக் கிடக்கவில்லையா? அதைப் போலவே பிரபஞ்சம் முழுதும் ஒரு அணுவின் பரிணும்!” என்று விளக்கினுர்.

* * *

“ஒரு பாத்திரத்தில் தண்ணீர் எடுத்து அதில் கொஞ்சம் உப்புப் போட்டு வைத்திருந்து காலையில் கொண்டு வா” என்ருர் உத்தாலகர். சுவேதகேது அவ்வாறே செய்தான்.

“நேற்றுத் தண்ணீரில் போட்ட உப்பை எடு” என்ருர் தகப்பனுர்.

“அது அழிந்து போயிற்று” என்ருன் மகன்.

“தண்ணீரில் மேலாகக் கொஞ்சம் அருந்து” என்று தந்தை மறுபடியும் கட்டளையிட்டார்.

அருந்திப் பார்த்துவிட்டு, “உப்பாயிருக்கிறது” என்ருன் மகன்.

“மத்திய பாகத்தை அருந்திப் பார்” என்ருர்.

“அதுவும் உப்பாகத்தான் இருக்கிறது” என்ருன் சுவேதகேது.

“அடிப்பாகத்தையும் குடி” என்ருர். அதுவும் உப்பாகத்தான் இருந்தது.

“பாக்கி இருப்பதை வெளியே கொட்டிவிட்டு வா” என்ருர்.

கொட்டி விட்டுத் திரும்பிய மகனைப் பார்த்து ரிஷி சொன்னுர்:—“மகனே! வெளியே தரையில் ஊற்றி விட்ட போதிலும் உப்பு அழியவில்லை. கண்ணுக்குப் புலப்படாத உப்பு அழியாமல் முன் போலவே இருக்கிறதைக் கண்டாய். இவ்வாறே சகல பிரபஞ்சத்துக்கும் மூல காரணமான மெய்ப் பொருள் புலன்களுக்குப் புலப்படவில்லையாயினும் அப்படியே இருக்கிறது என்பதை அறிவாய். நீயும் அந்த மெய்ப்பொருளே ஆவாய். தத் த்வமஸி!”

* * *

உலகத்தில் காணப்படும் பொருள்கள் அனைத்துக்கும் முதற் காரணமாகிய மெய்ப் பொருளைப் பற்றிய ஆராய்ச்சியே உண்மையான அறிவாகும். இந்த ஆராய்ச்சியை எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னுல் நமது முன்னேர்கள் நடத்தியிருக்கிருர்கள். அத்தகைய மகா புருஷர்களின் பரம்பரையிலே தோன்றிய நாம் பாக்கியசாலிகள்.




# நீ எங்கே! நான் எங்கே!

டி. கே. சிதம்பரநாத முதலியார்

இந்த உலகத்தில் சில வஸ்துக்கள் 'எப்படியோ அபூர்வமாய்ப் போய் விடுகின்றன. தங்கம் அபூர்வமான வஸ்து; வைரமும் அப்படியே அபூர்வமான வஸ்து; அபூர்வமாய்க் கிடைப்பது காரணமாகவே அவற்றுக்கு விலை மதிப்பும் ஏறியிருக்கிறது.

வெகு அபூர்வமான இன்னொரு வஸ்துவும் இந்த உலகத்தில் இருக்கிறது; அதுதான் கவி.

உலகத்தில் எந்த தேசத்திலுமே கவி என்பது அபூர்வமான வஸ்துதான். இந்த விஷயத்தைப் பற்றி ஆங்கிலப் பேராசிரியர்கள் சிலர் பேரம் பண்ணாமல் அழுத்தமாகப் பேசி இருக்கிறார்கள்.

கவி அல்லாத செய்யுள்களை மக்கள் முன் போடுவது அநியாயம், பாவம் என்கிறார் ரஸ்கின் என்ற ஆசிரியர்.

இந்த ஆசிரியரை விட அவருடைய குருவான ஆசிரியர் கார்லைல் 'நூறுநாட்டியம்' பிடித்தவர். உண்மையான கவி ஒன்று கிடைத்து விட்டால் அதற்காக எதையும் சடாகக் கொடுத்துவிடலாம் என்பார் அவர்.

"ஷேக்ஸ்பியர் பாடியுள்ள கவிகளை மாத்திரம் எங்களுக்குச் சொந்தமாக விட்டு விடுங்கள் போதும். மற்றவை எப்படியேனும் போகட்டும். இந்திய சாம்ராஜ்யமே போனாலும் போகட்டும்! ஒரு நாள் போகத்தான் போகிறது அது; அதைப் பற்றிக் கவலை இல்லை" என்று கார்லைல் சொன்னார். நூறு வருஷத்துக்கு முன்பு அதாவது 1840-ம் வருஷத்தில் அவ்விதம் சொன்னார்.

கவியினால் விமோசனம் இருக்கிறதோ இல்லையோ, சிலருக்கு அதில் அபார மோகம் இருக்கிறது என்பது மாத்திரம் நிச்சயம்.

ஆனால் அதில் ஒரு கஷ்டமும் இருக்கிறது; கவி என்பது எது, கவி அல்லாத வெறும் செய்யுள் எது என்று கண்டு பிடிப்பது கஷ்டமான காரியம். எங்குமே யாருக்குமே நெடுகிலுமே கஷ்டமாய்த்தான் அது இருந்திருக்கிறது. கண்ணும் பொத்தியே விளையாடி விடுகிறது கவி!

மேல் நாட்டு ஆசிரியர் இன்னொருவர் (ஆசிரியர் காராட்) உண்மைக் கவியைக் காணக் கூடியவர்களும் அதை அனுபவிக்கக் கூடியவர்களையும் காண்பது மிக அருமை என்கிறார். ஒளிப்பு மறைப்பு இல்லாமலே அவர் பேசுகிறார்.



கவியை அனுபவிக்கிற காரியம் எவ்வளவு சொல்லிக் கொடுத்தாலும், எவ்வளவு பயின்றாலும், எவ்வளவு முயன்றாலும் சாயாத காரியம்; ஒருவருக்கு

அது பிறவியிலேயே ஏற்பட்டிருக்க வேண்டும் (கட்டு தளைய கோடை இலைகளைப் போல) என்கிறார்.

ஆங்கிலக் கவி சம்பந்தமாகச் சொல்ல வந்தவர் தான் அவர்; தமிழ்க் கவி சம்பந்தமாகவும் ஒருவாறு அவரை ஆமோதிக்கத் தோன்றுகிறது நமக்கு.

இருந்தாலும் சில சமயங்களில் சாமானிய மக்கள் தமிழ்க் கவிகளை இதய பூர்வமாக அனுபவித்து விடுவதைப் பார்க்கிறோம். அதற்குக் காரணம், தமிழ்க் கவிதையிடம் அதிசயமான ஒரு எளிமை இருப்பதுதான். எளிமை இல்லை என்றால் கவி இல்லை என்பது எல்லோராலும் ஒப்ப முடிந்த காரியம்.

விஷயம் எவ்வளவு பெரிய விஷயமாயும் இருக்கலாம்; எவ்வளவு ஆழமானதாயும் இருக்கலாம்; ஏன், எட்டாத உயரமுடையதாயும் இருக்கலாம். ஆனாலும் அமைப்பு எளிமையாகவே இருக்கும் — மலர்ந்த பூ எப்படி எளிமையாக அமைந்திருக்கிறதோ அதே போல.

அந்தவிதமாக அமைந்த ஒரு தமிழ்க் கவியை இப்போது நாம் பார்க்கலாம்.

* * *




சோழ நாட்டைச் சேர்ந்த ஒரு கவிஞர் ஸ்தல யாத்திரை போய்க் கொண்டிருந்தார். ஒரு ஸ்தலத்தில் சுவாமி தெரிசனம் செய்கிறது, பிறகு அடுத்த ஸ்தலத்துக்குப் போகிறது என்பதாக ஊர் ஊராய்ப் போய்க் கொண்டிருந்தார். சில சமயம் வழியிலுள்ள சத்திரத்தில் சாப்பிட்டு விட்டு இரவில் அங்கேயே படுத்திருந்து விட்டுக் காலையில் எழுந்து அடுத்த ஊருக்குப் போவது வழக்கம்.

ஒரு நாள் அவர் தங்க நேர்ந்த சத்திரத்துக்கு வேறொரு பிரயாணியும் வந்து தங்க நேர்ந்தது.

அவரோடு கவிஞர் பல விஷயங்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். தம் தரித்திர நிலைமையைப் பற்றியும் சொன்னார். கடைசியாகத் தாம் பாடிய பாடல் ஒன்றைப் பாடிக் காட்டினார். வந்தவர் பாடலை அபாரமாய் அனுபவித்தார். புலவர் வேறு சில பாடல்களையும் பாடிக் காட்டினார். கேட்டவருக்கு ஒரே அதிசயமாய்ப் போய் விட்டது:

"அடடா! எவ்வளவு அழகாய், அற்புதமாய் இருக்கின்றன பாடல்கள்! இப்படிப்பட்ட கவிகளை அனுபவிக்க ஒரு ஆசாமி இருக்கிறார். தமிழ்க் கவியை அனுபவிக்க அவரைப்போல் வேறொருவர் இல்லை. மயிலாப்பூருக்கு வடக்கே கொஞ்ச தூரத்தில் திருநின்றவூர் (தின்னனூர்) என்ற ஸ்தலம் இருக்கிறது. அங்கேதான் அந்த மனிதர் இருக்கிறார். அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் அவரைக் காளத்தியப்ப வள்ளல் என்று அழைப்பார்கள். அவரிடம் போய் உம்முடைய கவிகளைப் பாடினால் அவர் உம்மைவிடப் போவதில்லை; என்ன பாடெல்லாமோ படுத்தி விடுவார்!" என்பதாகச் சொல்லித் தீர்த்தார்.

காலையில் எழுந்தார்கள் இருவரும். வந்தவர், தன் ஜோலியைப் பார்க்கப் பயணம் புறப்பட்டு விட்டார்.

கவிஞர் யோசித்தார். வடக்கு முகமாக நடையைக் கட்ட வேண்டியதுதான் என்று முடிவு செய்து மயிலாப்பூரை நோக்கிப் பிரயாணமானார்.

சில நாளில் மயிலாப்பூரை அடைந்தார். திருநின்றவூர் எங்கே இருக்கிறது என்று விசாரித்தார்.

"வெகு தூரம் இல்லை; இரண்டு நாள் பயணந்தான்" என்றார்கள். மேலே நடந்தார். மறுநாள் மாலை ஒரு ஊரை அடைந்தார். அங்குள்ளவர்கள் "இங்கே சத்திரத்தில் தங்கிவிட்டுக் காலையில் திருநின்றைக்குப் போகலாம். இங்கிருந்து மூன்று நாழிகை தூரந்தான் அந்த ஊர்" என்றார்கள்.

கவிஞரும் அப்படியே சத்திரத்தில் சாப்பிட்டு விட்டுத் திண்ணையில் கட்டியிருந்த மாப்பிள்ளைத் தலையணையில் தலையை வைத்துக் கொண்டு நீட்டி நிமிர்ந்து படுத்துக் கொண்டார்.

ஆனால் அவருக்குத் தூக்கம் வரவில்லை. தம்முடைய வாழ்க்கையையும், கஷ்டங்களையும் யோசனை பண்ணிப் பார்த்தார். "நம்முடைய கஷ்டங்களுக்கு விமோசனமே இல்லை என்று எண்ணினோம். ஆனால் அவை நாளையோடு தீர்ந்துவிடப் போகின்றன; சந்தேகம் இல்லை" என்பதாக எண்ணமிட்டுக் கொண்டே இருந்தார். அந்த எண்ணம் மெள்ள மெள்ள ஒரு கவியாக உருவெடுத்தது.

அதி காலையிலேயே எழுந்து நடக்க ஆரம்பித்தார் கவிஞர். நின்றையூரைச் சேர்ந்தார். புலவர் ஒருவர் தெற்கேயிருந்து வந்திருப்பதாகப் பிரபுவுக்குத் தெரிவிக்கச் சொன்னார். பிரபுவும் கவிஞரை வீட்டுக்குள் அழைத்து உணவருந்த ஏற்பாடு செய்தார்.

உணவருந்தியதும் கவிஞரை உட்கார வைத்தார் வள்ளல். அங்கு வந்திருந்த மற்ற புலவர்களையும் உட்காரச் சொன்னார்.

பேச ஆரம்பித்தார் கவிஞர்:

"நேற்று இரவு அடுத்த ஊர்ச் சத்திரத்தில் தங்கியிருந்தேன். அப்போது என்னோடு நெடுகிலும் பழகி வந்த ஒரு ஆசாமியிடம் சில வார்த்தை சொன்னேன். அந்த ஆசாமியின் பெயர் நல்குரவு. (தரித்திரம்.) அவன் இதுவரையில் நான் எங்கே போனாலும் என்னை விடாமல் நிழலைப்போல் தொடர்ந்து வந்தவன். அவனைப் பார்த்து நான்

சொன்னது இதுதான்!" என்ற பீடிகையுடன் பாடலைச் சொல்ல ஆரம்பித்தார்.

*நீளத் திரிந்துழன்றாய்*
*நீங்கா நிழல்போல :*
*நாளைக் கிருப்பையோ*
*நல்குரவே! — காளத்தி*
*நின்றைக்கே சென்றக்கால்*
*நீயெங்கே! நானெங்கே!—*
*இன்றைக்கே சற்றே*
*இரு!*

கவிஞருடைய உணர்ச்சியானது அற்புதமான கவி உருவம் பெற்றுவிட்டது. அந்த உருவம் கேட்டவர்களை என்ன என்னவோ செய்தது. காளத்தி வள்ளல் ஏதோ வேறு உலகத்தைச் சேர்ந்தவர் போலத் தோன்றினார். இந்த உலகத்திலிருந்து மறைந்து விட்டார் என்றும் சொல்லலாம். நின்றையூரோ பறந்து போய்த் தேவலோகத்திலேயே தங்கி விட்டது.

• • •

வெண்பாவை ஊரிலுள்ளவர்கள் எல்லாரும் சதா பாடிக் கொண்டிருந்தார்கள். ஆடவர், பெண்டிர், பிள்ளைகள் எல்லாரும் பாடிக்கொண்டிருந்தார்கள்.

படுக்கப் போகும்போது ஒரு தடவை சொல்லுவார்கள். காலையில் எழுந்திருந்த உடன் சொல்லுவார்கள். கவியை ஸ்நான கட்டத்திலே கேட்கலாம்; கோயில் பிராகாரத்திலும் கேட்கலாம்.

அயலூரிலிருந்தோ தூர தேசத்திலிருந்தோ யார் வந்தாலும் அவர்களுக்கு நின்றையூர் வாசிகள் சொல்லும் செய்தி அந்த வெண்பாதான்.

ஆகவே, "நீளத் திரிந்து" என்ற வெண்பா போகாத இடம் தமிழ் நாட்டில் எங்கும் இடையாது என்று ஆகிவிட்டது.

இப்படி அந்தக் கவி எங்கும் போய் ஒலித்துக் கொண்டிருப்பதை ஒரு தொண்டை மண்டலத்துப் புலவர் பார்த்தார். ரொம்ப ரொம்ப வியந்தார்.

அப்படி அதிசயத்தில் மூழ்கியவரின் மனசுக்கு எங்கெங்கேயோ எட்டாத தூரத்திலுள்ளவர்கள் எல்லாரும் அந்த வெண்பாவைப் பாடிக்கொண்டும் கூத்தாடிக் கொண்டும் இருப்பதாகத் தோன்றுகிறது. வானமுகடாகிய அண்டகோளத்திலுள்ள பேர்வழிகள், பாதாளத்து ஆசாமிகள், எட்டுத் திசைகளையும் தொடர்ந்து சுற்றி நிற்கும் சக்ரவாளக்கிரி வாசிகள் எல்லாருக்குமே தமிழ் பாஷை தெரியும் என்றும் தமிழ்க் கவியை அவர்கள் அநுபவிக்கக் கூடும் என்றும் எண்ணுகிறார் புலவர். எண்ணட்டும்; குற்றம் இல்லை!

*'நீளத் திரிந்தே'ன்று*
*வெண்பாவி லுல்அன்று*
*நின்றையர் கோன்*
*காளத்தி வாணனைப்*
*பாடிய பாடல்,—*
*கருதும்அண்*
*கோளத்தி லும்சென்று,*
*பாதாளம் புக்கு,*
*குலவுசக் ர*
*வாளத்தி லும்சென்ற*
*தால் : எவி தோதொண்டை*
*மண்டல மே?*

கவிஞரின் உள்ளத்தில் ஒரு வள்ளலைப் பற்றிய அபூர்வமான உணர்ச்சி பிறந்தது. அந்த உணர்ச்சி தமிழ் வார்த்தைகளையும் தாளங்களையும் கொண்டு அதி அபூர்வமான கவி உருவம் பெற்றது. அதிசயமான விஷயந்தான் அது. அதைவிட அதிசயமான விஷயம் அந்தக் கவியைத் தமிழ் மக்கள் எல்லாரும் அநுபவித்து விட்டார்கள் என்பதுதான்!

கவிஞர், கவி, கவியை அநுபவித்த தமிழர்கள் ஆகிய மூவர்களுக்குமாக ஒரு திருவிழாக் கொண்டாடலாம்.


இன்னிசை! இன்பம்!! காதல்!!!
அனைத்தும் நிறைந்த
காவிய ஓவியம்
கிரேட் ஈஸ்டர்ன்ஸ்
சிவப்பிரகாசம்
ஜெயம்மா.....பாலையா..
மற்றும்.....
M.R.சந்தானலக்ஷ்மி.
T.S.துரைராஜ்...
தயாரிப்பு & டைரக்ஷன்:
...ரங்கராஜ் & சக்ரவர்த்தி...
——: டிஸ்டிரிபியூட்டர்கள் :——
வட, தென் ஆற்காடு, செங்கல்பட்டு
சித்தூர் ஜில்லாக்களுக்கு:
பயனீர் பிக்சர்ஸ்
குடியாத்தம்
மதுரை, இராமனுதபுரம்
ஜில்லாக்களுக்கு:
மதுரை பிலிம் சர்க்யூட்
ஸ்ரீவில்லிபுத்தூர்
மைசூர் சமஸ்தானம், தென்கன்னடம்
குடகு முதலிய இடங்களுக்கு:
கர்னாடக பிலிம்ஸ் லிமிடெட்
பெங்களூர்
விவரங்களுக்கு: கிரேட் ஈஸ்டர்ன் பிக்சர்ஸ், 35, லஸ் சர்ச் ரோடு, மதராஸ்-4

காலை வேளையிலே—ஒரு
கமுகஞ் சோலையிலே!



போட்டோ—எம். ஆ. கிளைவ்.



மகாகவி பாரதியாரின்

# கண்ணன் பாட்டு

பாங்கியைப் பார்த்து நாயகி சொல்லுதல்

நேர மிருந்ததினும் நித்திரையின்றி—உங்கள்
நினைப்புத் தெரியவில்லை, கூத்தடிக்கிறீர்;
சோர னுறங்கி விழு நள்ளிரவிலே—என்ன
தூளி படுகுதடி, இவ்விடத்திலே!
ஊரை யெழுப்பிவிட நிச்சயங் கொண்டீர்—அன்னை
ஒருத்தி யுண்டென்பதையு மறந்து விட்டீர்;
சார மிருந்த தென்று வார்த்தை சொல்லிநீர்—மிகச்
சலிப்புத் தருகுதடி சகிப் பெண்களே! 1

நானும் பலதினங்கள் பொறுத்திருந்தேன்—இது
நாளுக்கு நாளதிக மாகி விட்டதே!
கூன னொருவன் வந்திந் நாரி பின்னலைக்
கொண்டை மலர் சிதற நின்றிழுத்ததும்,
ஆனைமதம் பிடித்திவ்—அஞ்சியம்மையின்
அருகினி லோட இவள் மூர்ச்சை யுற்றதும்,
பானையில் வெண்ணெய் முற்றும் தின்று விட்டதால்
பாங்கி புரோகிணிக்கு நோவு கண்டதும், 2





பத்தினியாக பொரு பண்ணை வெளியில்
பத்துச் சிறுவர் வந்து முத்தமிட்டதும்,
நத்தி மகளுக் கோர் சோதிடன் வந்து
நாற்பதரசர் தம்மை வாக்களித்ததும்,
கொத்துக் கனல் விழியக் கோமிப் பெண்ணைக்
கொய்ந்து சூளி கண்டு கொக்கரித்ததும்,
வித்தைப் பெயருடைய விண்ணியவளும்
மேற்குத்திசை மொழிகள் கற்று வந்ததும், 3

எத்தனை பொய்களடி! என்ன கதைகள்!
என்னைப்புறக்க மின்றி இன்னல் செய்கிறீர்!
சத்தமிடும் குழல்கள் வீணைக ளெல்லாம்
நாணங்க ளோடு கட்டி மூடிவைத்தங்கே
மெத்த வெளிச்சமின்றி யொற்றை விளக்கை
மேற்குச் சுவரருகில் வைத்ததன் பின்னர்
நித்திரை கொள்ள எனைத் தனியில் விட்டே
நீங்க ளெல்லோரு மங்கள் வீடு செல்லுவீர்! 4








ஸ்ரீமான் வ. வே. சு. ஐயர் பாரதியாரின் கண்ணன் பாட்டைக் குறித்துப் பின்வருமாறு சொல்லுகிறார்: "பாரத நாட்டின் குலதெய்வமாகி விட்ட கண்ணனுக்குப் பாமாலை சூட்டாத கவிகள் அருமை. தன்னை நெடு நாளாக மறந்திருந்த பாரத நாடு திரும்பவும் விழித்துக் கொண்டதும் அதன் எதிரே முதலில் தோன்றிய ஒளி, கீதா சாஸ்திரத்தைக் கூறிப் பார்த்தனுடைய ரதத்தை வெற்றி பெற ஓட்டிய கண்ணபிரானுடைய உருவமே. அந்த உருவமானது நமது கவியின் இருதயத்திலும் எழுந்து அவருடைய கவிதைக்கு ஒரு சோபையைக் கொடுத்தது......கண்ணனைத் தாயாகவும் தந்தையாகவும் எஜமானனாகவும் குருவாகவும் தோழனாகவும் நாயகியாகவும் நாயகனாகவும் பாவித்துப் பாடுகிறார்."

கண்ணனை நாயகனாகப் பாவித்துப் பாரதியார் பாடிய இந்த அருமையான பாடலில் நவரஸங்களும் ததும்புகின்றன. சிறப்பாக நகைச்சுவை சொட்டுகிறது. பாட்டின் பொருளை நமது சித்திரக் கலைஞர் [illegible] உருவகப் படுத்தி அழகிய சித்திரக் காட்சியாக அமைத்துத் தந்திருக்கிறோம்.


பாங்கியர் போன பின்பு தனியிருந்து சொல்லுதல்
கண்க ளுறங்க வொரு காரண முண்டோ
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே?
பெண்களெல்லோரு மவர் வீடு சென்றிட்டார்,
பிரிய மிருந்த கண்ணன் காத்திருக்கின்றான்!
வெண்கல வாணிகரின் வீதி முனையில்
வெளிப் புறத்தி லெனைக் காணடி யென்றான்;
கண்க ளுறங்க லெனுங் காரிய முண்டோ
கண்ணனைக் கையிரண்டுங் கட்ட லின்றியே?
மணியம்.

# அணுவைப் பிளக்க,

அணுவைப் பிளக்கப் பூதம் கிளம்பிற்று என்பது ஒரு வெட்டப் பூதம் கிளம்பிற்று என்பதைப் போல வெறும் கதை என்று நினைக்க வேண்டாம். ஜப்பானியர்களைக் கேட்டால் உண்மை தெரியும். இந்தப் பூதத்தை அடக்கி ஆளாவிட்டால் உலகத்தையே ஒரு நொடிப் பொழுதில் விழுங்கிவிடும்; விஞ்ஞானிகள் உள்படத்தான். உலகில் இன்னும் சமாதானம் ஏற்படவில்லை. இந்த பூதத்தை எங்கே ஏவி விடலாம் என்று அலைந்து கொண்டிருக்கிறார்கள். எனவே அணுவை யார் கண்டது, பூதத்தை யார் கண்டது என்று இராமல் அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ளுவது அவசியமாகும்.

★

ஏறக்குறைய இரண்டாயிரத்து நானூறு வருஷங்களுக்கு முன் டெமாக்ரிடிஸ் என்று ஒருவர் கிரேக்க நாட்டில் இருந்தார். அக்காலத்தில் அறிவிலும் கலையிலும் புராதன இந்தியர்களுக்குச் சரி சமானமாக இருந்தவர்கள் கிரேக்கர்கள்தான். இவரும் நம் நாட்டுப் பேரறிஞரான கணாடர் என்பவரும் ஞான திருஷ்டியினாலேயே பொருள்களெல்லாம் அணுக்களின் கூட்டங்களாக இருக்க வேண்டும் என்று கூறினார்கள். இது சரியா தப்பா என்று பார்க்க அக்காலத்தில் சோதனைச் சாலைகள் ஏது? எனவே இப்படிப் பல நூற்றாண்டுகள் கழிந்தன. 1810-ஆம் ஆண்டில் டால்டன் என்ற ஒரு அறிஞர் அணுவை மறுபடியும் அம்பலத்துக்குக் கொண்டு வந்தார். அச்சமயம் விஞ்ஞானக் கலை வளர ஆரம்பித்த சமயம். டால்டன் உலகப் பொருள்கள் எல்லாம் தொண்ணூற்றிரண்டு தனிப் பொருள்களினாலேயே (Elements) ஏற்பட்டவை என்றும் ஒவ்வொரு தனிப் பொருளையும் துண்டம் செய்து பிரித்துக் கொண்டே போனால் பிரிக்க முடியாத நிலையில் துகள் கிடைக்கும் என்றும் இந்தத் துகள்தான் டெமாக்ரிடஸ் சொன்ன அணு என்றும் சொன்னார். அணுக்கள் இருப்பது வெறும் கற்பனையாயிராது, உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று மற்றவர்களும் நினைக்கலானார்கள். இருந்தாலும் அணுக்களைக் கண்ணால் பார்த்தால்தான் நம்பலாம். அவற்றைப் பார்க்க முடியுமா என்று சிலர் கேட்டார்கள். கீதையில் அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணன் விசுவரூபம் காட்டினார். ஆனால் அவன் அதைப் பார்ப்பதற்கு வேறு கண்களைக் கொடுத்தார் என்று சொல்லியிருப்பதுபோல விஞ்ஞானிகளும் நம்முடைய சாதாரணக் கண்களைக் கொண்டு அணுவைப் பார்க்க முடியாது; அதற்கு வேறு துணைக் கருவிகள் வேண்டும் என்றார்கள்.

நாம் சுவாசிக்கும் காற்றில் கோடிக் கணக்கான தூசி துகள்கள் இருக்கின்றன. அவற்றை நாம் பார்ப்பதில்லை. ஆனால் அவற்றைப் பார்க்க முடியும். அறையிலுள்ள ஜன்னல் கதவு எல்லாவற்றையும் மூடிவிட்டு ஏதாவது ஒரு சிறு சந்தின் வழியாக உள்ளே நுழையும் சூரியவொளியைக் கவனிக்கவும். ஒளியின் பாதையில் கோடிக்கணக்கான சிறிய துகள்கள் அங்குமிங்கும் அலைவதைப் பார்க்கலாம். இவற்றின்மீது விழும் பிரகாசமான சூரிய வெளிச்சத்தை இச்சிறு துகள்கள் சிதறியடிப்பதால்தான் நமக்கு அவை புலனாகின்றன.

ஒளி என்பது ஒருவித அலை இயக்கம் என்று அறியப்பட்டது. அலைகளில் சிற்றலைகளும் உண்டு; பெரிய அலைகளும் உண்டு. அதாவது நீளம் குறைவான அலைகளும் உண்டு; நீளம் அதிகமான அலைகளும் உண்டு. அப்படியே ஒளி அலைகளிலும் உண்டு. ஒளி அலைகளின் நீளங்கள் வேற்றுமைப் படுவதே பல நிறமான ஒளிகள் உண்டாவதற்குக் காரணம் என்று விஞ்ஞானிகள் அறிந்தார்கள். சூரியனது ஒளியில் ஊதா, அவுரி, நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு என்று ஏழு நிற ஒளிகள் இருக்கின்றன என்று அனைவருக்கும் தெரியும். இவற்றில் சிவப்பு ஒளி அலைக்கு நீளம் அதிகம். ஊதா ஒளி அலைக்கு நீளம் குறைவு. ஒரு பொருளை நாம் பார்க்க வேண்டுமானால் அதன்மீது விழுந்து சிதறிய ஒளியினால்தான் அதைப் பார்க்க முடியும். அதன்மீது விழும் ஒளி அலையின் நீளம் பொருளின் அளவைவிடப் பெரியதானால் நமக்குப் பொருள் இருப்பது கண்ணுக்குத் தெரியாது.

தூசி துகள்கள் எல்லாம் சூரிய வொளியில் உள்ள பலநிற ஒளி அலைகளின் நீளங்களைவிடப் பெரியவை. எனவே அவற்றை நாம் பார்க்க முடிகிறது. காற்றின் அணுக்கள் இவ்வொளி அலைகளைவிட மிகச் சிறியவை. ஆகையால் நாம் அவற்றைப் பார்க்க முடிகிறதில்லை. நாம் கண்ணால் பார்க்க முடியும் ஒளியில் மிகக் குறைந்த அலை நீளம் கொண்டவை ஊதா ஒளி அலைகள்தான். ஊதா ஒளி அலைகளைவிட மிகக் குறைந்த ஒளி அலைகளும் உண்டு. அவை இருப்பதைத் தக்க 'போட்டோ' தட்டுகளைக் கொண்டு படம் பிடித்துக் காட்டலாம். அணுக்களைக் கண்ணால் பார்க்க முடியாவிட்டாலும் அவற்றின் மீது விழுந்து சிதறிய மிகக் குறைந்த அலை நீளமுள்ள ஒளியினால் விளைந்த 'போட்டோ' படங்களைக் கொண்டு அணுக்கள் இருப்பதை ரூபிக்கலாம்.

இது இப்படியிருக்க: தாம்ஸன், ரூதர்போர்டு என்று இரண்டு விஞ்ஞானிகள் தோன்றினார்கள். அணுக்களைவிடச் சிறிய துகள்கள் இருப்பதை இவர்கள் காட்டினார்கள்.

தாம்ஸன் மின்சாரத்தைக் காற்றின் மூலம் செலுத்திச் சோதனைகள் நடத்தி வரும்போது ஒரு விநோத சம்பவத்தைக் கண்டார். உலோகத்தைப்போலக் காற்று மின்சாரத்தைச் சுலபமாகக் கடத்திச் செல்லாது. காற்றில் மின்சாரம் பாய்வதற்கு அதன் இறுக்கம் (Pressure) மிகக் குறைவாக இருக்கவேண்டும். ஒரு குழாயிலுள்ள காற்றின் இறுக்கத்தைக் குறைத்துக்கொண்டு அதனுள் மின்சாரத்தைச் செலுத்தினார். மின்சாரம் புகுந்து வெளிவரும்

## அணுகுண்டைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை

# பூதம் கிளம்பிற்று!




இடத்திலிருந்து ரயில் வண்டியில் உள்ள 'ஸர்ச் லைட்'டிலிருந்து வெளிப்படும் கிரணக்கற்றை போல ஒரு கிரணக்கற்றை வெளிப்படுவதைப் பார்த்துத் திகைத்துப் போனார். இக் கிரணக் கற்றையைச் சோதித்துப் பார்த்ததில் அதில் மிகச் சிறிய துகள்கள் இருப்பது தெரிய வந்தது. இவை எல்லாம் அணுக்களைக் காட்டிலும் பல மடங்கு சிறியதாக இருப்பதை உணர்ந்தார். அணுமீது ஒருவித மின்சாரமும் இல்லாமலிருக்க இப் புதிய துகளின் மீது குறை மின்சாரம் (negative electricity) இருப்பதைப் பார்த்தார். இத் துகள்களுக்கு மின்னுருக்கள் (Electrons) என்று பெயரிட்டார். இவை எல்லா அணுக்களிலும் இருப்பது தெரியவந்தது.

இதே சமயத்தில் பெக்குரல் என்ற மற்றொரு விஞ்ஞானி வேறொரு சம்பவத்தைக் கண்டார். 'யுரேனியம்' என்ற ஓர் உலோகம் உண்டு. இது ஒரு விதத் தூண்டுதலும் இல்லாமலேயே ஆற்றல் வாய்ந்த கிரணங்கள் வெளியிடுவதைப் பார்த்தார். மற்ற விஞ்ஞானிகளும் சோதனைகள் செய்து பார்த்தபோது வேறு பொருள்களுக்கும் இப்பண்பு இருப்பது தெரிய வந்தது. இவற்றில் ஒன்றுதான் 'ரேடியம்' என்பது. அதிக வீரியம் வாய்ந்த கிரணங்கள் இதிலிருந்துதான் வெளிப்படுகின்றன. இக்கிரணங்களைப் பற்றிய சோதனைகளை முதலில் செய்தவர் ரூதர்போர்டு என்பவர். இவற்றில் மூன்று வகை இருப்பதை இவர் கண்டு பிடித்தார். முதல் வகைக்கு ஆல்பா-கிரணங்கள் என்றும், இரண்டாவது வகைக்கு பீடா-கிரணங்கள் என்றும், மூன்றாவது வகைக்கு காமா-கிரணங்கள் என்றும் பெயரிட்டார். ஆல்பா கிரணங்கள் மற்றப் பொருள்களின் அணுக்களினுள்ளே ஊடுருவிச் செல்லக் கூடுவதை அறிந்து அவற்றைக் கொண்டு சோதனைகள் செய்து அணு அமைப்பைப் பற்றிய விவரங்களைச் சேகரித்தார்.

அணு என்பது கெட்டியான துகள் அன்று. அதனுள் காலியிடம் நிறைய உள்ளது. அதில் குறை மின்சாரத்தைக் கொண்ட மின்னுருக்களும், மிகை மின்சாரத்தைக் கொண்ட துகள்களும் இருக்கின்றன. இவற்றில் மிகை மின்சாரத்தைக் கொண்ட பகுதிக்குத்தான் மின்னுருக்களைவிட நிறை அதிகம். மிகை மின்சாரப் பகுதியானது அணுக்கரு (nucleus) என்று சொல்லக்கூடிய அளவில் மிகச் சுருங்கி இருக்கிறது. அணுக்கருவில் ஏராளமாகச் சக்தி

ஆர்.கே. விசுவநாதன், எம்.

கட்டுண்டு இருக்கிறது. அணுக்கருவைப் பிளந்து இச்சக்தியை வெளிப்படுத்தக் கூடும் என்று அணுவின் சிற்பத்தைப் பற்றி ஓர் ஊகத்தை வெளியிட்டார்.

உடனே விஞ்ஞானிகள் அணுக் கருக்களைச் சிதைக்கச் சோதனைகள் செய்யத் தொடங்கினார்கள். அணுவைப் பிளக்க ஆல்பா கிரணங்களைக் காட்டிலும் அதிகமான சக்தி வாய்ந்த ஆயுதங்களைக் கண்டு பிடித்தார்கள். இவற்றில் ஒன்று ஸைக்ளோட்ரான் (cyclotron) என்னும் கருவி. கவண் கயிற்றில் கல்லை வைத்துச் சுற்றி விட்டால் அது மிக வேகமாய் எறியப்படுகிற முறையை ஒட்டி இக்கருவி வேலை செய்கிறது. அணுவைப் பிளக்க மற்றொரு பிரங்கியையும் கண்டு பிடித்தார் சாட்விக் என்னும் விஞ்ஞானி. இப் பிரங்கியும் ஒரு சிறிய துகள் தான். இத் துகளுக்கு அலியணு (Neutron) என்று பெயர். இதன் மீது ஒருவகை மின்சாரமும் இல்லாததினால் இதற்கு இப்பெயர் தரப்பட்டது. இதுவும் அணுக்கருவிலிருந்துதான் பெறப்பட்டது.

ஜோலியோ என்பவர் பிரான்ஸிலும், பெர்மி என்பவர் இதாலியிலும் அலியணுக்களைக் கொண்டு யுரேனிய அணுக்களைச் சிதைத்து அவற்றைக் கதிரியக்கம் அதிகமுள்ள அணுக்களாக மாற்ற முடியுமா என்று பார்த்தார்கள். சோதனைகள் பலித்தன. பெர்மி என்பவர் யுரேனிய அணுக்கள் சிதைந்து வரும்போது ஒரு புது தாதுப் பொருள் கிடைப்பதை அறிந்து அதற்குப் பெயரிட வேண்டிய நிமித்தம் முஸோலினியிடம் சென்றாராம். "முஸோலினியம்" என்று இப் புது தாதுவுக்குப் பெயரிட அநுமதி கொடுக்க வேண்டும் என்று அவரைக் கேட்டாராம். இப் புதிய தாதுப் பொருளின் குணங்கள் என்ன என்று இவ் விஞ்ஞானியை அவர் கேட்டாராம். கதிரியக்கம் வாய்ந்திருப்பதால் இப் பொருள் நிலைத்திராது, சீக்கிரத்தில் வேறு பொருளாக மாறி விடும் என்று இவர் சொன்னபோது, நிலைத்திராத பொருளுக்குத் தம் பெயரை வைக்கக் கூடாது என்று முஸோலினி சொல்லி அனுப்பி விட்டாராம்!

இவர்கள் செய்த சோதனைகளை மேற் கொண்டு செய்தவர்களில் முக்கியமாக இரண்டு விஞ்ஞானிகள், ஓட்டோ ஹான், ஸ்ட்ராஸ்மன் என்பவர்கள், சில யுரேனிய அணுக்களின் சிதைவினால் ஏராளமான சக்தியைப் பெறலாம் என்று காட்டினார்கள். எவ்வித யுரேனிய அணுக்கள் சிதையும்போது இச் சம்பவம் ஏற்படுகிறது என்று ஆராய்ந்து பார்க்கும் போது யுரேனியத்தில் அணு நிறை (Atomic weight) 238 உள்ள அணுக்களும், அணு நிறை 235 உள்ள அணுக்களும், அணு நிறை 234 உள்ள அணுக்களும் கலந்து இருப்பது தெரிய வந்தது. இவற்றில் அரிதாய்க் கிடைக்கும் அணு நிறை 235 உள்ள அணுக்கள் கொண்ட யுரேனியம்தான் சிதைவுக்கு ஏற்றவை என்றும் அறிந்தார்கள்.

பிரிஷ், பீயல்ஸ் என்ற விஞ்ஞானிகள் அணு நிறை 235 கொண்ட அணுக்களுள்ள யுரேனியத்தைப் பிரித்தெடுத்துச் சிறந்த ஆயுதங்களைச் செய்யலாம் என்று கூறினார்கள். உடனே இவ்வகை யுரேனியத்தைப் பெருத்த அளவில் தயார் செய்ய முனைந்தார்கள். அமெரிக்காவில்தான் இது சம்பந்தமான சோதனைகள் நடந்தன. இப் பொருளைக் காட்டிலும் அதிகமாகக் கிடைக்கக் கூடியதும், இவ் வேலைக்கு இதைப் போலச் சிறந்ததுமாயுள்ள மற்றொரு புதுப் பொருளையும் கண்டு பிடித்தார்கள். இதற்குப் 'புளுடோனியம்' என்று பெயர். இவ்விரண்டு பொருள்களும் அதிகமாகத் தயாரிக்க வழிகளைக் கண்டு பிடித்ததுதான் தாமதம், உடனே அணு வெடிகுண்டு தோன்றிற்று. அதன் பயனாக இரண்டாவது உலக யுத்தமும் முடிந்தது. மின்சார யுகம் போய் அணு யுகம் பிறந்தது. பாற் கடலைக் கடைந்த போது முதலில் விஷமும் பின்புதான் அமிருதமும் கிடைத்ததாக நம் முன்னோர்கள் சொன்னார்கள். அணு சக்தியின் விஷத்தை நாம் பார்த்து விட்டோம்; அமிருதத்தை இனிப் பார்க்கப் போகிறோம்.

* * *



தார்கள் திருக்குலத்தாரைக் கொடுமையாக நடத்துவதைக் கண்டு கண்ணீர் விடுவார். அவர்களுக்குப் பரிந்து பேசுவார். அதனால் வைதிக சாபமும் வரும். 'பிராமணப் பறையன்' என்ற வசவும் கிடைக்கும்.

* * *

ஒரு நாள் ஒரு செல்வர் திருக்குலத்தாரைக் கண்டபடி வைது மிரட்டி; அடிப்பதைக் கண்டு பாரதியார் அழுது விட்டார். "ஏன், ஸ்வாமி! அவர்களும் நம்மைப் போல ஜீவர்கள்தானே? ஏன் இந்தப் பாவம் செய்கிறீர்கள்? உங்களுக்குக் கருணை இல்லையா?" என்று பரிந்து பேசிவிட்டு வீட்டிற்கு வந்தார்.

அங்கே அன்னுவையர், சிவசாமி ஐயர், சிதம்பரம் விருபாக்ஷி தீக்ஷிதர் ஆகிய மூவரும் வேதாந்த விசாரணை செய்து கொண்டிருந்தனர். "இறைவன் ஒருவனே; எல்லா உடல்களிலும் அவனே இருக்கிறான்!" என்று தீக்ஷிதர் விளக்கியபோது பாரதியார், "அது சரி ஐயா, அதோ அந்தப் பண்ணை ஆட்கள் உள்ளத்திலும் அதே நடராஜன்தானே நர்த்தனம் செய்கிறான்? அவர்களை நம் மிராசுதார் புளியம் மிளாறினால் விளாசுகிறாரே? ஐயோ, என்ன கொடுமை!" என்று கண்ணீர் விட்டார்.

தீக்ஷிதர், "நேற்று சிதம்பரம் சபாநாதர் முன்னே ஒரு துறவி நந்தனார் சரித்திரம் பண்ணினார். அவரும் இப்படியே விசனித்தார். நந்தன் 'ஆனந்தன்!' என்றார். அப்படி ஒரு நந்தனார் இருந்தால் இன்று சேரி அமுத வாரியாகும்!" என்றார்.

"நானே நந்தன்; நந்தன் சரித்திரம் ஆனந்தம்!" என்றார் பாரதியார்.

தீக்ஷிதர் பெரிய புராணக் கதையுடன் அந்தத் துறவி சொன்ன நந்தன் சரித்திரத்தையும் சேர்த்து ஆவேசமாகச் சொல்லி, "அப்படிப்பட்ட நந்தன் இருந்தால் பறையன் ஏது?" என்றார்.

பாரதியாருக்கும் ஆவேசம் வந்து விட்டது. சட்டென்று எழுந்து தம் அறைக்குள் சென்று ஏதோ எழுதினார். ஒரு மணி நேரத்துக்குப் பிறகு தாண்டவமாடிக் கொண்டு வந்தார். "**பழன மருங்கிலேயும்**" என்ற கொண்டிச் சிந்தில் நந்தனார் சரித்திரம் பாடினார்.

அன்னுவையர், "அப்பனே, நீயே வரகவி! நீயே பாரதி! நான் புத்தகம் புத்தகமாக உருத் தள்ளியும் ஒரு வரி எழுதப் பத்துக் காகிதம் கிழிக்கிறேன்; நீ உடனே பாடிவிட்டாயே! அப்பனே, பாடு! நந்தன் சரித்திரத்தை விரிவாகப் பாடு!" என்று ஊக்கினார்.

ஆனால் சில வைதிகர்களுக்குப் பாரதியாரின் சமரச மனப்பான்மை பிடிக்கவில்லை. ஜாடையாக, "அடிமைச் சோறு தின்கிற பயல்! தரித்திரப் பயல்! பரதேசி! இவனுக்குக் கொழுப்பு இல்லையா? கலி முத்திப் போச்சு!" என்றெல்லாம் பேசி இடித்துக் காட்டினர்.

ஒரு நாள் திடீரென்று பாரதியாரைக் காண வில்லை. அண்ணாவையர் ஒரு வாரம் தேடினார்; அகப் படவில்லை. மணி மிழந்த நாகம்போல் ஐயர் அமைதி யிழந்து தவித்தார். ஒரு நாள் வேலைக்காரன் ஒருவன் "திருப்புன்கூர் சிவலோகநாதர் சந்நிதியில் ஒரு பரதேசி ஏதோ பாடிக் கொண்டும் எழுதிக் கொண்டும் இருக் கிறார்!" என்றான்.

துறவிகளை விரும்பும் ஐயர் உடனே பஜனை கோஷ்டியுடன் தமது கையால் செய்த வாசனைச் சரக்கு களையும் எடுத்துக்கொண்டு சிவலோகநாதர் சந்நிதிக்குச் சென்றார். அங்கே தூண் மறைவில் ஒரு பரதேசி ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். பார்த்தார் ஐயர். "அட பாரதி, இங்கேயா இருக்கிறாய்? என்னிடம் சொல்லாமலே வந்துவிட்டாயே!" என்று விசனித்தார்.

"அண்ணா! சிவன் அழைக்க வந்தேன். நான் நந்தனாய் விட்டேன். நந்தன் சரித்திரம் இதோ எழுதி யாகிறது!" என்றார் பாரதியார்.

சில கீர்த்தனங்களை அங்கேயே சந்நிதிமுன் பாடி பஜனை நடத்தினார். "ஊருக்கு வந்து பாக்கியையும் எழுது!" என்று வற்புறுத்தினார் ஐயர்.

"அண்ணா! இத்தனை நாள் என்னைத் தாங்கினது போதாதா? இன்னும் உங்களுக்குப் பாரமாக அடிமைச் சோறு தின்னலாமா? ஏதோ நந்தனுக்கு வழிவிட்ட சிவன் எனக்கும் வழி காட்டினான். அவன் சித்தப்படி ஸ்தல யாத்திரை செய்து கொண்டு, நந்தனார் சரித்திரக் கீர்த்தனம் பாடிக்கொண்டு ஜன்மத்தைக் கடைத்தேற்றுகிறேன்!" என்றார் பாரதியார்.

ஐயர் எப்படியோ ஆளை வசப்படுத்தி ஊருக்கு அழைத்து வந்து உபசாரங்கள் செய்தார்.

பாரதியார் ஆறு மாதத்தில் நந்தனார் சரித்திரத் தைப் பாடி முடித்து, அண்ணாவையர் கோஷ்டிமுன் முதலில் கதை செய்தார். பிறகு, சேகிழார் திருக்குலத் தாருக்குப் பாடிக் காட்டினார். சுற்றுப்புற கிராமங் களிலும் பாடிப் புகழ் பெற்றார். பல ஊர்களில் அவரை அழைத்தனர். மாயவரத்தில் வேதநாயகம் பிள்ளை நந்தனார் சரித்திரம் கேட்டுவிட்டுப் பாரதி யாரை மிகவும் போற்றிப் பலருக்கும் சிபார்சு செய் தார். காரைக்கால் சீஷையா அதை முதன் முதல் அச்சிட்டார். தஞ்சாவூரில் கிருஷ்ண பாகவதர் பாரதி யாரை அழைத்து அவரிடம் நந்தன் சரித்திரத்தைக் கீர்த்தனைகளைக் கற்றுக்கொண்டு கதை செய்தார். பாரதியார் இராமேச்வரம் வரையில் சென்று நந்தன் சரித்திரம் நடத்திச் சேர்த்த தொகையை யெல்லாம் அண்ணாவையரிடமே கொடுத்து வைத்தார். அண்ணா வையர் திடீரென்று மாரடைப்பினால் இறந்தார். பிறகு ஆனதாண்டவபுரம் பாரதியாருக்கு எதிரியாகிவிட்டது. அவருடைய பணத்திற்கும் ஆபத்து வந்தது.

"நந்தன் சரித்திரத்தைக் கேளாதே
வந்த தரித்திரம் மீளாதே!
தந்தனமாய்ச் சொல்வான் தடிப்பிரமச்சாரி
தையலர் மேல் மோகம் காமவிகாரி!"

என்றெல்லாம் வைதிகர்கள் பாட்டுக் கட்டிக் கிந்தனார் சரித்திரம் பாடத் தொடங்கினார்கள். எப்படியோ பஞ் சாயத்து வைத்துப் பணத்தை வாங்கிக் கொண்டு பாரதி யார் மாயவரத்துக்குப் போனார். வேதநாயகம் பிள்ளை யின் யோசனைப்படி பணத்தைப் பாங்கில் போட்டார். பிறகு சிதம்பரம் கோயில் தேசாந்திரிக் கட்டளைக்காகப் பெரும் பகுதி கொடுத்துச் சபாநாதர் திருவருளைப் பெற்று, மயூர க்ஷேத்திரத்திலேயே கோவிலுக் கருகில் ஒரு வீட்டில் வசித்தார். மிச்சமிருந்த பணத்தையும் கோவிலுக்கே தந்தார். எவர் உறவுமில்லாமல் ஏகாங்கி யாகச் சிவபக்தராய் வாழ்ந்தார்.

* * *

ஒருநாள் வேதநாயகம் பிள்ளை வீட்டில் தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதர் நந்தன் சரித்திரம் செய்தார். அதைக் கேட்ட பாரதியார், "அப்பா, கிருஷ்ணா! என் புகழ் மலையேறிப் போய் விட்டதென்று நினைத் தேன். நீ நம்பிக்கை தந்தாய். இப்படியே சிவநாமத் தைப் பாடி நந்தன் சரித்திரம் செய்து கொண்டு க்ஷேமமா யிரு!" என்று ஆசீர்வதித்தார்.

கடைசிக் காலத்தில் அவர் காரைக்கால் அம்மை யார் சரித்திரம் பாடினார். காரைக்காலிலேயே அதை அரங்கேற்றினார். மகா வித்வான் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை "சிவலோக நாதனைக் கண்டு" என்ற பாட்டைக் கேட்டு, பாரதியாருக்கு ஒரு சாற்றுக் கவி கொடுத்தார். அதுதான் கடைசி சன்மானம்.

தில்லை வெளியிலே கலந்துவிட்டால் அவர்
திரும்பியும் வருவாரோ?
என்னைக் கண்டபேர் இனிப்பிறவார் என்று
இயம்புவ தறியாரோ?

என்று ஒரு நாள் பாரதியார் பாடிக் கொண்டிருந்த போது, அவருக்கு மார்பைத் திடீரென்று அடைத்தது. "சிவசிவா!" என்றார். உயிர்க் கிளி உடனே உடலுக்கு வெளியே பறந்து சென்று தில்லை வெளியிற் கலந்து போயிற்று.

* * *

இன்று மகாத்மா காந்தி ஹரிஜன ரக்ஷகராக விளங்குகிறார். அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னே கோபாலகிருஷ்ண பாரதியாரின் அன்புள்ளம் ஹரிஜனங் களுக்காக உருகியது. "வருகலாமோ" என்ற கீர்த் தனம் கேட்டு மகான் தியாகய்யரே உருகினார்.

நமது நாட்டில் தோன்றிய வரகவி பாரதியார்; கருணைக் கடல் பாரதியார்; பரம பாகவதோத்தமர் பாரதியார்; பாரதியார் நாமம் வாழ்க.



# சின்ன கோபாலா

அஸ்தமன சூரியனின் சாய்ந்த கிரணங்கள் பட்டுச் சாலை மரங்களின் நிழல்கள் நீள நீளமாய்ப் படிந்தன. பட்சி ஜாலங்கள் தத்தம் கூடுகளை நோக்கிப் பறந்தன. சின்ன கோபாலனும் தன் தோழன் கஸ்தூரியுடன் விளையாடிவிட்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான்.

சாலை ஓரத்தில் குவியல் குவியலாகக் கொட்டியிருந்த கோலிக் கற்கள் அவன் கவனத்தைக் கவர்ந்தன. அவற்றிலிருந்து வழு வழுப்பான கற்களாக இரண்டைப் பொறுக்கி எடுத்துக் கொண்டான். வீட்டுக்குப் போகும் வழியில்தான் அவனுடைய பள்ளிக் கூடம் இருந்தது. அந்த இரண்டு கற்களையும் தூக்கிப் போட்டுப் பிடித்தவாறே மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தான்.

பள்ளிக் கூடத்துப் பக்கமாய் வரும் போது காம்பவுண்டு சுவரில் ஏதோ எழுதியிருந்தது. கோபாலன் சட்டென்று நின்று அது என்னவென்று கவனித்தான்.

"சின்ன கோபாலா, வா!"

என்று குண்டு குண்டாக எழுதியிருந்தது. தன்னுடைய பெயரை யாரோ எழுதியிருப்பதைக் கண்டதும் கோபாலனுக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. அதை யார் எழுதியிருப்பார்கள்? எழுத்தைப் பார்த்தால் கஸ்தூரியினுடைய எழுத்தைப்போல் இருந்தது. அவன்தான் இப்படி குண்டு குண்டாகச் சாய்த்து எழுதுவான். ஆனால் கஸ்தூரி தான் இத்தனை நேரமும் தன்னுடன் விளையாடிக் கொண்டிருந்தானே? ஆகையால் அவன் எழுதியிருக்க முடியாது. பின் யார் எழுதியிருப்பார்கள்? கோபாலன் சுற்றும் ஒரு தடவை பார்த்தான். பின்னர், சுவரண்டை நெருங்கிச் சென்று எழுத்துக்களை உற்று நோக்கினான்.

சாக்குக் கட்டியால் எழுதப்பட்டிருந்த அந்த எழுத்துக்களைப் பார்க்கப் பார்க்க கோபாலனுடைய ஆச்சரியம் அளவு கடந்ததாய்ப் போயிற்று.

கோபாலனுடைய வீட்டுவாசல் முன்பாக அவனுடைய தங்கையும் இன்னும் சில சிறுமிகளும் 'ஸ்கிப்பிங்' விளையாடிக் கொண்டிருந்தார்கள். தங்கையை அழைத்து, "சீதா! பள்ளிக் கூடத்துச் சுவரில் என்னை வரச் சொல்லி யார் எழுதினது?" என்று கேட்டான்.

விளையாட்டு மும்முரத்தில் இருந்த சீதா, "அது யாரோ? எனக்குத் தெரியாது போடா!" என்று அலட்சியமாகப் பதில் கூறிவிட்டு 'ஸ்கிப்பிங்'கைத் தொடர்ந்து நடத்தினாள். சுற்றியிருந்த சிறுமிகளையும் கேட்டுப் பார்த்தான். ஒரு குழந்தை அழுதுகொண்டே பதில் சொன்னாள். இன்னொரு குழந்தை பதில் கூடச் சொல்லாமல் ஓடினாள்.

**சாவி**

இத்தனை அக்கறையாகத் தன்னை வரச் சொல்லி எழுதியிருப்பது யார்? எங்கே வரச் சொல்லி எழுதியிருப்பார்கள் என்று தெரிந்துகொள்ள அவன் மனம் துடியாய்த் துடித்தது. சின்ன கோபாலா என்று தன்னுடைய செல்லப் பெயரை எழுதியிருப்பதால் யாரோ ரொம்பவும் தெரிந்த பேர்வழியாய்த்தான் இருக்க வேண்டும்.

ஒருவேளை எதிர் வீட்டுச் சுந்தரமாயிருக்குமோ என்று ஒரு சந்தேகம் வந்தது அவனுக்கு. ஆனால் சுந்தரம் தான் அவன் அப்பாவுடன் காலையிலேயே ஊருக்குப் போய் விட்டானே?

எதற்கும் கஸ்தூரியை விசாரித்து வரலாம் என்று எண்ணியவனாய்க் கஸ்தூரியின் வீட்டுக்குச் சென்றான்.

கஸ்தூரி, "நான் எழுதவில்லை!" என்றதும் கோபாலன் மிகுந்த மனச் சோர்வுடன் பேசாமல் திரும்பினான்.

வீட்டுக்குத் திரும்பி வரும்போது அவனை அறியாமல் அவன் கண்கள் அந்தக் காம்பவுண்டு சுவரிலிருந்த எழுத்துக்களை நோக்கின.

"சின்ன கோபாலா, வா!"

எதிரே சற்று ஓரத்தில் இருந்த அரசமரத்தடியில் போய் நின்று சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியில் ஒன்றும் புரியாமல் வீட்டுக்கே வந்து சேர்ந்தான்.

அம்மா அடுப்பங்கரையில் வேலையாயிருந்தாள். கோபாலன் அம்மாவிடம் ஓடிப்போய், "அம்மா! என்னை எந்தப் பையனாவது தேடிக் கொண்டு வந்தானா?" என்று பரபரப்பாய்க் கேட்டான். அவன் அம்மாவுக்கு அதுதானா கவலை? "யாரும் வரவில்லை" என்றாள் எங்கோ ஞாபகமாக.

கோபாலன் காம்பவுண்டு சுவரில் தன் பேர் எழுதியிருக்கும் விஷயத்தை அம்மாவிடம் கூறினான்.

"ஒருவேளை எதிர் வீட்டுச் சுந்தரம் எழுதியிருப்பான்" என்றாள் அவன் தாயார்.

"இருக்காது, அம்மா! அவன் தான் காலையிலேயே அவனுடைய அப்பாவுடன் ஊருக்குப் போய் விட்டானே?" என்றான் கோபாலன்.

"காலையில் ஊருக்குப் போகு முன்பே எழுதியிருப்பான்" என்று இன்னொரு சந்தேகத்தைக் கிளப்பினாள் தாயார்.

"இல்லே அம்மா; காலையில் நான் அந்தப் பக்கம் போயிருந்த போது அந்த எழுத்து அங்கே இல்லையே!" என்றான் கோபாலன்.

தாயார் "அது என்னவோ போ; போய்ச் சாப்பிட்டு விட்டுப் படித்துத் தூங்கு; காலைக்குத் தன்னால் தெரியும்" என்றாள் சமாதானமாக.

இருந்தாலும் கோபாலனுக்கு மனம் சமாதானமடையவில்லை. அந்த மர்மத்தை உடனே கண்டு பிடிக்க வேண்டும் போலிருந்தது. அம்மா அதைக்கூட

# வா!

போய்ப் பார்த்தான். நல்லவேளை யாக அப்பா இன்னும் ஆபீஸி லிருந்து வரவில்லை. எனவே, அங் கிருந்த டெலிபோனில் தனக்குத் தெரிந்த சிநேகிதர்களை எல்லாம் கூப்பிட்டுக் கேட்டான். எல்லோ ரும் இல்லை என்றே பதில் சொன் னார்கள். கோபாலன் குழாயடிக் குச் சென்று முகத்தைக் கழுவிக் கொண்டு வாசற்படியில் வந்து உட் கார்ந்தான். அங்கே ஏற்கெனவே அவனுடைய தாயார் அவனுடைய அப்பாவின் வரவை எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தாள்.

கோபாலன் மெதுவாக அம்மா வைக் கேள்விகேட்க ஆரம்பித்தான்.

"அம்மா! கடவுளுக்கு எழுதத் தெரியுமோ?"

"அவர் இந்த மாதிரியெல்லாம் எழுத மாட்டாரடா, கண்ணு!"

"பின் எப்படி எழுதுவார் அம்மா!"

"எல்லோருடைய தலையிலேயும் எழுதி வைப்பார்."

"எல்லோருடைய தலையிலும் என் னத்தைக் கொண்டு எழுதுவார்?"

"அதெல்லாம் இப்போது உனக் குச் சொன்னாலும் தெரியாது."

"அம்மா! கடவுளிடம் சாக்பீஸ் இருக்குமா?"

"கிடையாதுடா கண்ணே, ஆனால் அவர்தான் சாக்பீஸையெல் லாம் படைத்தவர். பூலோகம் ஆகாசம் எல்லாம் அவருடைய சிருஷ்டிதான்" என்றாள் தாயார்.

இதற்குள் அவனுடைய அப்பா வும் ஆபீஸிலிருந்து வந்துவிட்டார். அப்பா ரொம்பக் கோபக்காரர் என்பது கோபாலனுக்குத் தெரியு மாகையால் அவன் இது விஷயமாக அப்பாவிடம் பேச மூச்சே விட வில்லை. அத்துடன் அன்றைக்கு ஆபீஸிலிருந்து வரும் போதே அவர் 'சிடுசிடு' என்றிருந்தார்.

கோபாலன் சாப்பிட்டுவிட்டுப் படுத் துக் கொண்டான். வெகு நேரம் வரை தூக்கம் வரவில்லை. விழித்த படியே நீண்ட யோசனையில் ஈடுபட் டிருந்தான்.

* * *

ஜன்னல் வழியாகச் சந்திர வெளிச்சம் புகுந்து முதலில் அறைக் குள் படர்ந்தது. பிறகு தரையிலிருந்த வெளிச்சம் சிறிது சிறிதாக நகர்ந்து வந்து சுவர்மீது ஏறி மேலே போயிற்று. கோபாலன் கட்டிலைவிட்டு இறங்கி ஜன்னலருகே சென்று வெளியே எட்டிப் பார்த்தான். வானத் தில் மரங்களுக்கு மேலே வட்ட வடிவ மான சந்திரன் அழகாகப் பிரகாசித் துக்கொண்டிருந்தான். எங்கும் நிசப்தம் நிலவியது. மரங்கள், பட்சிகள் எல்லாம் நித்திரையில் ஆழ்ந்திருந்தன.

கோபாலன் மெதுவாக எழுந்து பூனைபோல் வாசல் பக்கம் நடந்தான். வாசல் கதவை எவ்வளவு மெதுவாகத் திறந்தானோ அதைவிட மெதுவாகச் சாத்திவிட்டு வெளியே போனான். கூழாங்கற்கள் இரண்டும் ஒன்றோ டொன்று உராய்ந்து தாங்கள் சட்டைப் பைக்குள் இருப்பதை கோபாலனுக்கு அறிவித்துக்கொண்டன. கோபாலன் வேகமாக நடந்தான். வானில் நிலா பட்டப் பகல்போல் காய்ந்துகொண் டிருந்தது. சீக்கிரம் பள்ளிக்கூடத்துக் காம்பவுண்டு சுவரை அடைந்தான்.

வெள்ளை வெளேரென்ற சாக்குக் கட்டியால் எழுதியிருந்த எழுத் துக்கள் பால் போன்ற நிலவொளி யிலே பளிச்சென்று மின்னிக்கொண் டிருந்தன. கோபாலனைப் பார்த்து அந்தக் காம்பவுண்டு சுவரே பேசுவது போல் இருந்தது.

"சின்ன கோபாலா, வா!"

கோபாலனுடைய கண்களில் முத்துப் போன்ற இரண்டு நீர்த்துளிகள் தோன்றி மறைந்தன. மறுபடியும் அதை ஒரு தடவை படித்துவிட்டுக் கஸ்தூரி வீட்டை நோக்கி நடந்தான்.

கஸ்தூரி வீடும் கோபாலன் வீட்டைப் போலவே உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. வாசல் அறைப் பக்கம் இருந்த ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தான். கஸ்தூரி நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய அப்பா ஆனந்தமாய்க் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தார்.

கஸ்தூரியைப் பலமாக இரைந்து கூப்பிட்டு அந்த அழகான நிலா வெளிச் சத்தில் அவளுடன் விளையாட வேண் டும்போல் இருந்தது. ஆனால் கத்து வதற்கு ஏனோ தைரியம் வரவில்லை. பேசாமல் திரும்பிப் பள்ளிக்கூடத்து வாசலுக்கே வந்து சேர்ந்தான். அதற்குமேல் என்ன செய்வதென்று அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. எதிரிலிருந்த தாமரைக் குட்டையின் அருகில் சென்று வேடிக்கை பார்த் துக்கொண்டு நின்றான். ஆகா! அந்தச் சின்னஞ் சிறு குட்டை ஜலம் சலனமற்றுத் தெளிவாகக் காணப்பட் டது. வட்ட வடிவமான வானத்துச் சந்திரன் அந்தக் குட்டையிலே பிரதிபலித்தான். ஜலத்தின் மீதிருந்த தாமரை இலைமீது தவளை ஒன்று உட்கார்ந்திருந்தது. மண்டூகம்! அதற் கென்ன தெரியும், அந்த நிலவின் அற்புத அழகை அனுபவிக்க?

மேற்படி தவளை 'கடக்' கென்று ஒரு தடவை சப்தப் படுத்தி நிசப் தத்தைக் கலைத்தது. நிலா விரித்த குளிர்ந்த இர வில் அந்தக் குட்டையின் சௌந்தரி யத்தை அனு பவித்துக் கொண்டிருந்த கோபாலனுக் குத் தவளையின் குரல் பெரும்





கோபத்தை உண்டாக்கியது. எனவே, அவனுக்கு அந்தத் தவளையை என்னவோ செய்ய வேண்டும் போல் இருந்தது. கால் சட்டைப் பைக்குள் கையை விட்டான். கையில் கூழாங் கற்கள் தட்டுப்பட்டன. அவற்றில் ஒரு கல்லை எடுத்துத் தவளையின்மீது போட்டான். 'டடக்' கென்று கத்திய தவளை 'சடக்'கென்று பாய்ந்து சென்றது.

கூழாங்கல் விழுந்த வேகத்தில் சலனமற்றிருந்த ஜலத்தின் மத்தியிலிருந்து சிறு சிறு வட்ட அலைகள் கிளம்பிச் சுழித்துக் கொண்டு பெரிதாகப் பரிணமித்து மண்டலம் போட்டன. சற்று நேரம் இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு அரசமரத்தடிப் பக்கம் வந்தான் கோபாலன். மறுபடியும் அந்த எழுத்தைப் பார்த்தான்.

"சின்ன கோபாலா, வா!"

கோபாலனுடைய முகம் பரிதாபமாய்க் காணப்பட்டது. அந்த நிசப்தமான இரவிலே 'சின்ன கோபாலா, வா!' என்று அடிக்கடி யாரோ தன்னை அழைப்பதைப் போல் ஒரு பிரமை தோன்றியது அவனுக்கு. கீழே பார்த்தான். காம்பவுண்டு சுவரிலிருந்த முனிசிபாலிடி குழாயிலிருந்து சொட்டுச் சொட்டென்று ஜலம் சொட்டிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும் கோபாலனுக்குத் தன் வீட்டுப் பால்காரனுடைய ஞாபகம் வந்தது. பால்காரன் தினமும் அந்தக் குழாயில்தான் ஜலம் பிடிப்பது வழக்கம். ஐயோ! பொழுது விடிகிற நேரம் ஆகி விட்டதோ? பால்காரன் வந்து விடுவானோ? அவன் வந்து விட்டால் இங்கே தன்னைப் பார்த்ததாக அப்பாவிடம் போய்ச் சொல்லி விடுவானே. ஆகையால் அவன் வருவதற்குள் வீட்டுக்குப் போய்விட வேண்டும் என்று எண்ணினான்.

இந்தச் சமயம் பின்னாலிருந்து "சின்ன கோபாலா!" என்று ஒரு குரல் கேட்டது. கோபாலன் திடுக்கிட்டுத் திரும்பினான். என்ன அதிசயம்! அரச மரத்தடியில் ஒரு தாடிக்காரன் நின்று கொண்டிருந்தான்.

கோபாலன் நடுங்கிக் கொண்டே அவனிடம் சென்று, "நீ யார்?" என்று கேட்டான்.

"நான் உன்னைப் பிடித்துக்கொண்டு போக வந்திருக்கிறேன். உன்னை வரச் சொல்லி நான்தான் சாக்குக் கட்டியால் எழுதி வைத்தேன்."

சின்ன கோபாலனுக்கு விஷயம் பளிச்சென்று புரிந்து விட்டது. அவன் பிள்ளை பிடிக்கும் தாடிக்காரன் என்பதைக் கண நேரத்தில் ஊகித்து விட்டான். உரக்க அழலாமா என்று நினைத்தான். ஆனால், ஏனோ அழுவதற்கு வாய் வரவில்லை.

தாடிக்காரன் கையைக் காட்டித் தன் பின்னோடு வரும்படி சைகை செய்தான். கோபாலனும் பயந்தபடியே அவன் பின்னோடு மந்திர சக்தியால் கட்டுண்டவன் போல் நடந்து சென்றான்.

வெகு தொலைவில் ரயில் ஊதும் சப்தம் கேட்டது. கோபாலன் பின் தொடர தாடிக்காரன் ஸ்டேஷனை நோக்கி நடந்தான்.

ஸ்டேஷனை அடைந்ததும் தாடிக்காரன் கோபாலன் கையைப் பிடித்துக் கொண்டான். ஸ்டேஷனில் கூட்டம் "ஜே ஜே" என்றிருந்தது. ரயில் வந்ததும் அதிலிருந்த கூட்டம் இடித்துப் பிடித்துக் கொண்டு கீழே இறங்கியது.

பிளாட்பாரத்திலிருந்தவர்கள் இறங்குபவர்களைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தார்கள். நாடிக்காரனும் கோபாலனுடன் ஒரு வண்டியில் ஏறினான். அதே வண்டியிலிருந்து ஜரிகை தலைப்பாவுடன் ஒரு ஆசாமி கீழே இறங்கி வந்தார். அவர் கோபாலனுடைய அத்திம்பேர்! மறுநாள் தலை தீபாவளிக்காக அவர் கோபாலன் வீட்டுக்கு வந்துகொண்டிருந்தார். கோபாலனைக் கண்டுவிட்டு அவர், "நீ எங்கேயடா வந்தாய்?" என்று பரம ஆச்சரியத்துடன் வினவினார். கோபாலன் மௌனம் சாதித்தான். அவனுக்குப் பின்னாலிருந்த நாடிக்காரன் பிள்ளை திருடிய கள்ளனைப் போல் பேந்தப் பேந்த விழித்தான்.

நாடிக்காரனைப் பார்த்ததுமே சின்ன கோபாலனுடைய அத்திம்பேருக்கு விஷயம் வெட்டவெளிச்சமாகி விட்டது. உடனே இரைந்து, "பிடியுங்கள், உதையுங்கள், நாடிக்காரன், பிள்ளைத்திருடன்" என்று கத்தினார். பிளாட்பாரத்தில் கூட்டத்துக்கா குறைச்சல்? அவ்வளவு பேரும் நாடிக்காரனைப் பிடித்துக்கொண்டு நையப் புடைத்தார்கள். நாடிக்காரன் முதுகில் அடித்த ஒவ்வொரு அடியும் கோபாலனுக்குத் தன்னுடைய முதுகில் அடிப்பதுபோல் இருந்தது. நாடிக்காரனை இன்னும் அடித்தால் தன்னுடைய முதுகில் வலிப்பானேன் என்று கோபாலன் நினைத்தான்.

"கோபாலா! எழுந்திரு; எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேணும், தீபாவளி அல்லவா?" என்று தூங்கிக் கொண்டிருந்த கோபாலனுடைய முதுகைத் தட்டி எழுப்பிக் கொண்டிருந்தாள் அவனுடைய தாயார். கோபாலன் சட்டென்று கண் விழித்துப் பார்த்தான். அவனுடைய தாயார் எதிரே நின்றுகொண்டிருந்தாள். கோபாலன் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தான். தான் இவ்வளவு நேரமும் கண்டது கனவு என்பதை நினைக்கும் போது அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது; கொஞ்சம் ஏமாற்றமாயுமிருந்தது.

இதற்குள் வாஸ்தவமாகவே அவனுடைய அத்திம்பேர் தலைதீபாவளியை உத்தேசித்து வாசலில் ஜட்கா வண்டியில் வந்து இறங்கினார். கோபாலனுக்காக நிறையப் பட்டாசுக் கட்டுகள் வாங்கி வந்திருந்தார். கோபாலன் அவற்றை யெல்லாம் சுட்டுத் தீர்ப்பதற்கும் பொழுது விடிவதற்கும் சரியாக இருந்தது.

* * *

கோபாலன் காலையில் கடைத் தெருவுக்குப் போயிருந்தான். அங்கே இவனுடைய பழைய தோழன் சந்துருவைக் கண்டான். போன வருஷம் சந்துரு கோபாலனுடைய வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தான். அவன் அப்பாவுக்கு உத்தியோகம் மாற்றலாகி விடவே வெளியூருக்குப் போய்விட்டான். இப்போது தீபாவளிக்கு அவனுடைய மாமா வீட்டுக்கு வந்திருந்தான்.

கோபாலனைக் கண்டதும் சந்துரு குதித்து ஓடி வந்து, "நேற்று நான் உன்னை வந்து வீட்டில் தேடிப் பார்த்தேன், காணோம். பள்ளிக்கூடத்துச் சுவரில் 'சின்ன கோபாலா, வா!' என்று எழுதிவிட்டு வந்திருந்தேனே, பார்த்தாயா?" என்று கேட்டான்.

"அட! நீதானா அது?" என்றான் ஆச்சரியத்துடன், கோபாலன். தனக்காக அடிபட்ட நாடிக்காரனை நினைத்து அவனுக்கு வருத்தம் உண்டாயிற்று. அவனைப் பார்த்து அவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று விரும்பினான். ஆனால் கனவில் கண்ட அந்த நாடிக்காரன் அப்புறம் அகப்படவே இல்லை!



# காதல் கடிதம்

எஸ். வி. எஸ்.

காதலுக்குக் கண்ணில்லை என்கிறார்கள். உண்மை தான்! காதலுக்குக் கண் இருந்தால், கன்னங்கரேல் என்றிருக்கும் கங்குலின்மேல் ஒளிப் பிழம்பான சூரியனுக்குக் காதல் ஏற்படுமா?

ஆமாம்; கதிரவனுக்கு இருளின்மீது அளவுகடந்த காதல்; கங்குலுக்கும் கதிரவன்மேல் காதல்தான்.

ஆனால் அவர்களுடைய காதலுக்கு ஒரு இடையூறு குறுக்கே நின்றது. பெண்ணாய்ப் பிறந்த கங்குலுடன் நாணம் என்பதும் கூடப் பிறந்து விட்டது.

குளிர்ந்த தென்றல் வீசும் காலை வேளையிலே கலை காணக் காதலுடன் கதிரவன் வரும்போது அளவில்லா வெட்கத்துடன் அவள் தலை குனிந்து மறைந்து விடுவாள்.

இப்படி எத்தனை எத்தனையோ நாட்கள்! கதிரவனும் கங்குலும் ஏங்கி ஏங்கித் தவித்த நாட்களை எண்ண முடியாது! எழுதவும் முடியாது!

கடைசியில் கதிரவன் பொறுமை இழந்து ஒரு கடிதம் எழுதினான்; கங்குலுக்குத் தன் உள்ளத்தைத் திறந்து காட்டும் காதல் கடிதம் ஒன்று எழுதினான்.

கங்குல் ஒரு தடவை படித்தாள்; அவள் உள்ளம் விம்மியது! இரண்டாவது தடவை படித்தாள்; அவள் இதயம் இளகியது! இப்படிப் பல பல தடவை படித்தாள்.

தனக்கு வந்த காதல் கடிதத்தை உலகோர் பார்க்கிறார்களே என்பதைக் கூட அவள் உணரவில்லை. "அழகிய பூரண சந்திரன், அழகான அம்புலிமான், தண்ணென்றிருக்கும் வெண்ணிலா" என்றெல்லாம் அவளுக்குச் சூரியனிடமிருந்து வந்த காதல் கடிதத்தை உலகினர் பாராட்டிப் பேசுவது அவள் காதில் விழவேயில்லை.

காத்திருந்து காத்திருந்து அவளுடைய காதலன் கதிரவனுக்கும் போதும் போதும் என்றாகி விட்டது. கடைசியில் பொறுமையிழந்து கீழ்த்திசையில் அவன் தோன்றினான். கதிரவனின் செம்பொன் ரதத்தைக் கண்டாளோ இல்லையோ, எங்கிருந்தோ நாணம் அவளைச் சூழ்ந்து கொண்டது! தலை குனிந்து மெல்ல மெல்ல அவள் நகரத் தொடங்கினாள்.

கைபட்டுக் கைபட்டுக் கசங்கிய கடிதத்தைப் போல் முழுமதியும் ஒரு மூலையில் வெளிறிப் போயிருந்தது. அதைப் பார்த்த கதிரவன் தன் கனவும் காதலும் முறிந்து விட்டதோ என்று பயந்தான். எனினும், "காதலி! என் கடிதத்தைப் பார்த்தாயோ!" என்றான்.

நாணத்தினால் தலை குனிந்தபடி கங்குல் மறுமொழி சொன்னாள். "ஓ, பார்த்தேன்; அதற்கு ஒரு பதிலும் வைத்திருக்கிறேன்!" என்று மெல்லிய குரலில் சொல்லிக் கொண்டே ஒரு ரோஜா மலரைச் சிந்திவிட்டுப் போனாள்.



கதிரவன் அந்த ரோஜா மலரைப் பார்த்தான். அந்த அழகான புஷ்பத்தில் ஒரு கண்ணீர்த்துளி காணப்பட்டது.

"காலைப் பனித் துளி இந்த ரோஜா மலரில் எவ்வளவு அழகாக ஜொலிக்கிறது?" என்று பேசிக்கொண்டார்கள். யார்? உலகத்து மனிதர்கள்தான்!

# நடந்த கதை



விந்தன்

இது நடந்த கதை; நடக்காத கதையல்ல. இந்தக் கதையின் முடிவு வாசகர்களை "இப்படியும் நடக்குமா?" என்று எண்ணத் தூண்டலாம். அதிலும் கல்கத்தா, பம்பாய் ரகளைகளைப் பற்றிப் படித்தவர்களுக்கு இந்தக் கதையை நடந்தது என்று நம்புவதற்குக் கஷ்டமாய்த்தானிருக்கும். ஆனால் உலகத்தில் எல்லோருமே சர்ச்சில்-அமெரி மாதிரி இருந்து விடுவார்களா? ஆட்லி-பெதிக் லாரன்ஸ் போன்ற சிலரும் இருக்கத்தானே செய்வார்கள்? மேலும், தமிழ்நாடு கல்கத்தாவுமல்ல, பம்பாயுமல்ல; தமிழ்நாடு தமிழ்நாடுதான் அல்லவா?

"காத்தாயி! அந்தப் பக்கிரிப் பயல் போற 'மிடுக்'கைப் பார்த்தியா? மானத்தைப் பார்த்துக்கிட்டு இல்லே நடக்கிறான்? என்னதான் வாழ்வு வந்தாலும் இப்படியா?" என்று அதிசயித்த வண்ணம், கையிலிருந்த புகையிலையிலிருந்து கொஞ்சம் கிள்ளி எடுத்து வாய்க்குள் திணித்துக் கொண்டான் கன்னுசாமி.

வீட்டுக்குள் ஏதோ வேலையாயிருந்த காத்தாயி வெளியே வந்து பார்த்தாள். பக்கிரி ராணுவ உடையுடன் 'லாந்து நடை' நடந்து சென்று கொண்டிருந்தான். "ஆமாம், சண்டைக்குப் போய் வந்த ஆள் இல்லே; அப்படித்தான் நடப்பாரு!" என்றாள் காத்தாயி.

"ஹும்...... இவன் சண்டைக்குப் போய் என்னத்தைக் கிழிச்சிப்பிட்டான்? அங்கே இந்த வெள்ளைக்கார சோல்ஜருங்க இருக்காங்க பாரு, அவனுங்க பூட்ஸைத் தொடைச்சுக்கிட்டு இருந்திருப்பான்!"

"நல்லாச் சொன்னே! இருட்டிலே கச்ச மரத்தைக் கண்டா, 'ஐயோ, பிசாசு!' என்று அலறிக் கிட்டு ஓடுவானே!"

"அதுக்கில்லே காத்தாயி, நான் சொல்றது! மனிசன் முன்னே பின்னே இருந்ததைக் கொஞ்சமாச்சும் நினைச்சுப் பார்க்க வேணும்?—அந்தப் பயல் சண்டைக்குப் போறதுக்கு முந்தி நம்மைத் தேடி நம்ம வீட்டுக்கு வந்து ஒரு காசாவது பேசிவிட்டுப் போகாமல் இருந்திருப்பானா?—நீயே சொல்லு!"

"ஐயோ! அதை ஏன் கேட்கிறே? இவன்தான் இப்படின்னு, இவன் பெண்டாட்டி யிருக்காளே பெரியாத்தா, அவளுக்கு எம்மா 'ராங்கி'க்கிறே? தீவாளிக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்தட்டானும் கொடுத்தட்டான், அவன் என்னமா ஓடிஞ்சி போறாங்கிறே? — அன்னிக்கி எதுக்கோ அவங்க வீட்டுக்குப் போயிருந்தேன்; நம்ம பையனும் கூட வந்திருந்தான். அவங்க பொண்ணு நின்னமேலே வாங்கி வச்சிருந்த பட்டாசுக் கட்டை எடுத்துப் பார்த்துக்கிட்டு இருந்தது. நம்ம பையன் ஓடிப் போய் அந்தப் பொண்ணு கையிலே யிருந்த பட்டாசுக் கட்டை வாங்கிப் பார்த்தான். இதிலே என்ன தப்பு? இதைப் பார்த்ததும் அந்த ராங்கிக்காரி திடுதிடுன்னு என்னமா ஓடி வந்து 'வெடுக்' கென்று பிடுங்கிக் கிட்டாங்கிறே? — எனக்கு ஆத்திரமா வந்திச்சு. நம்ம பையன் முதுகிலே ஒரு அறை அறைஞ்சு உடனே கூட்டி யாந்துட்டேன்!"

"அந்த ரவுக்க வீட்டுக்கெல்லாம் நாம் போகவே படாதுங்கறேன்! — நீ பேசாம இரு. தர்மராஜா கோயில் உத்சவம்தான் காலையோடு முடிஞ்சு போறதே! — இந்தப் பத்து ராத்திரியும் அம்மாம் பெரிய லைட்டைத் தூக்கிக்கிட்டு நான் என் தர்மராஜா சாமியோடு ஊரை யெல்லாம் சுத்திச் சுத்தி வரேன் தெரியுமா, காத்தாயி? — எல்லாம் உனக்காகத்தான்! தினம் தினம் கூலியைக்கூட வாங்கிக் கொள்ளாம சாவுத்தலையே இல்லே சேர்த்து வைக்கச் சொல்லியிருக்கேன்? நாளைத் திருநாள் முடிஞ்சதுன்னு, நாளன்னைக்குக் காலையிலே இந்தக் கையிலே முழுசா இருபது ரூபா இருக்கும். அப்புறம் நமக்கென்ன குறைவு, காத்தாயி? நம்ம வீட்டிலும் தீவாளிதான்! அந்தப் பயல் பெண்டாட்டிக்குப் பட்டுப் புடவை எடுத்துக் கொடுத்தாக்கே, நான் உனக்கு ஒரு பருத்திப் புடவை யாச்சும் எடுத்துக் கொடுக்க மாட்டேனா?" என்றான் கன்னுசாமி.

★

அந்த வருஷம் ஆலக்குடியில் தர்மராஜா கோயில் உத்சவம் ஒரே அல்லோல கல்லோலப் பட்டது. காரணம், யாரோ ஒரு இரும்புக் கடைச் செட்டியார் மேற்படி உத்சவத்தை நடத்தி

"நான்தான், காத்தாயி!" என்றான் கண்ணுசாமி.

"என்ன, இந்த நேரத்திலேயே வந்துட்டே? பொழுது விடிஞ்சிலே வருவேன்னு பார்த்தேன்...!"

ஏனோ 'குபுக்'கென்று அழுகை வந்து விட்டது கண்ணுசாமிக்கு!

"நானும் அப்படித்தான் நினைச்சுக்கிட்டுப் போனேன், காத்தாயி! அந்தப் பாழும் தெய்வம்..."

"என்ன, என்ன!—ஏன்? என்ன நடந்தது?" என்று படபடப்புடன் கேட்டுக் கொண்டே, கட்டிச் சுருட்டிக்கொண்டு எழுந்து தன் கணவனுடைய தோள்களைப் பற்றினாள் காத்தாயி.

கண்ணுசாமி நடந்த விஷயத்தைச் சொன்னான்.

"இதுக்கா இப்படி அழுறே? 'அந்தத் தர்மராஜா தலையிலே இடி விழ!' என்று நினைச்சுக்கிட்டுப் பேசாம இருக்காம!" என்று சொல்லிக் காத்தாயி அவனைத் தேற்றினாள்.

★

பொழுது விடிந்தது. "தன்னுடைய கஷ்டம் விடியுமா?" என்று எண்ணிக் கொண்டே படுக்கையை விட்டு எழுந்தான் கண்ணுசாமி. காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டு, கவலையுடன் அல்லாப்பிச்சை ராவுத்தரின் கடையை நெருங்கினான்.

தயங்கிக் கொண்டே ஒரு புறமாக ஒதுங்கி நின்ற அவனை நோக்கி, "என்ன பிள்ளே! ஏன் ஒதுங்கிட்டு நிக்கிறே? —சும்மா இங்கிட்டு வா!" என்றார் அல்லாப்பிச்சை ராவுத்தர்.

கண்ணுசாமி தலையைச் சொறிந்து கொண்டே மெள்ள அவரை நெருங்கி, "சாத்திரி...... சாத்திரி...... சாத்திரி...!" என்று மேலே ஒன்றும் சொல்ல முடியாமல் மென்று விழுங்கினான்.

"எல்லாம் தெரியும், பிள்ளே! அதுக்கா இப்படி ஒதுங்கிக்கிட்டு நிக்கிறே?—சே! விட்டுத் தள்ளுங்கிறேன்! உன்னைக் கொண்டு இத்தனை வருஷமா நான் எவ்வளவு பணம் சம்பாதிச்சிருப்பேன்? இப்போ நீ தவறி ஒரு விளக்கை உடைச்சி விட்டதுக்காக அந்த நஷ்டத்தை உன் தலையிலே கட்டறது அநியாயமில்லே! நானே உடைச்சி விட்டிருந்தேன் — அப்போ என்ன பண்ணி யிருப்பேன், பிள்ளே? கடையின் செலவுக் கணக்கிலே யல்ல எழுதிவச்சிருப்பேன்! — அதே நியாயந்தான் உனக்கும்!" என்றார் ராவுத்தர்.

கண்ணுசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. "எசமான்! ... நிசமாகவா, எசமான்...?" என்று ஆரம்பித்தான்.

"ஆமாம் பிள்ளே, ஆமாம்! இந்தா, உன்னுடைய பத்து நாள் கூலி இருபது ரூபாய்!— எடுத்துக்கிட்டுச் சந்தோஷமாய்ப் போய் வா!" என்று மலர்ந்த முகத்துடன் இருபது ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத்தார் ராவுத்தர்.

அதைக் கைகூப்பிப் பெற்றுக் கொண்டு கண்ணுசாமி வீடு திரும்பினான். அவன் சொன்ன செய்தியைக் கேட்ட காத்தாயி, ஏனோ மூர்ச்சை போட்டு விழுந்து விட்டாள்!

சிறிது நேரத்திற்குப் பிறகு மூர்ச்சை தெளிந்து எழுந்த அவளையும், குழந்தையையும் கூட்டிக்கொண்டு கடை வீதிக்குச் சென்றான் கண்ணுசாமி. தீபாவளிக்கு வேண்டியவற்றை வாங்கிக் கொண்டு வீடு திரும்பினான்.

மறு நாள் அவர்களுடைய வீட்டில் தீபாவளி வெகு அமர்க்களமாகக் கொண்டாடப்பட்டது. ஆனால், அந்த ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அவர்களுடைய உள்ளத்தில் குடி கொண்டிருக்கவில்லை; அல்லாப் பிச்சை ராவுத்தர்தான் குடி கொண்டிருந்தார். ஆனால் மாயாவியாகிய அந்தக் கிருஷ்ண பரமாத்மா எப்போது எந்தவித உருவம் கொள்வார் என்று யாரால் சொல்ல முடியும்?

# திறப்பு விழா

பகீரதன்

தமிழ் மன்றத் திறப்பு விழாவுக்குத் தாங்கள் அவசியம் வரவேண்டும் என்று மேற்படி மன்றத்தின் காரியதரிசியும் தலைவரும் எனக்கு அழைப்பு அனுப்பி யிருந்தார்கள்.

அவர்களில் யாரையும் எனக்குத் தெரியாது. சாதாரணமாக ஏதாவது அரசியல் கூட்டமாக இருந்தாலும் காரசாரமாகப் பேசுவார்கள்; கேட்டுவிட்டாவது வரலாம். விருந்தாக இருந்தால் சொல்ல வேண்டியதில்லை; கட்டாயம் போய்த்தான் தீர வேண்டும்! திறப்பு விழாவில் என்ன இருக்கப் போகிறது என்று முதலில் தோன்றியது. தமிழுக்கு என்று ஒரு மன்றம் கட்டி அதன் திறப்பு விழாவிற்கு நமக்கு அழைப்பு வந்து நாம் போகவில்லை யென்றால் நன்றாயிருக்காது என்று சென்றேன்.

ஊருக்கு நடுவில் உள்ள மைதானத்தில் நல்ல முறையில் நேர்த்தியாகத் தமிழ் மன்றம் கட்டப்பட்டிருந்தது. "தமிழுக்குத் தனியாக வேண்டும்" "தமிழ் அரசியல் பெரிதாக வேண்டும்" என்றெல்லாம் கொட்டை எழுத்தில் பெரிதாக எழுதிய போர்டுகள் அங்கங்கே காட்சி யளித்தன. பெரிய மனிதர்கள் உட்காருவதற்காக ஒரு பக்கத்தில் சில நாற்காலிகள் போடப் பட்டிருந்தன. நான் ஒரு நாற்காலியில் 'ஜம்' மென்று உட்கார்ந்தேன்.

அக்கிராசனம் வகித்த நரசிம்ம செட்டியாரு எழுந்து நின்று "சகோதர, சகோதரிகளே! நாக்கு மஞ்சி அரவமு மாட்லாடறுத் தெலியது. நல சேப்பி மன்னிஞ்சவலயுனு" என்ற பீடிகையுடன் பிரசங்கத்தை ஆரம்பித்தார்.

சுமார் ஒரு மணி நேரம் அவர் பேசிவிட்டு உட்கார்ந்த புடன் ஒரே கைதட்டலும் கரகோஷமுமாக இருந்தது. அதிலும் என் அருகில் உட்கார்ந்திருந்தவர் அக்கிராசனருடைய பேச்சை ரொம்பவும் அனுபவித்தவர்போல் கைகொட்டினார்.

"என்ன, அப்படிச் சந்தோஷப் படுகிறீர்களே?" என்றேன். "எனக்குத் தெலுங்கு பாஷையே தெரியாது; அதனால்தான்!" என்றார் அவர்.

அக்கிராசனருக்குப் பிறகு, திறப்பாளரான வங்க தலைவர் சட்டர்ஜி, வயிற்றின் வளர்ந்திருந்த தமது பருத்த உடலைச் சுமக்க முடியாமல் சுமந்துகொண்டு எழுந்திருந்தார். "பாயியோ; பஹனோ!" என்று அவர் ஹிந்தியில் ஆரம்பித்த பிரசங்கத்தை தமிழில் ஒருவர் மொழி பெயர்த்தார். கடைசியில் "உங்களுடைய அருமையான காலத்தை வீணாக்கி விட்டேன்!" என்று தம் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டு முடித்தார்.

தங்கமுலாம் பூசிய வெள்ளிச் சாவி ஒன்று அவரிடம் கொடுக்கப்பட்டது. சட்டர்ஜி "நான் என் வாழ்நாள் முழுவதும் தமிழுக்காகப் பாடுபடப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு மன்றத்தின் கதவிலிருந்த பூட்டைத் திறந்தார்.

கடைசியில் மன்றத்தின் காரியதரிசியான தமிழ் வித்வான் மணவழகனார் எல்லாருக்கும் நன்றி கூறியதும் கூட்டம் இனிது முடிந்தது. எல்லாரும் "தலைவர்கள் என்ன பேசினார்கள்?" என்று ஒருவரை ஒருவர் விசாரித்தார்கள். அதற்குக் கிடைத்த பதில் "அதுதான் தெரியவில்லை!" என்பதுதான். காரியதரிசி தமிழிலேயே பேசினார் என்றாலும், பழைய சங்கத் தமிழ் நடையில் பேசியபடியால் மற்றவர்களின் பேச்சு விளங்கிய அளவு கூட அவர் பேச்சு விளங்கவில்லை!

*

வீட்டிற்குச் சென்றவுடன், "தமிழ் மன்றத் திறப்பு விழாவிற்கும் போயிருந்தீர்களோ?" என்று ஆவலுடன் கேட்டாள் என் மனைவி.

"அதை ஏன் கேட்கிறாய்போ! எப்பேர்ப்பட்ட வைபவம்! எல்லாரும் என்னமாய்ப் பேசினார்கள் தெரியுமா? அதற்கு என்னையும் அழைத்திருந்தது எவ்வளவோ கௌரவம் இல்லையா!" என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டேன்.

"ரொம்ப அழகுதான்! அடுத்த வீட்டுக் குஞ்சகிருஷ்ண மேனனுக்கு வந்த அழைப்பாம் அது! தபால்காரன் என்னுடைய அப்பா எழுதிய கடிதத்தை அடுத்த வீட்டில் மாற்றிக் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். ஸ்ரீமதி குஞ்சகிருஷ்ண மேனன் அதைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்று இங்கே வந்தாள். தங்கள் மேஜையின்மேல் கிடந்த அழைப்புக் கடிதத்தைப் பார்த்ததும் 'பாழாய்ப்போன தபால் சிப்பாய் வந்தாலும் வந்தது, ஒரு நாளாவது கடிதம் ஒழுங்காக வருவதில்லை' என்று சொல்லிவிட்டு அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு போனாள்!" என்றாள் என் சகதர்மிணி.

# தஞ்சைபுரிச் சித்திரங்கள்

“உலகத்திலேயே கோயில் கட்டுவதில் இணையற்ற சாதியார் பழந் தமிழ் மக்கள்” என்றும், “தஞ்சாவூரிலுள்ள பெரிய கோயில் இந்தியா தேசத்திலேயே மிக மகோன்னதமான கோயில்” என்றும் **என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிக்கா** என்னும் சகல அறிவுக் களஞ்சிய நூல் கூறுகிறது.

காஞ்சி பல்லவ சக்கரவர்த்திகளான மகேந்திர வர்மன், மாமல்ல நரசிம்மன் ஆகியவர்களின் காலத்துக்குச் சுமார் 330 வருஷங்களுக்குப் பிறகு தஞ்சாவூர்ச் சோழர்களின் காலத்தில் மீண்டும் தமிழகம் மகோன்னத நிலையை அடைந்தது. ஸ்ரீ ராஜராஜ சோழன் ஆட்சியிலும், அவனுடைய வீரப் புதல்வன் ஸ்ரீ ராஜேந்திர சோழனுடைய ஆட்சியிலும் தமிழக சாம்ராஜ்யம் வடக்கே மலைகளைக் கடந்து **கங்கை** நதி வரையிலும் கிழக்கே கடல்களைக் கடந்து அந்நாளில் மலாய் நாட்டின் தலைநகராய் விளங்கிய **கடாரம்** வரைக்கும் பரவியிருந்தது.

அக் காலத்தில், அதாவது பதினோராம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சோழ வம்சத்தின் வீரப் புகழ் வானோங்கி வளர்ந்தது போல் அந்த வம்சத்து மன்னர்கள் நிர்மாணித்த ஆலயங்களின் கோபுரங்களும் வானோங்கி உயர்ந்தன. அத்தகைய புராதனமான கோயில்களுக்குள்ளே மிகவும் முக்கியமானது தஞ்சாவூர்ப் பெரிய கோயில்.

உலகப் பிரசித்திபெற்ற மேற்படி ஆலயத்தின் திருப்பணி கி. பி. 1,003-ல் தொடங்கப்பட்டு கி. பி. 1,009-ல் பூர்த்தியாகி யிருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

ஸ்ரீ ராஜராஜ சோழனால் நிர்மாணிக்கப்பட்டபடியால் **இராஜ ராஜேசுவரம்** என்று பெயர்பெற்ற தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் எத்தனை எத்தனையோ சிற்பக் கலை அற்புதங்கள் இருக்கின்றன என்பது பிரசித்தமான விஷயம். பெருவுடையார் சந்நிதியில் உள்ள ஒரே கல்லில் அமைந்த பிரம்மாண்டமான நந்தியைப் பற்றி அறியாதார் இல்லை. ஆனால் மேற்படி ஆலயத்தில் சித்திரக் கலை அற்புதங்களும் உண்டு என்பது சமீப காலத்திலேதான் தெரிய வந்தது.

ஸ்ரீ பிரகதீசுவரர் என்னும் பெருவுடையார் கர்ப்பக் கிருஹத்தைச் சுற்றியுள்ள உள் பிராகாரம் சர்வசமயம் ஒரே இருள் மயமா யிருக்கிறது. அந்தப் பிராகாரத்தின் சுவர்களிலேதான் மேற்கூறிய சித்திரக் கலைச் செல்வம் புதைத்து வைத்த தனத்தைப் போல் இத்தனை நாளாய் மறைந்திருந்தது. புகழ் பெற்ற தஞ்சைப் பெரிய கோயில் கட்டிய காலத்திலேயே (அதாவது 900 ஆண்டுகளுக்கு முன்னால்) தீட்டப் பெற்ற அந்த அற்புத சித்திரங்கள் இவ்வளவு காலம் மறைந்து கிடந்ததற்குக் காரணம் கோயில் உட்பிராகாரத்தில் சூழ்ந்திருக்கும் இருள் மட்டு மல்ல; பிற்காலத்து நாயக்க மன்னர் ஆட்சியின்போது தோன்றிய சில சித்திரக் கலை ‘மேதாவி’களும் அதற்குக் காரணமாவார்கள். அந்தப் புண்ணியவான்கள் பழைய





# கைலாய யாத்திரை

வன்தொண்டர் என்றும், தம்பிரான் தோழர் என்றும் பெயர்பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் தமிழ் நாட்டின் பல சிவ ஸ்தலங்களுக்கும் சென்று தேனினும் இனிய தமிழ்ப் பதிகங்களைப் பாடல்களைப் பொழிந்து வந்தார். கடைசியாக அவருக்கு உலக வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றி இறைவன் பதம் அடைய வேண்டும் என்னும் நாட்டம் ஏற்பட்டது. தன்னை அழைத்துக் கொள்ள வேண்டுமென்று சிவபெருமானை இறைஞ்சி வேண்டினார்.

சிவபெருமான் வன்தொண்டரின் வேண்டுகோளை நிறைவேற்ற மனம் கொண்டார். வெள்ளை யானையுடன் பூலோகத்துக்குச் சென்று சுந்தர மூர்த்தியை அழைத்து வருமாறு தேவர்களுக்குக் கட்டளையிட்டார்.

தேவர்கள் அவ்விதமே பூலோகத்துக்கு வெள்ளை யானையுடன் சென்றார்கள். இறைவன் கருணையை வியந்தவாறு சுந்தரமூர்த்தி யானை மீதேறி வான மார்க்கத்தில் சென்றார்.

ஸ்ரீ சுந்தரமூர்த்தியும், சேரமான் பெருமான் என்னும் சேரநாட்டு மன்னரும் சிவபக்தியில் உள்ளம் ஒன்றுபட்ட அருமைத் தோழர்கள். ஸ்ரீ சுந்தரர் வெள்ளை யானை மேல் ஏறிச் செல்வதைச் சேரமான் பெருமான் அறிந்தார். உடனே தம்முடைய வெள்ளைப் புரவியின் மேல் ஏறி அதன் காதில் சிவமந்திரத்தை ஓதினார். குதிரை வானத்தில் எழும்பி விரைந்து சென்று வெள்ளை யானையை முந்திக் கொண்டது.

சேரமான் பெருமான் சுந்தரரைத் திரும்பிப் பார்த்து, ''தோழரே! என்னை விட்டு விட்டு வந்தீர் அல்லவா? ஆனாலும் உம்மை நான் விடவில்லை. உமக்கு வழி காட்டுவதற்காக விரைந்து வந்தேன்!'' என்று அன்புடன் பரிகாசமும் கலந்து கூறினார்.

பெரிய புராணம் பாடியுள்ள இந்தச் சம்பவத்தைத் தஞ்சாவூர் பெரிய கோவில் சித்திரகாரர் கலையின் தமிழ் நாட்டு முன்னோர் சுமார் 900 வருஷங்களுக்கு முன்னால் தீட்டினர்.

அந்தச் சித்திரக் கலை மேதைகள் நகைச்சுவையிலும் சிறந்தவர் என்பதை, யானையின் வாலைப் பிடித்துக் கொண்டு தொங்கும் மனிதனைப் பார்த்து அறியலாம்.

ஸ்ரீ சுந்தரமூர்த்தியின் முகத்தில் தமக்கு முன்னால் வந்து விட்ட சேரமான் பெருமானைப் பார்த்ததும் ஏற்பட்ட திகைப்பு பிரதிபலிக்கக் காண்கிறோம். அந்தத் திகைப்பிலும் அவருடைய கைகள் தாளம் போடுவதை நிறுத்தி விட்டிருக்கும் தோற்றத்தையும் கவனியுங்கள்.

மேக மண்டலத்துக்கு மேலே ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வாத்தியங்களை முழக்கிக்கொண்டும் ஸ்ரீ சுந்தரரை அழைத்துச் செல்லும் தேவ தேவியர்களின் காட்சி இங்கே கோட்டுச் சித்திரமாகத் தரப்பட்டிருக்கிறது. இதனுடைய முழுக் காட்சியை வேறு பக்கத்தில் காணலாம்.



சித்திரங்கள் அவ்வளவு நன்றாயில்லை யென்று எண்ணியோ என்னமோ, அவற்றின் மீது சுண்ணச் சாந்து பூசி, அந்தப் பூச்சின்மீது தங்கள் கைவரிசையைக் காட்டி யிருந்தார்கள். இந்தப் பிற்காலச் சித்திரங்கள் பழைய அற்புத சித்திரங்களை மறைத்துக் கொண்டிருந்தன.

அதிர்ஷ்டவசமாக, அந்தப் புதிய சித்திரக் கலை மேதாவிகள் பழைய சித்திரங்களை அடியோடு சுரண்டி அழித்து விடாமல், அவற்றின் மேலே சுண்ணச் சாந்து பூசி விட்டுத் தங்கள் கைவரிசையைக் காட்டினார்கள்! அப்படி மேலே பூசிய சுண்ணச் சாந்து தற்செயலாகச் சில இடங்களில் உதிர்ந்து விட, அவற்றினுள்ளே வெகு காலமாய் மறைந்து கிடந்த பழைய சித்திரங்கள் வெளியாயின. இதை முதன் முதலில் கண்டு பிடித்து வெளி யிட்ட பெருமை அண்ணாமலை சர்வ கலாசாலைச் சரித்திர ஆசிரியர் ஸ்ரீ ச. க. கோவிந்தசாமிப் பிள்ளை அவர்களுக்கு உரியதாகும்.

அவ்வாறு வெளிப்பட்ட புராதன சித்திரங்கள் மிகச் சிறந்த கலைப் பண்பாடு உடையனவாயும், அஜந்தா சித்திர முறையைத் தழுவினவாயும் திகழ்கின்றன. ஏறக்குறையத் தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு மேலே ஆகியும், அந்தச் சித்திரங்கள் இன்னும் வர்ணம் மங்காமலிருப்பது குறிப்பிடத் தக்கது.

அந்தச் சிரஞ்சீவிச் சித்திரங்களில் சிலவற்றை நமது சித்திரக் கலைஞர்கள் ‘சந்திரா’ ‘மணியம்’ ஆகியவர்கள் மிக்க சிரமம் எடுத்துப் பெயர்த்து எழுதிக்கொண்டு வந்தார்கள். அரைகுறையாகவும் சிதிலமாகியும் உள்ள பகுதிகளையும் கற்பனையினால் பூர்த்தி செய்து அவை தீட்டப்பட்ட புதிதில் இருந்திருக்கக் கூடிய விதமாக எழுதித் தந்தார்கள்.

அத்தகைய பழந்தமிழ் நாட்டுச் சித்திரக் கலை அற்புதங்களை மிக்க மகிழ்ச்சியுடனும் பெருமையுடனும் இந்தத் தீபாவளி மலரில் வெளியிட்டிருக்கிறோம்.






PIONEER PUBLICITIES. MADURA.


பேபி
கிரைப்
குழந்தைகளின்
வயிற்றுக் கோளாறுகளைப்
போக்கி நல்ல
ஆரோக்கியத்தைக்
கொடுக்கும்
திராவகம்.
சர்ம ரோகங்களுக்கு
சைபால்
சிறந்த மருந்து
சைபால்
For
RING
WORM
ETC
AVAILABLE AT ALL CHEMISTS.
MFG. BY,
THE SOUTH INDIAN MANUFACTURING Co.,
MADURA.

PIONEER


ALWAYS INSIST UPON NATIONAL PRODUCTS
FLOUR MILL
PUMP SET
HULLER
LATHE
COFFEE GRINDER
OIL MILL
Buy Try and be Satisfied.
PROP: K S.VASAN.
TEL: NATIONAL.
PUMP SET
MFGRS: OF
DOMESTIC AND
IRRIGATION ELECTRIC
PUMP SETS
FLOUR MILLS
RICE HULLERS
ROTARY OIL MILLS
COFFEE GRINDERS
DISINTEGRATORS
BALING PRESSES
IN ALL SIZES ETC.
ALL KINDS OF
REPAIRS OF
OIL ENGINES AND
BRASS AND IRON
CASTINGS
ARE UNDERTAKEN
AT MODERATE AND
COMPETITIVE RATES.
NATIONAL PRODUCTS
STAND FOR QUALITY
AND DURABILITY.
THE NATIONAL ENGINEERING WORKS
MADURA.

★ மகா கவி ரவீந்திரநாத டாகூரின் அமுத கீதக் கவிதைகளில் எத்தனையோ அற்புத சொற் சித்திரங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றில் சிலவற்றை நமது சித்திரக் கலைஞர் கற்பனைக் கண்ணால் பார்த்து ஓவியச் சித்திரங்களாக அமைத்திருக்கிறார். இந்த ஓவியங்களில் சித்திரிக்கப்படும் ரவீந்திரரின் கவிதை வரிகள் பின்வருமாறு:

1

நீர்த்துளியானது தடாகத்தைப் பார்த்துச் சொல்லிற்று:

"உனக்கும் எனக்கும் அப்படி யொன்றும் அதிக வித்தியாசமில்லை! நீ தாமரை இலையின் கீழிருக்கும் பெரிய நீர்த்துளி! நான் தாமரை இலையின் மேற்புறம் இருக்கும் சிறிய நீர்த்துளி!"

2

"அந்த மயிலுக்குத்தான் எவ்வளவு கனமான வால்! எப்படித்தான் அதைச் சுமக்கிறதோ பாவம்!" என்று சிட்டுக் குருவி வருத்தப் படுகிறது.

3

காட்டு மலரும் தனக்கு உறவுதான் என்று சொல்லிக் கொள்ளச் சூரிய காந்திப் புஷ்பம் ரொம்பவும் வெட்கப்பட்டது! ஆனால் கிழக்கில் உதித்த சூரியன் அந்தக் காட்டு மலரைப் பார்த்து, "என் அருமைக் கண்மணி! சௌக்கியமா?" என்று கேட்ட போது சூரிய காந்திப் பூ தலை குனிந்தது!

4

வாயில் உள்ள மீனை வான வீதியில் உலாவுவதற்கு அழைத்துச் செல்லுவதாக அந்தப் பறவை எண்ணுகிறது!

5

குழந்தாய்! உன்னுடைய கண்களிலே கண்ணீர் ஏன்?

உன் விரல்களிலும் முகத்திலும் மசியைப் பூசிக்கொண்டாய் என்பதற்காகவா அவர்கள் அப்படி உன்னைத் திட்டினார்கள்!

ஆனால் பூர்ண சந்திரனில் உள்ள மருவுக்காக அதை அழுக்கா யிருக்கிறது என்று சொல்ல அவர்கள் துணிவார்களா?

6

அம்மா! உன்னுடைய குழந்தையாக இராமல் நான் மட்டும் பச்சைக் கிளியாக இருந்திருந்தால் 'எங்கேயாவது பறந்து போய் விடுவேனோ' என்று என்னைக் கட்டிப் போட்டிருப்பாயா?



5




6



# யாழ்ஒலி

"சோமு"

வடநாட்டில் அமரபுரி ராஜ்யத்தை ஆண்டு வந்த குமார குப்தன் சங்கீத வித்வான்களுக்கு அபார மதிப்புக் கொடுத்து ஆதரித்து வந்தான். தமிழ் நாட்டுச் சங்கீதத்திலும் தமிழர்களுடைய இசைத் திறமையிலும் அவனுக்கு மட்டற்ற வியப்பும் அபிமானமும் உண்டு. இது காரணமாகவே, தனது சபையில் தமிழ்நாட்டுப் பாணன் ஒருவனுக்கு விசேஷ கௌரவம் அளித்துத் தன்னுடனேயே அமர்த்தி வந்தான்.

சங்கீதப் பித்து இவ்வளவு அதிகமாக இருந்த ராஜாவுக்கு, அதைவிட அதிக பிரமை கொண்ட சங்கீத ரஸிகை விஜயஸ்ரீ மகளாகப் பிறந்திருந்தாள்!

குமார குப்தன் மரணத் தறுவாயில் தன் மகளைக் கூப்பிட்டு ஒரு வேண்டுகோள் செய்து கொண்டான். அந்த வேண்டுகோள் மிக விசித்திரமானது.

"விஜயஸ்ரீ! இந்தப் பெரிய உலகத்தில் இசையைப் போன்ற அரிய செல்வம் வேறொன்றில்லை. நீ மணக்கும் கணவன் அதிர்ஷ்டசாலி நல்ல சங்கீத வித்தகனாக இருக்கட்டும்" என்றான். அவனுடைய வேண்டுகோள் அம்மட்டோடு நின்றிருந்தால் எவ்வளவோ நலமாய் முடிந்திருக்கும். ஆனால் மேலும் குமார குப்தன் சொன்னான்: "விஜயஸ்ரீ! சகோட யாழ் என்ற தெய்விக வாத்யம் திராவிட தேசத்தில் இருக்கிறது. மனிதனுடைய உடல் அமைப்பை ஆதாரமாகக் கொண்டு செய்யப்பட்ட அந்த அபூர்வமான வாத்தியத்தில் கைதேர்ந்த நிபுணர்கள் பலர் அந்நாட்டில் வாழ்கிறார்கள். பதினாறு நரம்பும், பத்து அந்தரக் கோலும் உடைய சகோட யாழிலே, தாரத் தாக்கம் என்னும் இசை முறைப்படி இசை நரம்பு தொடுத்துப் பன்னீராயிரம் பண்கள் வாசிக்கும் அதிசயக் கலைஞர்கள் தென் மதுரையிலும் காவிரிப்பூம் பட்டினத்திலும் இருக்கிறார்கள். அவர்களிடம யாழிசை பயின்று தேர்ந்த சங்கீதக் கலைஞனை நீ மணந்து கொள்!"

இவ்விதம் தன் மகளிடம் வேண்டிக் கொண்டு குமார குப்தன் உயிர் நீத்தான்.

இளவரசி விஜயஸ்ரீயின் நிலை மிகவும் அனுதாபத்துக் குரியதாக இருந்தது. அமரபுரியின் முதன் மந்திரி குமாரனும் வசீகர ரூபம் உடையவனுமான ரவிசந்திரன் சிறந்த ரஸிகன்தான். ஆனால் திராவிட நாட்டுச் சகோட யாழை அவன் கண்ணால்கூடப் பார்த்திரானே!

## 2

அரண்மனைத் தோட்டத்தில், பௌர்ணமி நிலவிலே, தடாகத்துப் படிக்கட்டில் ரவிசந்திரனும் விஜயஸ்ரீயும் சந்தித்தார்கள். அந்த வாலிபனுடைய முகவிலாசத்திலே சொக்கிப் போய் நின்றாள் இளவரசி.

"விஜயஸ்ரீ, ஏன் ஏக்கமடைகிறாய்? சகோட யாழ் அல்ல, நாரதர் கையிலுள்ள தம்புராவைக் கூடக் கொண்டுவந்து விடுவேனே உன்னை அடைவதற்காக!" என்றான் ரவிசந்திரன்.

"என் தந்தை, அவருடைய இசைப் பைத்தியத்தால் மதிமயங்கி விட்டார்" என்றாள் விஜயஸ்ரீ.

"இல்லை; பெரியவர்கள் மரணத்தறுவாயில் தெய்விக திருஷ்டிகளைக் காண்பார்கள். உன் தந்தை தீர்க்கதரிசி; நீ அவரைக் குறை சொல்லாதே!" என்றான் ரவிசந்திரன்.

மேகத்தைப் பிளந்துகொண்டு வந்த பூரண சந்திரனுடைய ஒளியிலே ரவிசந்திரன் விஜயஸ்ரீயின் தாமரை இதழ் போல் மிருதுவான கரங்களைப் பற்றினான். உள்ளங்கை மேல் உள்ளங்கை வைத்தான்.

"இந்த வானம், இதே மேகக் கூட்டம், பால் போன்ற இப் பௌர்ணமி நிலவு — இவை சாக்ஷி. தமிழ்நாடு சென்று இசை பயின்று சகோட யாழில் அபூர்வமான திறமை பெற்றுத் திரும்பி வந்து உன்னை மணக்கிறேன்."

இவ்வாறு சொல்லிவிட்டு விஜயஸ்ரீயின் கண்களையே இமை கொட்டாமல் பார்த்தான். அந்த மெல்லிய இதயத்தின் உணர்ச்சித் திரைகள் கண்களிலே வந்து அலை வீசின! அடுத்த கணம் மறுபக்கம் திரும்பிச் சென்றான் ரவிசந்திரன், உறுதியோடு.

தடாகத்தின் படிக்கட்டில் சாய்ந்தாள் இளவரசி. ஏங்கினாள், விம்மினாள், பெருமூச்சு விட்டாள். அந்தச் சோலையில் நின்ற அத்தனை மரங்களும், செடிகளும், கொடிகளும் பெருமூச்சு விட்டன!

3

நாட்கள் ஓடின. மாதங்கள், பருவங்கள் கழன்றன. ஆண்டுகள் ஒன்றை போன்று மோதிக்கொண்டு உருண்டன. தடாகத்தின் கரையிலே கொழு கொம்பு இல்லாது நின்ற பூங்கொடியோடு பூங்கொடியாகக் கன்னி விஜயஸ்ரீ வளர்ந்து நின்றாள்.

தமிழ்நாடு வந்த ரவிசந்திரன் காவிரிப்பூம் பட்டினத்தில் ஒரு இசைப் புலவனிடம் யாழ் கற்க ஆரம்பித்தான். ஆரம்ப நாட்களில் யாழைத் தொடும் போதெல்லாம் அவன் எதிரே கலைவாணி போலக் காட்சி அளிப்பாள் விஜயஸ்ரீ. அவனது யாழிசைக்கு அதிதேவதை அவள்தான். ஆனால்......

நாட்கள் செல்லச் செல்ல ரவிசந்திரன் மனதில் ஏதோ ஒரு மாறுதல் ஏற்பட்டது. யாழைத் தொடும்போது அவன் மனக்கண்முன் தோன்றிவந்த "அதி தேவதை"யின் உருவம் மெதுவாக மங்க ஆரம்பித்தது. அந்தச் சகோடயாழின் இசையிலேயே ஓர் அற்புதமான சுகம் தென்பட்டது ரவிசந்திரனுக்கு. பிறகு அந்த சுகம் அதிகரித்தது. இன்னதென்று சொல்ல முடியாத ஓர் இன்பம், வேறெதிலும் அனுபவித்திராத ஓர் ஆனந்தம் அவனுக்கு வாய்த்தது அந்தச் சகோட யாழின் இன்னிசையிலே.

மாதங்கள், வருஷங்கள் — ரவிசந்திரன் யாழிசைப் பிரவாகத்தின் ஆழத்திலே ஆழ்ந்து ஆழ்ந்துபோய் அமுங்கி விட்டான்! சிற்சில சமயங்களில் எப்பொழுதோ ஏற்படும் மெல்லிய விஜயஸ்ரீயின் ஞாபகம் வரும். அந்த வேளையில்கூட நிசி என்று ஒரு கௌளிப் பண் அல்லது சாதாரியில் ஒரு புதிய பிடிப்பு, ஒரு மேகராகக் குறிஞ்சியில் நயமான ஒரு வளைவு நெளிவு — இப்படி ஏதாவது மனத்தில் உதயமாகும். அவ்வளவுதான்; சகோட யாழை எடுத்து வைத்துக் கொண்டு இதயத்தையும் தந்தியையும் ஒன்று கூட்டி முறுக்கி இழைக்க ஆரம்பித்து விடுவான்!

பத்துப் பதினைந்து வருஷம் இப்படியே கழிந்து விட்டது. வடநாட்டிலிருந்து அநேகர் வருவார்கள். தமிழரோடும் தமிழுடன் இசையோடும் ஒன்றிக் கலந்து விட்ட இந்த இசைவாணனிடமே வந்து கூடப் பலர் அந்த 'வடநாட்டு ரவிசந்திர'னைப் பற்றிப் புலன் விசாரிப்பார்கள். அப்பொழுதெல்லாம் அவர்களை ஏறுக்கு மாறாகப் பதில் சொல்லித் திருப்பி அனுப்பி விடுவான் அவன்.

ரவியினுடைய லட்சியம் இப்பொழுது வானத்திற்கே ஏறிவிட்டது. அவனுடைய குறிக்கோள் வான முகட்டில் தொங்கும் நக்ஷத்திரம் போன்று தொலைவிலே நின்று மினுமினுத்தது. சகோட யாழ் என்னும் இசை விமானத்தில் அந்தச் சுடரை நோக்கி மேலே மேலே பறந்து சென்றான் அவன்! செல்லச் செல்ல நயமான இன்பம்; பண்களும் பாடல்களும் அவனோடு சதா உறவாடிக் கொண்டிருந்தன. குற்றம் குறை யற்ற தெய்விக இசையின் பேரானந்த நிலையை நோக்கிச் சகோட யாழின் தந்தியிலே அவன் தவம் செய்து கொண்டிருந்தான்!

ஓர் இரவு, நதியின் கரையிலிருந்து யாழ் வாசித்துக் கொண்டிருந்தான் ரவிசந்திரன். யாரோ ஒரு பைராகி அந்த இசையின் வசமாகி அங்கு வந்து சேர்ந்தான்.

தேவதானி, தக்கராகம், மேகராகக் குறிஞ்சி, செவ்வழி—



முதலான பண்கள் எல்லாம் அரிய உருவங்கள் கொண்டு நடனம் செய்தன. அந்த வைராகி அப்படியே மெய்ம்மறந்து கல்லாகி விட்டான்.

உதயமாகிற்று. புறநீர்மை, கொண்டைக் கிளி, விபாயுக் குறிஞ்சி முதலிய உதயப்பண்கள் நிர்வாணத்திலே செம்பரிதியைச் சுற்றி வட்டமிடும் வர்ணங்களைப் போன்று யாழிலே சுழன்றன. திடீரென்று யாழில் ஓடிய விரல் நின்றது. காரணம் அந்த வைராகி "இவனே ரவி!" என்று சொல்லி விட்டதுதான்!

"இவனே ரவி!"-அந்த விபப்புச் சொல்லைக் கேட்டதுதான் தாமதம். யாழ் கையிலிருந்து நழுவி விட்டது.

"வைராகி, நீ யார்?"

"எனக்கு அமரபுரி ராஜ்யம்."

"அமரபுரியா......?"

வைராகி சற்றுத் தயங்கினான்!

"என்னைத் தெரியவில்லையா உனக்கு? நான்......"



ரவிசந்திரன் மனதில் அந்த ஒரு விநாடி எத்தனையோ மின்னல்களும் இடிகளும்!

"ப்ரதாப், நீ இளவரசியின் அந்தப்புரத்துப் புரோகிதர் மகன் அல்லவா?"

"ஆமாம்."

"விஜயஸ்ரீ சௌக்யமாய் இருக்கிறாளா?"

"விஜயஸ்ரீ ...... ஆமாம் ...... சௌக்யமாய் ......... வானத்திலே!"

"என்ன?"

"ரவி, நீ பெரிய பாபம் செய்து விட்டாய்!"

ஏதோ பேச வந்தவன் மனம் துணிந்து வார்த்தைகளை மாற்றினான்.

"விதியின் எழுத்து, யார் என்ன செய்ய முடியும்?—பாரதிக் கவியின் பாட்டு நினைவிருக்கிறதா?

**தொழுது கெஞ்சி நின்றாலும்**
**சூழ்ச்சி பலவும் செய்தாலும்**

..........................................

ரவி அந்த வார்த்தைகளை மேலே செல்ல விடாமல் இடைமறித்தான்.

"ப்ரதாப், விஜயஸ்ரீ இறந்து விட்டாள் என்று என்னுள் கம்புயுதுடைக்கப்படமா யிருக்கிறதே!"

"ஆமாம்; அந்தச் செய்தியை முதல் முதல் கேட்ட அமரபுரி ராஜ்யத்து மக்கள் எல்லோருக்குமே அப்படித்தான் இருந்தது. மந்தாகினி ஏரிக் கரையில் அடக்கம் செய்த போழுது தங்க விக்ரகம் போன்ற அவளுடைய உடலைக் கண்ணால் கண்டிரா விட்டால் நான்கூட நம்பியிருக்க மாட்டேன்."

"ப்ரதாப், விஜயஸ்ரீ எப்படி மடிந்தாள்?"

அந்தக் கேள்விக்கு அவன் பதிலே சொல்லவில்லை. ஒரே மௌனமாக நின்றான்.

"அமைதியற்ற மனதோடு மரணம் அடைபவர்களின் ஆத்மா நற்கதி சேராது என்று பெரியவர்கள் சொல்வார்களே. இளவரசி விஜயஸ்ரீயின் கதியும் அப்படித்தானே ஆகியிருக்கும்?"

"வருந்துவதை விட்டு, நீ உடனே அமரபுரிக்குச் செல். அவள் உடல் அடக்கமாயிருக்கும் அந்த மந்தாகினி ஏரிப் பிராந்திய முழுதும், உன்னுடைய புனிதமான யாழிசை நிரம்பி நின்று எதிரொலி செய்யட்டும். எந்தச் சகோடயாழின் இசைக்காக அவள் காத்திருந்தாளோ, அந்த இசையின் தெய்வீகம் அவளுடைய ஆத்மாவை நிர்மலமாக்கி அவளை நற்கதியில் சேர்ப்பிக்கும்; சந்தேகமில்லை."

4

**ப**ல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, பாழடைந்து போன அமரபுரிப் பிராந்தியங்களின் சிதைவுகளைத் தோண்டி, வெகுந்து ஆராய்ச்சி செய்த சரித்திர நிபுணர்கள், அரச வம்சத்தினரை அடக்கம் செய்திருந்த மந்தாகினி ஏரிக் கரையிலிருந்து ஓர் அபூர்வமான வாத்யத்தைக் கண்டெடுத்தார்கள். அமைப்பில் இருந்து அது பண்டைத் தமிழ்நாட்டின் மிகப் புராதனமான சகோடயாழ்தான் என்று அவர்களுக்குப் புரிந்து விட்டது. ஆனால் எவ்வளவோ யோசித்துப் பார்த்துங்கூட எந்த ஆராய்ச்சியாளருக்கும் இன்று வரை புரியாத விஷயம் ஒன்றுண்டு:—



சாந்தமயமான பௌர்ணமி இரவுகளில், நிர்மலமான அந்த மந்தாகினி ஏரிக் கரையில், உள்ளத்தை உருக்கும் இன்னொலி ஒன்று கேட்கும். அந்தப் பக்கமாகச் செல்ல நேர்ந்த எந்த யாத்ரிகனும் அப்படியே வெளியிலே ஒரு கணம் மெய்ம்மறந்து நின்று அதிசயமான அந்த யாழ் ஒலியைக் கேட்டு விட்டுத்தான் மேலே நடப்பான்! அந்த யாழ் ஒலி எங்கிருந்து எப்படி வருகிறது என்பதை யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை.


அவளுடைய
தேகாரோக்கிய பழக்கம்

# சந்தோஷச் செய்தி!

வெகு சீக்கிரத்தில்
உங்களுக்குப் பிரியமான

## பென்ஸிலை
## மறுபடியும் பெறுவீர்கள்.




மீண்டும் பென்ஸிலுக்கு அடிக்கடி உடையக்கூடிய முனையும் கூடிவிட்டால் கோபம்வருவதுடன் தெளிவான சிந்தனையும் போய் விடும். ஓர் அற்ப பென்ஸிலுங்கூட அபாரமான சிந்தனைக்கு ஏதுவாகலாம். ஸ்டார் ஆப் இந்தியா பென்ஸில்கள் எழுதுவதில் இன்பத்தையும் உன்னத எண்ணங்களையும் உற்பத்தி செய்ய ஏதுவானவை.

ஸ்டார் ஆப் இந்தியா பென்ஸில் என்றால் மிகவும் உயர்தரமான பென்ஸில் என்பது தான் அர்த்தம்.




MADRAS PENCIL FACTORY

லிட்டில்ஸ்

# ஓரியெண்டல் பாம்



சகலவிதமான வலிகளுக்கும் குடைச்சல்களுக்கும் இன்றியமையாதது

## 1885-ல் இந்தியாவில்

முதன் முதலாகத் தோன்றியது

## 1946-ல் இன்னம்

முதன்மை ஸ்தானம் வகித்து வருவது

லிட்டில்ஸ் ஓரியெண்டல் பாம் & பார்மசூடிகல்ஸ் லிமிடெட் மதராஸ்

•

எமது மற்றொரு தயாரிப்பு

# ஜெர்மெக்ஸ்

சரும நோய்களுக்கு உகந்த சடிலா சஞ்சீவி

படை
எக்ஸிமா
பருக்கள்
கட்டிகள்
வெட்டுக் காயம்
தீப்பட்ட புண்
கரப்பான்
முதலியவைகளுக்கு




ஜெர்மெக்ஸ் விஷக் கிருமிகளைக் கொன்று ரணத்தை ஆற்றுகிறது



# வைக்க ஓர் இடம்?

1 பணத்தை எங்கே, எப்படி வைப்பது என்ற கவலை பெரிதாகி வருகிறது. பழைய புலவரும் ஏதேதோ பாடி, (1) "யாரோ அனுபவிப்பார் ...... அந்தப் பணம்" என்று முடித்திருக்கிறார்.

## (2) தாத்தா இடுப்பில் சொருகிக் கொள்கிறார்

2 (3) பாட்டி காசு மாலையாய் கழுத்தில் காசைக் கட்டித் தொங்கவிட்டுக் கொள்கிறாள். இவை பழைய கால வழக்கங்களானாலும், யுக்தமானவை. பாங்கில் போடுவதைவிட, (4) உடம்பிலேயே பணத்தை நகைகளாகப் போட்டுக் கொள்வது அழகைக் கூட்டி வைக்கிறதல்லவா?

## லாபமும் உண்டு

3 பொன் ஆபரணமானாலும், வைர நகையானாலும், சமயோசிதமாக விற்றால் லாபமும் கிடைக்காமற் போவதில்லை. ஆகவே,

## ஏற்ற இடம்

உடல்தான். கைவசமுள்ள சில அழகிய நெக்லெஸ்கள், ஒட்டியாணங்கள், ஸ்வஸ்திக் வளையல்களைக் காண உங்களை எப்பொழுது எதிர்பார்க்கலாம்? 4

# உம்மிடியார்

உம்மிடி ராமய்ய செட்டி, குருசாமி செட்டி & கம்பெனி

நம்பிக்கையுள்ள, வைரம், பொன், வெள்ளி நகை வியாபாரிகள்

நெ. 24—25, சைனா பஜார், மதராஸ். டெலிபோன்: 2802

தொழிற்சாலை: நெ. 63, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்.

–சாமா–


Sonal
BIO-SARASA
Bharath Drug House
IMPORTANT TO CHILDREN
WORLD FAMOUS
TRADE MARK
GRIPE DIL WATER
INFANTS' HEALTH PRESERVATIVE.
For the Disorders of Children.
Gripe, Acidity, Flatulence, Convulsions, Cough and symptoms incidental to infants at the period of cutting teeth.
Directions enclosed.
(U. S. A. Formula.)
சோனல்
எல்லா சரும வியாதி
களுக்கும் சிறந்தது.
பயோ-சரசா
உயர்ந்த ரத்த
சுத்தி டானிக்
கிரைப்-டில்-வாட்டர்
குழந்தைகளின் ஆரோக்
கியத்திற்கு உகந்தது.
MANUFACTURING CHEMISTS:
BHARATH DRUG HOUSE.
MADURA. (S.I.)
Sole Distributors: T.N.C. NAGALINGAM PILLAI & SONS.
35-36, NORTH CHITRAI STREET, MADURA.

# சமர்ப்பணம்

தேவலோகத்திலே நடந்த மாபெரும் கலாட்டாவைப் பற்றி நேயர்கள் கேட்டிருக்க மாட்டார்கள். ஏனெனில், அதைப் பற்றிய விவரங்கள் பூலோகப் பத்திரிகைகளில் வெளியானால் தேவர் தேவியர்களுடைய கௌரவத்துக்குக் குறைவு நேருமே என்று எண்ணிச் சதுர்முகப் பிரம்மா தம்மையே தலைமை சென்ஸாராக நியமித்துக்கொண்டு செய்திகளை அமுக்கிவிட்டார்!

பகவான் நாரதரின் மூலமாகக் கலாட்டாவுக்குக் காரணம் என்ன வென்பதை மட்டும் ஒருவாறு நாம் தெரிந்துகொள்ள முடிந்தது. எல்லாம் "கல்கி" தீபாவளி மலரால் நேர்ந்த காரியந்தான். இந்த வருஷம் தீபாவளி மலர் வெளியாகிற செய்தி தெரிந்தவுடனே அதை நாம் இந்தத் தடவை யாருக்குச் சமர்ப்பணம் செய்யக்கூடும் என்பது பற்றி விவாதம் எழுந்ததாம். இந்த விவாதத்தில் விநாயக மூர்த்தி, முருகப் பெருமான், அவருடைய இரு பத்தினிகள், கலைமகள், திருமகள், அவர்களின் கணவன்மார்கள், நந்திகேசுவரர், இந்திரன், இந்திராணி மற்றும் முக்கிய தேவர் தேவியர் எல்லாரும் ஈடுபட்டார்களாம். முதலில் சின்ன விவாதமாக ஆரம்பித்த காரியம், கடைசியில் மாபெரும் கலாட்டாவாக வளர்ந்துபோய் விட்டதாம்.

இதை அறிந்ததும் நாம் தேவலோகத்தில் மீண்டும் கலகம் மூளாமல் தடுப்பதென்று தீர்மானித்துக் கொண்டோம். தேவர் தேவியர்களின் பாதங்களிலே இந்த நறு மணம் வாய்ந்த அழகிய மலரைச் சமர்ப்பிப்பதில்லை என்றும், வள்ளுவரும் கம்பரும் பாரதியாரும் பிறந்த தமிழ் நாட்டு ரசிகர்களின் திருக் கரங்களிலேயே மலரைச் சமர்ப்பிப்பதென்றும் முடிவு செய்தோம்.

தமிழ் நாட்டு ரசிகர் கூட்டத்தைத் தவிர வேறு யார் இந்த மலரைப் பெறுவதற்கு உரியவர்கள்? வேறு யார் இதைப் பார்த்துப் படித்து ரசிக்க முடியும்? தமிழ் நாட்டைத் தவிர வேறு எந்த நாட்டிலேதான் இது போன்ற மலரைச் சிருஷ்டிக்க முடியும்?

"எல்லாம் ஒரு நன்மைக்கே" என்பது பெரியோர் வாக்கு என்றாலும், சென்ற வருஷத்தில் நாம் தீபாவளி மலர் வெளியிடாதிருந்ததில் எந்த விதமான நன்மையும் இருக்க முடியும் என்று நமது நேயர்கள் ஒப்புக்கொள்ளவே யில்லை. அதனால் அவர்களுக்கு நம்மீது ஏற்பட்ட கோபமும் தீரவில்லை. இந்த வருட மலரைப் பார்த்தாவது அவர்களுடைய கோபம் தீரவேண்டும் என்பதற்காகவே இதை ஒன்றுக்கு இரட்டிப்பான சிறந்த அம்சங்களுடனே வெளியிடப் பெரு முயற்சி செய்தோம். அந்த முயற்சியை வெற்றிகரமாக நடத்தித் தந்த ஸ்ரீ விநாயகர் முதலான தேவர் தேவியர்களுக்கு நமது மனமார்ந்த நன்றியை மட்டும் தெரிவித்துவிட்டு, இந்த அற்புதமான தீபாவளிப் பொன் மலரை நேயர்களின் திருக் கரங்களில் அன்புடன் சமர்ப்பிக்கிறோம்.

## பொருளடக்கம்



இந்த மலரில் வரும் கதைகளிலுள்ள சம்பவங்கள் எல்லாம் கற்பனைச் சம்பவங்கள்; கதாபாத்திரங்களில் ராஜாஜியின் பெயரைத் தவிர மற்றவை யெல்லாம் கற்பனைப் பெயர்கள்.

# பொருளடக்கம்—சித்திரங்கள்



# INDEX TO ADVERTISERS



# திரிபுர சம்ஹாரம்

பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்று உலோகங்களிலும் மூன்று பறக்கும் உலகங்களைச் சமைத்துக் கொண்டு மூன்று அசுரர்கள் எல்லா உலகங்களையும் பயங்கரத்துக்கு உள்ளாக்கி யிருந்தார்கள். அவர்களைக் கண்டு மனிதர்களும் தேவர்களும் பீதி கொண்டிருந்தார்கள். கடைசியில் கொடுமை தாங்காமல் அனைவரும் பரமசிவனிடம் சென்று முறையிட்டுக் கதறினார்கள். பரமசிவன் அவர்களுக்கு அபயம் அளித்து, "திரிபுரர்களை சம்ஹரிக்க எல்லாரும் எனக்கு உதவி செய்வீர்களா?" என்று கேட்டார். "ஆகா! செய்கிறோம்!" என்றார்கள் தேவர்கள்.

பூமாதேவியைத் தட்டாகவும் சூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவும் கொண்டு ரதத்தை அமைத்தார்கள். ரதத்தை இழுத்துச் செல்ல நந்தி பகவானே முன் வந்தார். பிரம்மதேவர் சாரதியானார். தேவர்கள் பற்பல ஆயுதங்களாக மாறினார்கள். மகா விஷ்ணு பரமசிவனுடைய அம்புறாத் தூணியின் ஒரு தனி அம்பாக உருக்கொண்டார். விநாயகரும் சுப்பிரமணியரும் துர்க்கையும் போர்க்களத்துக்கு முன்னணியிலே சென்றார்கள்.

பரமசிவன் இவ்வாறு போர்க்கோலம் பூண்டு புறப்பட்டபோது, தேவர்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் "நம்முடைய உதவியினால்தானே பரமசிவன் திரிபுரர்களை வதம் செய்து வெற்றி பெறப் போகிறார்?" என்ற கர்வம் தோன்றியது. பரமசிவன் இதை அறிந்தார். ஒரு புன்னகை புரிந்தார். அந்தப் புன்னகையில் வெளியான தீப்பிழம்பிலும் திரிபுரர்கள், தங்கள் பறக்கும் உலகங்களோடு எரிந்து சாம்பரானார்கள்!

தேவர்கள் செய்த அத்தனை யுத்த ஏற்பாடுகளும் பயனின்றிப் போயின!

இந்தத் திரிபுர சம்ஹாரத்துக்காகப் பரமசிவன் போர்க் கோலம் பூண்டு புறப்படும் காட்சியைத் தஞ்சைப் பெரிய கோயில் பிரகாரச் சுவரில் 900 ஆண்டுகளுக்கு முன்னால் தமிழ் நாட்டுச் சித்திரக் கலைஞர்கள் அழியா வர்ணங்களில் தீட்டினார்கள். அதை நமது சித்திரக் கலைஞர்கள் மணியமும் சந்திராவும் பெயர்த்து எழுதிக் கொண்டு வந்தார்கள்.

போர்க் கோலம் பூண்ட பரமசிவனுடைய திருமுகத்தில், "ஓகோ! தேவர்கள் இப்படியா கர்வம் கொண்டிருக்கிறார்கள்?" என்று சிந்தனை செய்யும் பாவத்தைக் காணலாம்.







அதட்டிக் கேட்கிறேன். இவ்வளவு தைரியம் எனக்கு எதனால் வருகிறது? சைக்கிள் மணியினால்தான்!

ஒவ்வொருவரின் நடையும் பேச்சும் எப்படி வெவ்வேறு விதமாய் இருக்கின்றனவோ, அதேமாதிரி ஒவ்வொருவர் மணி அடிக்கும் விதமும் வெவ்வேறானது. என் சைக்கிளிலுள்ள இதே 'மேக்' மணி, இன்னும் பல சைக்கிள்களில் இருக்கின்றன. அப்படியிருந்தும் நான் மணி அடிக்கும் பாணியினால், அதிலிருந்து தனியானதொரு நாதம் உண்டாகிறது. இதைப்பற்றிச் சந்தேகம் இருந்தால், சுந்தரியைக் கேட்டுப் பாருங்கள். வீட்டை நெருங்கும்போது, "கிணிங் கிணிங்" என்று மணி அடித்தேனானால் யார் என்று கேளாமலே சுந்தரி கதவைத் திறந்து விடுவாள்.

நான் படித்த பள்ளிக்கூடத்தில் ஒரே ஒரு மணிதான்; அதை அடிக்க சேவகனும் ஒருவனேதான்; அவன் ஒவ்வொரு முறை அடிக்கும் விதமும் ஒரே விதந்தான். ஆயினும் வகுப்பு ஆரம்பத்தில் அதன் நாதத்தைக் கேட்பதற்கும், வகுப்பு முடிவில் கேட்பதற்கும் எவ்வளவோ வித்தியாசம். முதல் மணி அடிக்கும்போது, "கொண்டா பையன்களை, பின்னைப் பிய்த்து விடுகிறேன்!" என்று உபாத்தியாயர் பயமுறுத்துவதுபோல் தொனிக்கும். கடைசி மணி அடிக்கும் போது, "கண்டம் தாண்டிவிட்டேன்: இனி மேல் கொண்டாட்டந்தான்!" என்று மணியின் இசையுடன் என் மனமும் பாடும்.

நான் பள்ளிக்கூடம் போகாமல் அடிக்கடி மட்டம் போடுவதுண்டு. "அடேய், உனக்குப் படிப்பிலே அக்கறை இல்லை. நீ வண்டி ஓட்டத்தான் லாயக்கு!" என்று என் தகப்பனார் சபிப்பார். அப்பொதெல்லாம், "வண்டி ஓட்டினால்தான் என்ன!" என்று நினைப்பேன். அதுவும் மணி அடிக்கிற வண்டியாயிருந்தால், [illegible] கேட்க வேண்டியதில்லை. 'டங் டங்' என்று காலால் மணி அடித்துக் கொண்டே ட்ராம் வண்டி ஓட்டலாம். இல்லாதுபோனால், நெருப்பிணைக்கும் கார் டிரைவராகப் போகலாம். பின்னால் ஒருவன் 'டண டண' வென்று வெண்கல மணி அடித்துக் கொண்டேயிருக்க, வண்டியைக் கன வேகத்தில் ஓட்டிச் செல்லலாம். அந்த வெண்கல மணிச் சத்தம் கேட்டால் கவர்னர் காரா யிருந்தாலும் ஒதுங்கி மரியாதை செய்ய வேண்டியதுதான்!

என் தகப்பனார் இட்ட சாபம் ஒரு விதத்தில் பலித்திருக்கிறதென்றே சொல்ல வேண்டும். தினம் தினம் சைக்கிள் ஓட்டிக்கொண்டுதான் ஆபீசுக்குப் போகிறேன். அப்படிப் போகும்



போது, வழி நெடுகிலும் மணி அடிக்கிறேன். அதோடு மட்டுமா? ஆபீசுக்குப் போன பிறகும் வேறு மணியை ஓயாமல் அடிக்கிறேன்.

இந்த வேறு மணி, நான் எஜமான் என்பதற்கு அத்தாட்சி. இந்த மணி இல்லாவிட்டால் எனக்கு அதிகாரமும் இல்லை; பையனுக்கு அலுவலும் இல்லை.

எனக்கும் ஒரு 'எஜமானர்—மணி' உண்டு. இந்த எஜமானை நானே நியமித்து அதற்கு நானே கீழ்ப்படிந்தும் நடக்கிறேன். அது இருந்தாலும் தொல்லை, இல்லாவிட்டாலும் தொல்லை. அதுதான், அலாரம் கடிகாரம். காலை இளந் தென்றல் தட்டித் தழுவ வெகு சுகமாய்த் தூங்கிக் கொண்டிருக்கும்போது, இந்த அலாரம் மணி என்னை எழுந்திருக்கும்படி அதிகாரம் செய்கிறது. அப்போது வருகிற கோபத்தில் அதைத் தூக்கி எறிந்து விடலாமா என்று தோன்றுகிறது. ஆனால் அப்படிச் செய்தால் யாருக்கு நஷ்டம்?

உழுதுண்டு வாழும் குடியானவனுக்குச் சேவல் எப்படியோ, அப்படியேதான் உத்தியோகம் செய்து வாழும் எனக்கு அலாரம் கடிகாரம் என்று வைத்துக் கொண்டால் நல்ல உபமானமாச்சு, நல்ல சமாதானமுமாச்சு. அலாரம் கடிகாரம் காலையில் துயிலெழச் செய்கிறதா? சுவரிலே ஜபம் செய்யும் கடிகாரம், நான் காலத்தை வீணாக்காமல் இருக்கும்படி, "மண்ணும் உலகில் எண்ணிப் பாரடா(ம்), கண்ணின் அசைவுக் காலம் வீணடா(ம்), விண்ணில் உன்னைக் காணும் முன்னமே, மடமை எண்ணிக் கடத்து செய்யடா(ம்)!" என்று மணிக்கு மணி உபதேசம் செய்கிறது.

அலாரம் மணியும் கடிகார மணியும் மாத்திரமேதான் என் வீட்டில் உண்டு. ஆஸ்திக அனுஷ்டானங்களில் ஈடுபட்டவனும் இருந்திருந்தால் பூஜை மணி ஒன்றும் இருந்திருக்கும். ஆயினும் என் வீட்டில் இல்லாத இந்தச் சிறிய குறையைப் பக்கத்து வீட்டுப் பஞ்சாக்ஷர சாஸ்திரிகள் நிவர்த்தி செய்திருக்கிறார். பஞ்ச பஞ்ச உஷத் காலம் முதல் பத்து மணி அடிக்கும் வரை பக்கத்து வீட்டுப் பூஜை மணி, அர்ச்சனை மந்திர உச்சாடனங்களுக்





இடையே, "ஹும் ஹ்ரீம் க்லீம்" என்று ஒலிக்கிறது. பத்து மணிக்குப் பக்கத்து வீட்டில் நைவேத்ய மணி அடிப்பதற்கும், இங்கே என் வீட்டில் எனக்கு நைவேத்யம் நடப்பதற்கும் கணக்காயிருக்கும். அண்டை வீட்டுப் பூஜை மணி, எனக்குச் சோற்று மணி!

மணி அடித்துச் சோறு போடுவது சத்திரங்களிலே வழக்கம்—அதாவது, சத்திரங்களில் சோறு போட்ட காலத்தில்!—இப்போது சத்திரங்களுக்குப் பதிலாக, ஹோட்டல்களில் சாப்பாடு போடுகிறார்கள். அங்கு மணி அடித்துப் போடுவதில்லை; போட்டு விட்டு மணி அடிக்கிறார்கள்—பணம் வசூலிப்பதற்காக! எப்படியாயினும், சாப்பாட்டுக்கும் மணிக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கத்தான் செய்கிறது. அன்னக் காவடியிலேகூட மணி கட்டியிருக்கிறதல்லவா?

விதவிதமான காவடிகளை, சேகண்டி மணி யோசையுடன் முருகதாஸர்கள், சுப்பிரமணிய ஸ்வாமி கோயிலுக்கு எடுத்துச் செல்கிறார்கள். கோயிலில் கபாடம் முதல் கர்ப்பக் கிரகம் வரை, எங்கிலும் மணி மயம். "ஓம் ஓம்" என்று சங்கு முழங்க, "வேல் வேல்" என்று மத்தளம் கோஷிக்க, புனித மணிகள் திருப்புகழ் பாடுகின்றன. வேலொத்த செஞ்சுடர்கள் அகல்களில் அசைந்தாட, பன்னீரும் சந்தனமும் கதம்ப மலர்களும் பரிமளத்தைப் பரப்ப, எண்ணிலாப் புண்ணிய மணிகள் சந்தாலங்காரம் ஓதுகின்றன. பக்தர்களின் செவிகளுக்கு மணியோசையானது, வெறும் வெண்கல நாதமல்ல; தெய்வீக திவ்ய கானமே யாகும்.

பக்தமணி நந்தனார், சிதம்பரநாதனைக் காணும் பொருட்டுப் பல நாள் வருந்தி நின்று, ஒரு நாளன்று கொள்ளிடக் கரையைக் கடந்து, தில்லையின் எல்லையையும் கடந்தார். அங்கிருந்து கண்டா மணி யோசையைக் கேட்டார். கேட்ட மாத்திரத்தில், "பிணி வாடுவதையும், பாவங்கள் போவதையும், பாசம் அறுவதையும்" உணர்ந்தார். பின்னர், தாண்டவ தரிசனத்துக்காக மேலும் வருந்தி நின்று, தவிதவித்து, நிக்ரஹித்துக் கடைசியில்,

"பக்தர்கள் மனது தித்திக்கத் தித்திக்கப்
பாதச் சிலம்பு சத்திக்கச் சத்திக்க"

அம்பலவாணன் நடனமாடுவதைக் கண்டார். குஞ்சிதபாதத்தை அலங்கரித்த செஞ்சிலம்பு, "ஜெணு தத்தக ஜெணு" என்று மணி மண்டபத்தை இன்னிசையினால் நிரப்பிற்று. அதோடு, நந்தனாரின் நெஞ்சகத்தைப் பரமானந்த நாதத்தினால் நிரப்பிற்று.

நடராஜனின் ஆனந்தக் கூத்தை, பரத நாட்டியத்தில் பிரதானமாய்க் கொண்டிருக்கிறார்கள். "கலீர் கலீர்"



என்று சதங்கை மணிகள் குலுங்க, சிறந்ததொரு நடன மணி, கனக சபையின் திருநடனத்தை ஆடிக்காட்டுகையில், நந்தனார் அடைந்த இன்பத்தில் ஓரளவாவது நாமும் அனுபவிக்கிறோம்.

சதங்கை மணிகளை நினைத்தாலே ஊர்வசியும், ரம்பையும், திலோத்தமையும் மன அரங்கிலே குதித்தாடுகிறார்கள். லய ஞானங்கள் செய்யும் மணியோசையிலே, அசையா மணி கட்டியாண்ட அரசர்களும், ஞான மணியைத் தேடித் தவங்கிடந்த முனி





வர்களும், மணி மணியாய்ப் பாடல்கள் புனைந்த கவிவாணர்களும், மணி வடிவங்கள் செதுக்கிய சிற்பிகளும், மனதைப் பறி கொடுத்தார்கள்.

முன் காலத்தில் ராஜசபைகளிலும், பிரபுக்களின் உல்லாச இல்லங்களிலும் தேவாலயங்களிலும் நடமாடிய சதங்கை மணிகள், இக்காலத்தில் எல்லோரும் எளிதில் காணக்கூடிய மேடைகளில் ஜல் ஜல் என்று சப்திக்கின்றன. எத்தனையோ சிறுமிகளும் யுவதிகளும், மருதாணிக் கோலமிட்ட பாதங்களில் சதங்கை மணி அணிந்து, விந்தை உற்சாகத்துடன் ஆடிக் களிக்கிறார்கள்; களிப்பூட்டுகிறார்கள். இவர்களின் மூலம் சதங்கை மணிகளுக்கு என்றுமில்லாத கௌரவம் ஏற்பட்டிருக்கிறது; பெருமை ஏற்பட்டிருக்கிறது.

சதங்கை மணியோசையானாலும் சரி, வேறு எந்த மணி யோசையானாலும் சரி, நம்மெல்லோருக்குமே கேட்க விருப்பமாயிருக்கிறது. இந்த விருப்பம், சின்னஞ் சிறு செப்புகள் காலிலே ஒலிக்க நாம் தவழ்ந்து விளையாடிய பருவத்திலேயே உண்டாகி, நம்முடன் வளர்ந்து வந்திருக்கிறது. நாம் ஆடிய தொட்டில்களில் மணிகளும் ஆடின; அந்த மணிகளுக்குப் போட்டியாகக் கிலுக்கு மணிகளை ஆட்டினோம். "டிக் டாக்" என்று கோவில் யானை மணி யடித்து, நம்மை மகிழ்வித்தது. ஆடுகளும் மாடுகளும் தலையை ஆட்டி மணி யடித்துக் களிப்பூட்டின. மிட்டாய்க் காரன் மணியடித்துத் தித்திப்பை ஊட்டினான் ....இப்படியாகப் பல மணிகளின் பல்வேறு ஓசைகளைக் கேட்டு ஆனந்தம் அடைந்தோம்.

சிறுவர் முதல் பெரியவர் வரை எல்லோருக்கும் பிரியமான மணிகளின் மகிமையை இன்னும் எவ்வளவோ வர்ணிக்கலாம். ஆயினும் எவ்வளவு வர்ணித்தாலும் மணிகளின் மகிமையை மணியே விளம்புவதற்கு ஈடாகாது.



# பூஜா பலன்

"எதற்காக அம்மா அழுகிறாய்?" என்று கேட்டார் கோதண்டராமய்யர் தமது பெண் பார்வதியைப் பார்த்து.

கோதண்டராமய்யர் ஈரோடில் வக்கீல். பார்வதி அவருக்கு ஒரே குழந்தையான படியால் அவளிடம் அதிக அன்பு பாராட்டினார். பார்வதி பதிலொன்றும் சொல்லாமல் அழுது கொண்டே இருந்தாள். அதற்குள் அவர் மனைவி செளரியம்மாள் கணவனுக்குக் காப்பியை மேஜைமேல் வைத்துக் கொண்டே, "விசாரிப்பீரோ. உங்கள் பெண்ணை யாரும் ஒன்றும் செய்து விட வில்லை. ஜயராமனுக்குக் காப்பி கொண்டுபோய்க் கொடு என்று சொன்னேன். இதற்காக, 'மேலுக்கும் கீழுக்கும் போய்க் கொண்டிருந்தால் பரீக்ஷைக்கு எப்பொழுது படிக்கிறது?' என்று சொல்லிவிட்டு அழுகிறாள்" என்றாள். பிறகு பார்வதியைப் பார்த்து, "நீ படித்து வக்கீல் வேலை செய்து எங்களுக்கெல்லாம் சம்பாதித்துப் போடப் போகிறாயாக்கும். உனக்கு ஜயராமனையே கல்யாணம் செய்து கொள்ள வேண்டியிருக்கும்" என்றாள்.

கோதண்டராமய்யர் "போதும்; சிறு பெண்களிடத்தில் இதெல்லாம் என்ன பேச்சு? நீ என்றைக்காவது பரீக்ஷைக்குப் படித்திருந்தால்தானே கோத்தின் அருமை தெரியும்? அந்தப் பயல் மேலே வந்து காப்பி சாப்பிடக் கூடாதா?" என்றார்.

ஜயராமன் செளரியம்மாளின் அண்ணன் ராமசுவாமி ஐயரின் பையன். ராமசுவாமி ஐயர் குளித்தலையில் ஒரு வக்கீல் குமாஸ்தா. குளித்தலைக் கருகில் அவருக்கு நன்செய் நிலமு மிருந்தது. ஜயராமன் ஒவ்வொரு வகுப்பிலும் தவறாமல் தவறிக் கொண்டு எஸ். எஸ். எல். ஸி. கரையைத் தாண்டி இண்டர்மீடியேட் காட்டில் கால் வைத்து மேலே போக வழி தெரியாமல் தவிப்பதைப் பார்த்துத் தகப்பனார் அவனைத் தம்மோடு கூட நிலத்தைப் பார்க்கத் தம் வலது கையாக அமைத்துக் கொண்டார். ராமசுவாமி அய்யர் வக்கீல் குமாஸ்தா வேலையோடு பொழுது போக்கிற்கு ஜோசியமும் பார்த்து வந்தார். அவர் பிள்ளை சதமாய் அடிக்கடி ஈரோட்டுக்கு வந்து தங்கையைப் பார்த்துப் போவதுண்டு. செளரியம்மாளுக்குப் பார்வதியை ஜயராமனுக்குக் கொடுத்து விவாகம் செய்துவிட வேண்டுமென்ற சங்கற்பம் வேரூன்றி யிருந்தது. நெருங்கிய பழக்கம், உணர்ச்சி வேறுபாடுடையவர்கள் விஷயத்தில் ஈடுபாட்டுக்குப் பதிலாக விரோதத்தையே உண்டாக்கும். பார்வதிக்கும் ஜயராமனுக்கு மிடையே வளர்ந்து கொண்டு வந்த மனஸ்தாபத்திற்குக் காரணம் இது ஒன்று மட்டுமல்ல.

இரண்டு வருஷங்களுக்கு முன்னால் திருச்சியிலிருந்து கோதண்டராமய்யருடன் கூடப் படித்தவரும் பழைய நண்பருமான வக்கீல் விசுவநாதய்யர் தமது பிள்ளை கோபாலனைப் பிரஸிடென்ஸி காலேஜில் சேர்ப்பதற்காகச் சென்னைக்குப் புறப்பட்டார். போகும் வழியில் ஈரோட்டில் இறங்கிக் கோதண்டராமய்யர் வீட்டில் ஒரு நாள் தங்கிவிட்டுப் போனார். அப்பொழுது பார்வதி கோபாலனிடத்தில் காண்பித்த நேசபாவத்தைக் கண்டு ஜயராமனுக்குப் பொறாமை ஏற்பட்டது. பார்வதி சித்திரத்தில் தன் திறமை

யைக் காட்டுவதற்காக மிகவும் சிரமப் பட்டு வரைந்த கோபாலனின் படத்தை ஜயராமன் பிடுங்கிக் கிழித்து விட்டான். பார்வதி அழுதாள். கோபாலன் "போனால் போகிறது! பார்த்து எழுதுவதைவிட ஞாபகம் வைத்துக் கொண்டு என்னைப் போல் ஒரு படம் எழுது" என்று சொன்னதைப் பார்வதி மறக்கவில்லை. கோபாலனும் விசுவநாதய்யரும் சென்னைக்குச் சென்ற பின் பார்வதி ஞாபகத்திலிருந்தே கோபாலன் மாதிரி ஒரு படம் வரைந்து பெட்டியில் வைத்திருந்தாள்.

* * *

இட்ட பெயரின் மகிமையோ என்னவோ, பார்வதி அழகுடன் கூட அழகை அதிகமாகத் தோற்றுவிக்கும் தெய்வ பக்தி, அடக்கம் முதலிய நல்ல குணங்களுடன் விளங்கினாள். தியாகய்யர், அருணாசலக்கவி, கோபாலகிருஷ்ண பாரதி முதலியவர்களின் கீர்த்தனங்களைப் பார்வதி வீணையுடன் பாடுவதைக் கேட்பதற்காகக் கோதண்டராமய்யர் கிளப்புக்குப் போவதைக்கூட ஒத்திப் போட்டுக் கொண்டிருந்து விடுவார். ஆனால் தெய்வம் சற்குணங்களைக் கொடுத்தால் அவற்றிற்குக் கடுமையான சோதனையும் வைத்து விடுகிறது.

பார்வதி எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷையையும் பால்ய பருவத்தையும் ஒருங்கே தாண்டினாள். கௌரியம்மாள் அவளை ஜயராமனுக்குக் கல்யாணம் செய்து விடும்படி கணவரை வற்புறுத்தினாள். "ஜயராமனுக்குக் கொடுத்தால் சாப்பாடு துணிக்குக் கவலை இல்லை. பணம் செலவழித்துப் படித்த பையன்களைப் பிடித்தாலும் அவர்களுக்கு வேலை அகப்படுவதில்லை. கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்காக அலைய வேண்டுமா?" என்றாள்.

கோதண்டராமய்யருக்குத் தம்முடைய செல்வப் பெண்ணை இன்டர்மீடியட்கூடத் தேறாத முரட்டுப் பையனுக்குக் கொடுக்க மனம் வரவில்லை. பார்வதிக்கும் ஜயராமனைக் கண்டால் பிடிக்கவில்லை என்று அவருக்கு நன்றாய்த் தெரியும். "கல்யாணத்திற்கு என்ன அவசரம்? அவளைச் சென்னை ராணிமேரிக் காலேஜிற்கு அனுப்பலாமென்று இருக்கிறேன்" என்றார்.

கௌரியம்மாள், "எனக்கென்ன? பெண்ணுக்கு வயதாகுது, வரன் தேடிக் கஷ்டப் படும் பொழுது தெரியும்" என்றாள். இரண்டு மூன்று பெரிய மனிதர்கள் பெண்களைத் தக்க வயதில் கல்யாணம் செய்யாமல் விட்டு விட்டு, பிறகு திண்டாடுவதை உதாரணம் கூறினாள்.

கோதண்டராமய்யர், "இருக்கலாம். அதற்காகத் தகுதி யற்றவனுக்கு அவசரப்பட்டுக் கொடுத்து விடுவதா?" என்று சொல்லி விட்டார்.

ஆனாலும் மனைவியின் வார்த்தை அவருடைய மனதில் பெருங் கவலையை உண்டாக்கிவிட்டது. "சீதைக்கு வயதானதைக் கண்டு ஜனக மகாராஜரே கவலைப்பட ஆரம்பித்தார் என்றால் நாம் எம்மாத்திரம்?" என்று ஒரு நாள் அவர் பெரிய யோசனை செய்து கொண்டிருக்கையில் வாசலில் ஒரு ஜட்கா வண்டி வந்து நின்ற சப்தம் கேட்டது. "வாசலில் போய்ப் பார்" என்று பார்வதியை ஏவினார். "மாமா தான் குளித்தலையிலிருந்து வந்திருப்பார்" என்று உற்சாகமாய் வாசலுக்குச் சென்ற பார்வதி, ஐம்பது வயதுக்கு மேற்பட்ட ஒரு பெரியவரும், இருபது வயதுள்ள ஒரு 'கிராப்' தலை வாலிபனும் வண்டியிலிருந்து இறங்குவதைக் கண்டு, "மாமா இல்லை; வேறு யாரோ வந்திருக்கிறார்கள்!" என்று பேப்பர் படித்துக் கொண்டிருந்த அப்பாவிடம் சிறிது நாணிய முகத்துடன் ஓடி வந்து சொன்னாள்.

கோதண்டராமய்யர் வெளியே போய் "வாருங்கள்! விசுவநாதய்யர்" என்று சந்தோஷத்துடன் வரவேற்றார்.

மனைவியிடம், "இவரை உனக்கு ஞாபகமிருக்கும். ஆறு வருஷங்களுக்கு முன் பிள்ளையுடன் இங்கே வந்திருக்கிறார்" என்று சொல்லி விசுவநாதய்யரைப் பார்த்து, "கோபாலன் இப்பொழுது எந்த வகுப்பில் படிக்கிறான்?" என்று கேட்டார்.

விசுவநாதய்யர் "அவன் பி. எஸ். ஸி. பாஸ் செய்துவிட்டான். சென்னையில் அவனுக்கு வேலை சம்பாதிக்கத்தான் போகிறேன்" என்றார்.

"பையனுக்குக் கல்யாணமாகி விட்டதா?" என்று கேட்டதற்கு, விசுவநாதய்யர், "இல்லை; வேலை கிடைத்த பிறகுதான் அந்த யோசனை" என்றார்.

இதற்குள் பார்வதி எல்லாருக்கும் காப்பி கொண்டு வந்து வைத்தாள். கோபாலனைப் பார்த்துக் கொண்டே திரும்பினவள் கதவில் இடித்துக் கொண்டு விட்டாள். கௌரியம்மாள் "எங்கே பார்த்துக் கொண்டு போகிறாய்?" என்று கேட்டாள்.

பார்வதி வெளியே வர வெட்கப் பட்டுத் தன்னறைக்குள் ஏதோ ஒரு புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள். விசுவநாதய்யரும் அவர் குமாரனும் அன்று இரவே சென்னைக்குப் போய் விட்டார்கள்.

கொஞ்ச நாள் கோதண்டராமய்யர் பார்வதியைச் சென்னைக்குப் படிக்க அனுப்பலாமா வேண்டாமா என்று யோசனை செய்து கொண்டிருந்தார். "கோபாலன் இருக்கிறானே, ஏன் அவனையே நம்ம பெண்ணுக்குக் கேட்கக் கூடாது!" என்று தீர்மானித்து விசுவநாதய்யருக்கு இதைப் பிரஸ்தாபித்துக் கடிதம் எழுதினார். "உமது பிள்ளை இருக்க நான் ஏன் வேறொருவனைத் தேடி அலைய வேண்டும்? நமது பழைய சிநேகிதத்தையும் பலப்படுத்தின மாதிரி இருக்கும். எனக்கு அவள் ஒரே குழந்தைதான். தெரிந்த இடத்தில் கொடுத்து விட்டால் நிம்மதியா யிருக்கலாம். இத்துடன் பெண்ணின் போட்டோவை அனுப்பி இருக்கிறேன்" என்று எழுதிவிட்டு, பார்வதியை அவள் படம் ஒன்றைத் தபாலில் அனுப்பக் காகிதத்தில் சுற்றி வைக்கும் படி சொன்னார். அவர் திரும்பி வரும் பொழுது பார்வதி எங்கேயோ போயிருந்தாள். அவள் மேஜை டிராயரைத் திறந்து பார்த்து அதில் தயாராகச் சுற்றி வைத்திருந்த போட்டோவை எடுத்து ஸ்டாம்பு ஒட்டித் தபாலில் போடச் சொல்லி ஆளிடம் கொடுத்து விட்டார். ஒரு வாரத்தில் அவருக்கு விசுவநாதய்யரிடமிருந்து பதில் வந்தது.

"நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. ஆனால் பெண்ணின் போட்டோவுக்குப் பதிலாக அவள் வரைந்த சித்திரம் ஒன்றுதான் வந்தது. கோபாலன் 'பார்வதியைப் பார்த்திருக்கிறேன், படம் தேவையில்லை' என்கிறான். பிள்ளையின் ஜாதகத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அதன் ஜாதகத்தைப் பார்த்து உமது ஜோசியர்

சி.ஆர்.ராமஸ்வாமி

அவனுக்கு இரண்டு வருஷத்திற்குள் ஏதோ ஆபத்து இருப்பதாகச் சொல்லியிருக்கிறார். எனக்கு ஜோஸியத்தில் நம்பிக்கை இல்லை. இருந்தாலும் பின்னால் மனஸ்தாபமில்லாதிருக்க வேண்டி உங்களிடம் ஒளிக்க விரும்பவில்லை ......." என்று எழுதியிருந்தார்.

கோதண்டராமய்யர் மஞ்சள் தடவின கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்ததைப் பார்த்துக் கௌரியம்மாள் தன்னைக் கேட்காமல் ஏதோ நடக்கிறதே என்று நினைத்து, "என்ன கடிதம்? யாரிடத்திலிருந்து வந்தது?" என்று விசாரித்தாள்.

கோதண்டராமய்யர் "விசுவநாதய்யர் அவர் பையனுடைய ஜாதகத்தை அனுப்பியிருக்கிறார்" என்றார்.

கௌரியம்மாள் ஜாதகத்தைத் தன் அண்ணனுக்கு அனுப்பினாள். அவர் "பையனுக்கு மூளைக் கோளாறு ஏற்படும் அறிகுறிகள் ஜாதகத்தில் காணப்படுகின்றன. ஒன்பதாவது ஸ்தானத்தில் சனி சந்திரனைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். தெரிந்து ஏன் துரதிர்ஷ்டத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்? என் பையன் ஜயராமன் ஜாதகத்திற்கும் பார்வதியின் ஜாதகத்திற்கும் அவ்வளவு பொருத்த மிருக்கையில் ஏன் பார்வதியை ஜயராமனுக்குக் கொடுக்கக் கூடாது?" என்று எழுதினார்.

கோதண்டராமய்யர், "ஜயராமன் ஜாதகம் பொருத்தமா யிருக்கலாம்; ஆனால் மற்ற விஷயங்கள் ஒன்றும் பொருத்தமா யில்லை. எனக்கு ஜோஸியத்தில் கொஞ்சங் கூட நம்பிக்கை யில்லை" என்று சொல்லிவிட்டு விசுவநாதய்யருக்கும் முகூர்த்தம் நிச்சயம் செய்யும்படி எழுதிவிட்டார்.

சுப முகூர்த்தத்தில் கோபாலனுக்கும், பார்வதிக்கும் கல்யாணம் சிறப்பாக நடந்தேறியது.



பார்வதி ஒரு கனவு கண்டாள். காற்றும் மழையும் பலமாக அடித்தது...............



கோபாலன் கல்யாணமான பின் சென்னைக்குச் சென்று, பிறகு, டெல்லிக்கருகில் எங்கேயோ சர்க்கரைத் தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்து விட்டான். அங்கிருந்து பார்வதிக்கு, "உனது இனிய கானம் என் காதில் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. கல்யாணத்தில் பார்த்த உனது அழகிய உருவம் என் மனக் கண்முன் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கிறது. வரும் தீபாவளியில் எனக்கு போனஸ் கிடைக்கும். அங்கே வந்து உன்னை அழைத்து வரச் சௌகரியமாயிருக்கும்" என்று எழுதி யிருந்தான்.

தீபாவளிக்கு ஒரு வாரமிருந்தது. பார்வதி கணவனுடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்தாள். தபால்காரனிட மிருந்து கடிதங்களை வாங்கும் பொறுப்பை அவளே ஏற்றுக் கொண்டாள். தீபாவளிக்கு மூன்று நாள் கோபாலனுக்குப் பதிலாக விசுவநாதய்யரிட மிருந்து ஒரு கடிதம்தான் கோதண்டராமய்யருக்கு வந்தது. அதை ஆவலுடன் தகப்பனாரிடம் தந்த பார்வதி, அவர் முகம் வாட்டமடைந்ததைப் பார்த்து, "என்ன, அப்பா! கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது?" என்று விசாரித்தாள். கோதண்டராமய்யர் அவளிடம் எப்படி உண்மையை மறைப்பார்? "[illegible]! கோபாலன் மோட்டார் சைக்கிளிலிருந்து விழுந்து மண்டையில் காயமடைந்து ஆஸ்பத்திரியில் இருக்கிறானாம். கவலைப் படாதே! எல்லாம் சரியாய்ப் போய் விடும்" என்று சுகசாசமும் சமாதானமும் சேர்ந்துச் சொன்னார்.

பார்வதிக்குத் தலை சுற்றிற்று. சமாளித்துக் கொண்டு பூஜை அறைக்குப் போய்த் தேவியின் முன் அரை மணி நேரம் பணிந்து கிடந்தாள்.

இரண்டு வாரம் கழித்து விசுவநாதய்யர் சென்னையிலிருந்து கோதண்டராமய்யருக்கு மற்றொரு கடிதம் எழுதியிருந்தார்:—

**"கோபாலனுக்கு மண்டைக் காயம் ஆறிவிட்டது. இங்கே அழைத்து வந்து விட்டோம். கொஞ்சம் ஞாபகக் கோளாறு ஏற்பட்டிருக்கிறது. அடிபட்டதற்கு முன் நடந்தது எதுவும் ஞாபகமில்லை. இன்னும் சில நாள் பார்வதி இங்கு வராமலிருப்பதே நல்லது. குணமான பின் வந்து பார்க்கலாம். கவலைப்பட வேண்டாம்.**

**விசுவநாதய்யர்."**

மாதங்கள் சென்றன. விசுவநாதய்யரிட மிருந்து "இன்னும் அப்படியேதா னிருக்கிறது" என்று கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. அடுத்த தீபாவளி வந்தது. பார்வதி ஒரு கனவு கண்டாள். காற்றும் மழையும் பலமாக அடித்தது. கோபாலன் பாட்டையிருடன் மழையில் நின்று கொண்டு அவளைக் கூப்பிட்டான். பார்வதி அவனை நோக்கி ஓடி அணைத்துக் கொண்டாள். கனவு தீர்ந்தது. பொழுது புலர்ந்தது. காலையில் தந்திக்காரன் தந்தி ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு இனாமுக்குக் காத்திருந்தான். கோதண்டராமய்யர் தந்தியைத் திகிலுடன் பிரித்துப் படித்தார்.

**"கோபாலன் உன்மத்தத்திலும் வீட்டை விட்டு மழையில் சென்றான். இடி விழுந்து பிரக்ஞை யற்றுக் கிடக்கிறான். பார்வதியை அழைத்து வரவும்.**

**விசுவநாதய்யர்."**

இதைக் கேட்டதும் கௌரியம்மாள் 'கோ' என்று கதறி அழுதாள். கோதண்டராமய்யர் "அழ வேண்டாம்" என்று தேங்காய், பழம் வாங்கி வரச் சொல்லிப் பார்வதியிடம் மௌனமாய்த் தந்தார். பார்வதி அதைத் தன் விக்கிரகத்தின் முன் உடைத்துச் சமர்ப்பித்து வேண்டிக் கொண்டாள். அவளுக்கு அந்த விக்கிரகத்தின் முகத்தில் புன் சிரிப்புத் தவழ்வதைக் கண்டமாதிரி தோன்றிற்று. அவளுடைய உள்ளத்திலும் காரணம் புரியாமல் சாந்தி தோன்றிற்று.



சென்னை எழும்பூர் ஸ்டேஷனுக்கு வந்ததும் ரயிலிலிருந்து இறங்கி விசுவநாதய்யர் புஷ்பம் விற்கும் பையனைக் கூப்பிட்டுக் கதம்பம் வாங்கினார். "தலையில் பூ வைத்துக் கொள்ளம்மா" என்று சொல்லி அதைப் பார்வதியிடம் தந்தார். பிறகு வண்டி ஏறி விசுவநாதய்யர் வீட்டிற்கு வந்தார்கள்.

வாசலில் விசுவநாதய்யர் டாக்டருடன் பேசிக் கொண்டிருந்தார். விசுவநாதய்யரின் மனைவி மீனாக்ஷியம்மாள் பார்வதியை அவள் கணவன் படுத்திருக்கும் அறைக்கு அழைத்துச் சென்று அருகில் உட்கார வைத்து விட்டு வெளியே சென்றாள்.

ஏகாந்தத்தில் பார்வதி கணவன் சாந்தம் குடிகொண்ட முகத்துடன் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். "அபாயமில்லை; நாடி நன்றாயிருக்கிறது", என்று வெளியிலிருந்து டாக்டர் சொல்லுவது காதில் விழுந்தது. இத்தனை நாள் அடக்கி யிருந்த துக்கம் கரையை யுடைத்துப் பெருகிற்று. கணவன் மார்பில் தலை சாய்த்தாள்.

"பார்வதி! நீயா?" என்ற வார்த்தைகளைக் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்தாள். கோபாலன் அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டிருப்பதைக் கண்டாள். துக்கக் கண்ணீர் ஆனந்தக் கண்ணீருடன் கலந்து கோபாலனின் முகத்தை நனைத்தது.

பிறகு பார்வதி கோபாலனுடைய விருப்பத்தின்படி அலமாரியிலிருந்த வீணையை எடுத்து "தொலி நே சேஸின" என்ற பூஜா பலன் கீர்த்தனையை மெதுவாய் வாசித்தாள். கீர்த்தனம் முடிந்த பின் கோபாலன் சிறிது நேரம் பேசினான். பேச்சு தெளிவா யிருந்தது. இழந்த நினைவுகளை மறுபடியும் பெற்றதாகத் தெரிந்தது.

டாக்டர் "இந்தமாதிரி இடியால் ஏற்பட்ட அதிர்ச்சி, சில சமயம் மூளைக் கோளாறுகளைச் சொஸ்தப் படுத்தி விடுவதுண்டு. இனிமேல் ஒரு தொந்தரவு மிராது" என்று தமது அபிப்பிராயத்தைத் தெரியப்படுத்தினார்.


மாப்பிள்ளை ஏமாற்றம்
தலை தீபாவளிக்குக் "கல்கி" தீபாவளி மலர் வாங்கிக் கொண்டு போனால் மாமனார் வீட்டில் நல்ல வரவேற்புக் கிடைக்கும் என்று மாப்பிள்ளை எதிர் பார்த்துக் கொண்டு போக........
மலருக்கு நல்ல வரவேற்புக்கிடைத்தது; ஆனால்...
...மாப்பிள்ளையைக் கவனிப்பாரில்லை!
~சாமா~

# மாப்பிள்ளை மறுபடியும் ஏமாறுகிறார்!




உயர்ந்த
நகைகள்
போன்.... 200..
தந்தி...
ஜூவெல்லர்
ஆர். ராமநாதன்
செட்டியார்
40,41, கீழ ஆவணிமூல வீதி, மதுரை.


பெண்மணிகள் விரும்பும்
நல்ல வேலைப் பாடுகள் நிறைந்த பலரக அழகிய பட்டுப் புடவைகள் பல்வித பார்டர்களில் ஏராளமாக வந்து குவிந்துள்ளன.
போன்: 8016
இன்றே விஜயம் செய்து உங்களுக்கு தேவையானதை பொறுக்கியெடுத்துக் கொள்ளுங்கள்.
ராதா ஸில்க்
எம்போரியம்,
1/14, ஸன்னதி தெரு
மைலாப்பூர்...... மதராஸ்.
பெரிய தெரு, கும்பகோணம்



கேச வளர்ச்சிக்கும்
குளிர்ச்சிக்கும்
இன்றியமையாத
டி. எஸ். ஆர்.
'கோகுல்' கூந்தல் தைலம்
சந்தனாதி தைலங்கள்
T.S.R.
டி. எஸ். ஆர் & கோ
கும்பகோணம்.

# ஆபத்சகாயம்

## ஸோமாஸ்




உமாவின் அழகையும் படிப்பையும் பற்றி நினைக்கும்போதெல்லாம் ஆபத்சகாயத்துக்குத் தம்மை யறியாமலே ஆபத்பாந்தவனாகிய ஆண்டவனைப் பற்றிய நினைப்பு வரும். உமாவுக்கு அழகையும் கல்வியறிவையும் கொடுத்த ஆண்டவன் அவளுக்குத் தக்க புருஷனையும் தேடித் தரவேண்டும் என்று அவர் சதா பிரார்த்தித்துக் கொள்வார். ஆண்டவனது சகாயம் இல்லாமல் தாமாகவே உமாவுக்கு வரன் தேடுவது மிகவும் சிரம சாத்தியமான காரியம் என்பது ஆபத்சகாயத்துக்கு நன்றாய்த் தெரிந்திருந்தது.

அறுபது ரூபாய் சம்பளத்தில் உபாத்தியாயர் வேலை பார்த்து வந்த அவரால் எப்படி உமாவுக்குப் பெரிய இடம் பார்க்க முடியும்? கல்யாணம் நடத்துவதற்குப் பெரிய இடம் வேண்டும் என்றாலே, இந்த நாளில், மிகவும் சிரமம். அப்படியிருக்கப் பெண்ணுக்கு வரன் 'பெரிய இட'மாகக் கிடைக்க வேண்டும் என்றால் கேட்க வேண்டுமா? ஆபத்சகாயம் 'வரன் தேடு படலம்' ஆரம்பித்து மிகவும் கஷ்டப்பட வேண்டி வந்தது.

ஆனால் அந்தச் சிரமத்திலும் ஒரு பெரிய சௌகரியம் இருந்தது. அவர் பள்ளிக்கூட உபாத்தியாயர் அல்லவா? ஆகையால் 'கல்யாண ஸீஸ'னும் கோடை விடுமுறையும் ஒத்துக் கொண்டு உமாவுக்கு வரன் தேடச் சௌகரியமாயிருந்தது. ஆபத்சகாயம் உமாவின் வரன் விஷயத்தில் மனத்தில் ஒரு புள்ளி போட்டு வைத்திருந்தார். அதாவது வக்கீல் கணபதி ஐயர் பிள்ளை பதஞ்சலிக்குத்தான் உமாவைக் கொடுக்க வேண்டும் என்பது அவர் விருப்பம். உமா ஹைஸ்கூல் மாணவியாகையால் அவள் சம்மதமும் அவளது விவாக விஷயத்தில் அவசியமாயிருந்தது. அவள் சம்மதத்தைப் பெறுவதற்கு ஆபத்சகாயத்துக்குச் சிரமம் சிறிதும் இருக்கவில்லை. எதிர் வீட்டில் குடியிருந்த பதஞ்சலியேதான் ஆபத்சகாயத்தின் அந்தச் சிரமத்தைத் தீர்த்து வைத்தான்.

உமா பள்ளிக்கூடத்துக்குப் போகும் போது பதஞ்சலியின் கண்கள் உமாவை ஊடுருவிப் பார்க்கும். குறும்புக்காரி உமா மாத்திரம் அவனைப் பார்க்காமல் இருந்தாளா? இல்லை. அவளும் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பதஞ்சலியின் தகப்பனார் கணபதி ஐயரை ஆபத்சகாயத்துக்கு நன்றாய்த் தெரியும். ஆனாலும் அவரிடம் சென்று பதஞ்சலியின் ஜாதகத்தைக் கேட்கும் அளவுக்கு ஆபத்சகாயத்துக்குத் தைரியம் வரவில்லை. காரணம் கணபதி ஐயர் கொஞ்சம் நல்ல ஸ்திதியில் இருந்ததுதான். எனினும் எப்படியோ ஒருநாள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு ஆபத்சகாயம் பதஞ்சலியின் தகப்பனாரிடம் சென்றார். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு மெதுவாக உமாவின் கல்யாண விஷயமாகப் பிரஸ்தாபித்தார்.

உமாவின் படிப்பு, பாட்டு, எல்லாவற்றுக்கும் மேலாக அழகு இவையாவும் சேர்ந்து அவளைத் தம் பிள்ளைக்கு விவாகம் செய்து கொள்ளப் பதஞ்சலியின் தகப்பனாருக்கு மிகவும் விருப்பத்தை உண்டாக்கியிருந்தன. ஆனால் சொற்ப வருவாயுள்ள பள்ளிக்கூட உபாத்தியாயரின் பெண்ணைத் தம் பிள்ளைக்கு வரதக்ஷிணை யில்லாமல் விவாகம் செய்து வைத்தால் அவர் சுய கௌரவம் என்ன வாகும்? இருந்தாலும் ஜாதகம் கேட்டால் மறுப்பது நியாயமல்ல என்று பதஞ்சலியின் ஜாதகத்தை ஆபத்சகாயத்தினிடம் கொடுத்தனுப்பினார்.

ஆபத்சகாயம் தமக்குத் தெரிந்த ஜோஸ்யர் ஒருவரிடம் உமாவின் ஜாதகத்தையும் பதஞ்சலியின் ஜாதகத்தையும் காட்டியதில் ஜாதகப் பொருத்தம் பிரமாதம் என்று தெரிந்தது.

ஆபத்சகாயம் மிகவும் ஆனந்தத்துடன் பதஞ்சலியின் தகப்பனார் கணபதி ஐயர் அவர்களிடம் வந்தார்.

"குழந்தை உமாவுக்கும் பதஞ்சலிக்கும் ஜாதகப் பொருத்தம் நன்றா யிருக்

கிறது. ஜோஸ்யர் சங்கர சாஸ்திரிகள் 'இந்த வரன்தான் உமாவுக்கு நடக்கும்' என்று ரொம்ப நிச்சயமாய்ச் சொல்லிருர். நீங்களும் ஜாதகம் பார்த்திருப்பீர்கள்" என்ருர்.

"இந்த விஷயங்களெல்லாம் பெண்ணையும் பிள்ளையையும் கேட்டுச் செய்ய வேண்டிய காரியம். அவர்கள்தான் ஏதாவது குற்றம் குறைகள் சொல்லிக் கொண்டிருப்பார்கள். என்னைப் பொருத்த வரையில் வரதக்ஷிணை கிதக்ஷிணை ஒன்றும் வேண்டாம். கல்யாணத்தை நன்ருய் நம்ம அந்தஸ்துக்குத் தக்கபடி செய்தால் போதும். ஆனல் வீட்டிலே 'இவள்' பையன் கல்யாண விஷயமாய் ஏதோ சொல்லணும் என்று அபிப்பிராயப் படுகிருள்!" என்ருர் கணபதி ஐயர் அசட்டுக் களையுடன்.

உடனே கூடத்துக்கு எதிரேயிருந்த அறையில் இலேசாக ஒரு உருவம் தோன்றுவது தெரிந்தது. அது வேறு யாரும் இல்லை. கணபதி ஐயருடைய சகதர்மிணிதான். உருவம் சரியாகத் தெரியாவிட்டாலும் குரல் மட்டும் மிகத் தெளிவாய்க் கேட்டது.

"கல்யாணத்தை நன்ருய்ச் செய்தால் போதும். 'கையிலே காலிலே' ஒன்றும் கொடுக்க வேண்டாம். குழந்தை 'வர' காலேஜுக்குப் போய் வரவேண்டியிருக்கிறது. அவனுக்குச் சின்னக் கார் ஒன்று வாங்கிக்கொடுத்து விடட்டும். மற்றப்படி சீர் வகையறாக்களெல்லாம் அவர்கள் சௌகரியப்படி இஷ்டப்படி செய்யட்டும்!" என்று கூறிவிட்டுக் கணபதி ஐயர் மனைவி மறைவிலேயே நின்ருள்.

ஆபத்சகாயத்துக்குத் தலையைச் சுற்றும் உள்ள பொருள்களெல்லாம் சுற்றுவது போல் இருந்தது. அவரால் அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை. மின்சார விசிறி சுற்றிக் கொண்டிருந்தும்கூட 'குப்'பென்று வியர்த்து விட்டது. வெளியே வந்து நேரே தம் வீட்டை யடைந்து 'ஈஸிசேரில்' சாய்ந்தார். உடனே அவர் மனைவி அவர் முன்பு காட்சி யளித்தாள்.

"என்ன, முகூர்த்தம் எப்போ வைக்கலாம் என்கிருர்கள்?" என்ருள் ஆபத்சகாயத்தின் மனைவி.

"முகூர்த்தமாவது ஒன்ருவது? அதெல்லாம் ஒன்றும் இல்லை. பதஞ்சலிக்கு நம்ம உமாவைக் கொடுப்பதாயிருந்தால் நான் ஜெயிலுக்குப் போக வேண்டியதுதான்!" என்று கூறி ஆபத்சகாயம் அலுத்துக் கொண்டார்.

"ஜெயிலுக்குப் போவானேன்?"

"திருடினால் ஜெயிலுக்குத்தானே போக வேணும்?"

"திருடுவானேன்?" என்று முகத்தில் வியப்புக்குறி தோன்றக் கேட்டாள் அவர் மனைவி.

"பின்னே இரண்டாயிரம் ரூபாய்க்கு நான் எங்கே போவேன்? திருடத்தான் போகணும்" என்ருர் ஆபத்சகாயம்.

"வரதக்ஷிணை கேட்கிருர்களா? போன மாசங்கூட அந்த அம்மாள் என்னிடம் 'ஒரு சல்லிக் காசுகூட வேண்டாமேயம்மா! உன் பெண் உமா தங்க விக்கிரகம் மாதிரி ஆத்திலே அடி யெடுத்து வைத்தால் போதாதா?' என்று சொன்னுளே!"

"இப்போதும் அதைத்தான் சொல்லுகிருள். உண்மையிலேயே ஒரு சல்லிக் காசுகூடக் கேட்கவில்லை! ஆனல் பிள்ளை காலேஜுக்குப் போவதற்கு ஒரு சின்னக்கார் மட்டும் வாங்கிக் கொடுத்தால் போதுமாம்!"

"அவள் இப்படிக் கேட்டதற்கு அவள் அகத்துக்காரர் வாயை மூடிக் கொண்டா இருந்தார்?"

"சுத்தப் பைத்தியக்காரியா யிருக்கிருயே! அந்த அம்மாள் பேசிய பின்பு அவர் பேசுவதற்கு என்ன இருக்கிறது? நீ ஏதாவது சொன்னல் நான் மறு வார்த்தை பேச முடிகிறதோ? அதைப் போலத்தான் அங்கேயும்!"

"போதும், பரிகாசம்! உமாவுக்குப் பதஞ்சலியை விட்டால் வேறு பையனே இல்லையா என்ன? அவளுக்கும் ஒருவன் எங்கேயாவது பிறந்துதான் இருப்பான். ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள். ஆண்டவன் காப்பாற்றுவான்!"

"ஆண்டவனாவது காப்பாற்றுவது? குழந்தையில்லை யென்று ராமேசுவரம் போகிருர்களே, பைத்தியக்காரர்கள்! அவர்கள் உபாத்தியாய வேலைக்கு






சந்நியாஸ ஆசிரமம் நாளுக்கு நாள் முன்னேறி வருகிறது!

---

வந்தால் போதும். தானே அவர்கள் மனக் குறை தீர்ந்து விடும்!"

ஆபத்சகாயத்தின் குரலில் ஆத்திர மும் சோகமும் கலந்து தொனித்தன.

* * *

ஆபத் சகாயம் உமாவின் கல்யா ணத்தைப் பற்றிய பேச்சையே அத் துடன் நிறுத்திவிட்டார். உமாவின் விவாக முயற்சி நின்று போகவே அவ ருக்கு வாழ்க்கையே அலுத்துப் போய் விட்டது. ஒரு நாள் ஆபத்சகாயம் மனம்போன போக்கில் எதேதோ சிந்தித்துக் கொண்டே செண்ட்ரல் ஸ்டேஷனுக்கு அருகில் தம்மை மறந்து நடந்து வந்து கொண்டிருந்தார்.

ஆகா! என்ன அவ்வளவு பெரிய கூட்டம் அங்கே? கூட்டத்துக்கு மத்தியில் கார் ஒன்று நின்று கொண் டிருந்தது. காருக்குச் சொந்தக்காரர் கவலை தோய்ந்த முகத்துடன் அருகில் நின்று கொண்டிருந்தார். கீழே ஆபத்சகாயம் நினைவிழந்து கிடந் தார். அந்த ஆபத்தான சமயத்தில் ஆபத்சகாயத்தை ஆபத்பாந்தவனான ஆண்டவன் அடியோடு கைவிட்டு விட வில்லை. ஆண்டவன் அவரைக் கைவிட்டிருந்தால் இந்த ஆபத்து வேறு எங்கேயாவது சேர்ந்திருக்கும். ஜெனரல் ஆஸ்பத்திரி வாசலிலேயே சொல்லி வைத்தாற் போல் இந்த ஆபத்து நேருவது என்றால் அது ஆண்டவனின் அருள் தானே!

போலீஸார் கார் நம்பரைக் குறித் துக்கொண்டு கார் சொந்தக்காரரிடம் கையெழுத்து வாங்கிக் கொண்டு அவரை அனுப்பி விட்டனர். அடுத்த நிமிஷம் ஆபத்சகாயம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார்.

வைத்திய பரிசோதனையில் ஆபத் சகாயத்தின் உயிருக்கு ஆபத்து இல்லை யென்றும் காலில் பலமாக அடிபட் டிருப்பதால் சில மாத காலம் கட்டுக் கட்டிச் சிகிச்சை செய்ய வேண்டும் என்றும் தெரிந்தது.

ஆபத்சகாயம் கொஞ்சம் கொஞ்ச மாகக் குணம் அடைந்து வந்தார். பந்து மித்திரர்கள் எல்லோரும் வந்து தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று என்று சொல்லித் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொண் டனர். அது உண்மையுங்கூடத்தான். விபத்து நேர்ந்த தினத்தில் தலைப் பாகை கோட்டு சகிதம் ஆபத்சகாயம் போய்க் கொண்டிருந்தார். விபத்து நேர்ந்தவுடன் அவர் தலைப்பாகைதான் முதலில் கீழே விழுந்து காரின் சக்க ரத்துக்கு அடியில், அகப்பட்டுக் கொண்டு நசுங்கி விட்டது. இல்லா விட்டால் அவர் தலை அகப்பட்டுக் கொண்டிருக்கும். எப்படியோ தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று!

ஆபத் சகாயம் ஆஸ்பத்திரியில் இருந்தபோதே அந்த விபத்தைப் பற்றிய வழக்கு கோர்ட்டில் நடை பெற்று வந்தது. விபத்தின் காரண மாக ஆபத் சகாயத்தினுடைய கால் சிறிது ஊனம் அடைந்தது. அதற்கு நஷ்ட ஈடாக மூவாயிரம் ரூபாய் காரின் சொந்தக்காரர் ஆபத் சகாயத்துக்குக் கொடுக்க வேண்டுமென்று தீர்ப்பா யிற்று. மேற்படி தொகைக்கு ஈடாக ஆபத் சகாயம் அந்தக் காரையே வாங் கிக் கொண்டார். கார் பதஞ்சலியின் வீட்டுக்குப்போயிற்று; பதஞ்சலி ஆபத் சகாயத்தின் மாப்பிள்ளை யானான். உமா பதஞ்சலியின் வீட்டுக்குப் போனாள்; பதஞ்சலி உமாவின் 'அகத்துக்காரர்' ஆனான். ஆபத் சகாயமும் அவர் மனைவி யும் ஆனந்த பரவசமானார்கள். ஆபத் சகாயத்தின் மனைவி "பெரிய ஆபத் தைக் கொடுத்த கடவுள் எப்படி அதன் மூலம் சகாயமும் செய்தார் பார்த்தீர்களா?" என்று சந்தோஷத் துடன் கணவனிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். பதஞ்சலியும் உமா வும் இதை யெல்லாம் கவனிக்கவே யில்லை. அவர்கள் இருவருக்குந்தான் ஒரு வரை யொருவர் கவனிப்பதற்கே பொழுது சரியாயிருக்கிறதே!

# தமிழ் நாட்டின்

ஒரு நாள் காலை நேரம். நானும் சில நண்பர்களும் கன்னியா குமரியிலிருந்து திருவனந்தபுரத்துக்குப் பயணம் புறப்பட்டோம். நாற்பது ஐம்பது மைல் மேடு பள்ளங்களின் வழியாக எல்லாம் நல்ல 'சிமெண்ட்' சாலை போடப்பட்டிருக்கிறது. அந்தச் சாலையில் காரில் போவதே ஒரு இன்பம். போகிற வழியெல்லாம் தோப்புகள், வயல்கள், ஆறுகள், சிற்றோடைகள், தாமரைத் தடாகங்கள்தான். கண் நிறைந்த காட்சியே எங்கும். நெய்யாற்றங் கரைக்குச் சிற்றப்புறம் (ஆம்; நெய்யாற்றங் கரையில் தண்ணீர்தான் ஓடுகிறது. நெய் ஆறாக ஓடுகிறது என்று நினைந்து அங்கு போய் ஏமாந்து விடாதீர்கள்.) ஒரு பெரிய தடாகம். தெளிந்த தண்ணீர் அதில் நிறைந்திருக்கிறது. பக்கத்திலே சேறு பட்ட வயல்கள். தடாகத்திலும் இந்த வயல்களிலும் செவ்வாம்பல் பூக்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கின்றன. காதலன் வரவை நோக்கும் காதலியைப் போல உதய சூரியன் ஆகாய வீதியிலே வர வர மெள்ள மெள்ள இதழ் விரித்துச் சிரிக்க ஆரம்பிக்கின்றன மலர்கள். இந்த மலர்களுக்கு இடையிடையே அன்னப் பறவைகள் அங்குமிங்கும் நீந்திக் கொண்டிருக்கின்றன. அன்னப் பறவைகளின் குஞ்சுகளும் தாய்மாரோடே நீந்துகின்றன. கொஞ்ச நேரத்தில் தடாகம் முழுவதும் செக்கச் செவேர் என்னும்படி தாமரைப் பூக்கள் மலர்ந்து விடுகின்றன. அந்தக் காட்சி தண்ணீரிலே தீப்பற்றிக் கொண்டது போலத் தோன்றுகிறது. தாய்ப் பறவைகள் "ஐயோ! நம் குஞ்சுகள் இந்தத் தீயின் வெம்மையில் வெம்பிப் போய்விடக் கூடாதே" என்று அஞ்சித் தத்தம் குஞ்சுகளைத் தங்களுடைய சிறகுகளால் அணைத்து ஒடுக்கிக் கொள்கின்றன. இப்படியெல்லாம் ஒரு காட்சியை இன்று நாம் பார்க்கிறோம். இதே காட்சியை இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பும் ஒரு கவிஞர் பார்த்திருக்கிறார். பார்த்தவர்,

> "அள்ளற் பழனத்து
> அரக்காம்பல் வாய் அவிழ
> வெள்ளம் தீப்பட்டது
> என வெரீஇப்—புள்ளினம் தம்
> கைச் சிறகால் பார்ப் பொடுக்கும்"
>
> (முத்தொள்ளாயிரம்)

காட்சியை ஒரு நல்ல பாட்டிலே அமைத்தும் வைத்திருக்கிறார். ஒரு அற்புத சித்திரத்தை அழகிய சொல்லிலே தீட்டி வைத்திருக்கிறார் என்றும் சொல்லலாம்.



கமல சரவணம் — ஒரு 'குளோஸ் அப்'

## 2

இதைவிட அழகான ஒரு ஓவியத்தைக் கல்லிலே தீட்டி வைத்திருக்கிறான் ஒரு சக்கரவர்த்தி. இன்றைக்கு ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்னாலே எழுதப்பட்ட அந்தச் சித்திரத்திலே நல்ல அழகான தாமரைத் தடாகம் ஒன்று உண்டு. தடாகம் முழுவதும் மலர் மயந்தான். அன்னப் பறவைகளும் குஞ்சுகளும் வெள்ளம் தீப்பட்டது என அஞ்சி நிற்கும் காட்சியெல்லாம் மிக மிக அழகு. தடாகத்தில் அன்னப் பறவைகள் மட்டுமல்ல, யானைகளும் மாடுகளும் வேறு இறங்கிக் குழப்புகின்றன. தாமரைத் தடாகம் என்றால் பறவைகளுக்கும் விலங்கினங்களுக்கும் தானா? மக்களுக்கு இல்லையா? ஆதலால் புதுப் புனல் குடையும் ஆடவர் சிலரையும் அங்கே காண

# அஜந்தா



மகேந்திர வர்மன்

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் எம்.ஏ.

இருக்கும். பெண்டிரும் இருந்திருக்க வேண்டும் என்று கொஞ்சம் கற்பனையும் செய்து கொள்ளலாம். இப்படிப் பட்ட ஒரு காட்சியை **சித்தன்னவாசல்** சமணக் குகைக் கோயிலிலே முகக் கட்டின் விதானத்திலே தீட்டித் திருக்கிறான் **மன்னன் மகேந்திர வர்மன்.** ஜைனர்களுடைய சுவர்க்கம் ஆகிய **சமவ சரணப் பொய்கை** யையே சித்திரிக்க முயன்றிருக்கிறான். எல்லாம் கல்லின் மேல் சுண்ணாம்பு பூசி அதன்மேல் என்றும் அழியா வர்ணங்களைக் குழைத்துத் தீட்டிய சித்திரங்கள்தான்.

சித்தன்ன வாசலைத் **தமிழ் நாட்டின் அஜந்தா** என்று சொல்லலாம். அஜந்தா செல்ல அவகாசம் இல்லாதவர்கள் சித்தன்ன வாசலுக்கு நடையைக் கட்டலாம். **தொண்டைமான் புதுக்கோட்டை**க்குச் சென்று அங்கிருந்து காரிலோ வண்டியிலோ நேரே மேற்கே சென்றால் இந்தக் குகை வாயிலின் முன் கொண்டு விடும். பின் அங்குள்ள இரும்புக் கிராதியைக் காவலன் மூலம் திறந்து உள்ளே சென்று முகக் கட்டில் நுழைய வேண்டும். கொஞ்சம் நம்முடைய கௌரவத்தை யெல்லாம் கட்டித் தூர வைத்து விட்டு, மேலே கிடக்கும் துண்டை எடுத்துக் கீழே விரித்து அதில் படுத்துக் கொண்டு அண்ணாந்து பார்த்தால் பார்க்கலாம் நான் மேலே சொன்ன சித்திரங்களை. கொஞ்ச நேரம் இமை கொட்டாது பார்த்தால் அந்தச் **சித்திரக்காரப் புலி** செய்துள்ள வர்ண விஸ்தாரங்கள் அழகிய காட்சிகள் எல்லாம் தத்ரூபமாய்க் காட்சி அளிக்க ஆரம்பித்து விடும். படுத்தவர்கள் அப்படியே மயக்கம் போட்டு விடாமல் துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு மற்றக் காட்சிகளையும் பார்க்கலாம். தடுப்பவர் ஒருவருமே கிடையாது.

3

சித்தன்னவாசல் குகைக் கோயில் மிகவும் சிறிய கோயில்தான். உள்ளே ஒரு சதுரமான அறையும், வெளியே ஒரு நீண்ட தாழ்வாரமுமே. எல்லாம் கருங்கல் மலையிலே குடையப்பட்டிருக்கிறது. தாழ்வாரத்துப் பக்கச் சுவர்களில் இரண்டு சிலைகள். வடக்கே பார்த்து இருப்பவர் **பார்ஸ்வ நாதர்.** அவரை ஜைன தீர்த்தங்கரர் இருபத்தி நாலு பேர்களில் ஒருவர் என்கிறார்கள். அவருடைய தலைமீது படமெடுத்த நாகம் விரிந்து குடை பிடிக்கிறது. தென்புறம் பார்க்க இருப்பவர் ஜைன குரு **ஆச்சாரியார்.** இவருக்குச் சாதாரண குடையே தான். இருவரும் அர்த்த பத்மாசனத்தில் தியானத்தில் இருக்கிறார்கள். இந்தச் சிலைகள் கல்லில் செதுக்கிய சிலைகள். மேலே வர்ணம் பூசப்பட்டுப் பின்னும் உயிர்த்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

மேல் விதானத்தையும் பக்கச் சுவர்களையும் விட்டுக் கொஞ்சம் அந்த மண்டபத்தைத் தாங்கி நிற்பதுபோல் செதுக்கப்பட்டுள்ள தூண்களைப் பார்த்தால் உலகமே கண்டு அதிசயிக்கத் தகுந்த இரண்டு அழகிய சித்திரங்களைப் பார்ப்போம். வடபுறத்தில் **ஒரு நடன மாதைப்** பார்க்கிறோம். அவளுடைய அங்கங்களிலே ஒரு குழைவு; கண்களிலே ஒரு கவர்ச்சி; அணிகளிலே ஒரு வியப்பு. அவளது ரோஜா வர்ண உடல்



சமவ சரணம் — சித்தன்ன வாசல்




மாமியார் :—காலையில் எழுந்து வெளியே போன மாப்பிள்ளையை இன்னும் காணுமே? வெந்நீர் ஆறிப் போகிறதே!
வேலைக்காரன்:—மாப்பிள்ளை ஐயா அங்கே [illegible] கொடுக்கிறாங்கன்னு 'க்யூ'விலே நின்னுகிட்டு இருக்காரு, அம்மா!

அழகும், கரும் கூந்தலில் தாமரை சொருகியிருக்கும் நேர்த்தியும் நம்மை மயக்கவே செய்யும். அவளது தோற்றத்திலும் நடனத்திலும் நாம் உள்ளத்தைப் பறி கொடுத்து விடாமல் கொஞ்சம் கண்களைத் திருப்பி அடுத்த தூணைப் பார்த்தால் அங்கே காட்சி கொடுக்க மகேந்திரவர்மனே காத்து நிற்கிறான். **மகேந்திரவர்மன்**, பெரிய வீரன், நல்ல கவிஞன், சங்கீத ஆராய்ச்சியில் ஆதி கர்த்தா, மத்த விலாச நாடகாசிரியன், பெரிய சித்திரக்காரப் புலி என்றெல்லாம் படித்திருக்கிறோம். மற்ற விஷயங்கள் எல்லாம் உண்மையோ என்னவோ தெரியாது. ஆனால் அவன் ஒரு பெரிய சித்திரக்காரப் புலி என்பதில் என்னவும் சந்தேகம் இல்லைதான். அவனுடைய காம்பீர்யம் அவனுடைய மகுடத்திலேயே தெரிகிறது. அவனுடைய முகத்திலோ களை சொட்டுகிறது. "நல்ல பணியை நாமும் தமிழ் நாட்டில் செய்து முடித்து விட்டோம்" என்ற ஆத்ம திருப்தியை அவன் கண்களிலே காண்கின்றோம். ஆனால் ஒரே ஒரு எச்சரிக்கை. இந்த இரண்டு சித்திரங்களையும் பார்ப்பதற்கு [illegible] திருஷ்டி வேண்டும். மங்கிய சித்திரங்கள்தான் அங்கே இப்போது இருக்கின்றன. கண்ணாடிக் கண்ணர்கள் யாராவது போய், 'ஒன்றுமே தெரியவில்லையே' என்று சொன்னால் அதற்கு நான் பொறுப்பாளியல்ல.

4

வெளித் தாழ்வாரத்தை விட்டு உள்ளே சென்றால் அங்கும் சுவரெல்லாம் சித்திரம். பல இடங்கள் பொரிந்து விழுந்து விட்டன என்றாலும் விதானத்தில் எழுதப்பட்டுள்ள சித்திரம் மட்டும் அழியாமல் இருக்கிறது. கம்பளம் விரித்தாற் போன்ற சித்திரம் வெகு அழகாய் இருக்கிறது. ஜைனர்கள் கற்பனை செய்துள்ள தெய்வலோகக் காட்சியே அங்கு சித்திரிக்கப் பட்டிருக்கிறது. அங்கும் மூன்று தீர்த்தங்கரர்களின் உருவம் கல்லில் செதுக்கப் பட்டுள்ளது. இந்த குகைக் கோயிலைப் பல்லவ சக்கரவர்த்தி மகேந்திரவர்மன், அப்பர் பெருமான் அருளால் சைவ சமயத்தைத் தழுவுவதற்கு முன் செய்து முடித்திருக்க வேண்டும் என்று யூகிக்கிறார்கள் சரித்திரக்காரப் புலிகள். ஜைனனாக இருக்கும்போதே இந்தச் சித்திரங்களை எழுதியிருக்க வேண்டும் என்று வேறு சொல்கிறார்கள். மன்னன் மகேந்திரனைப் போன்ற மகா ரஸிகர்கள், ஜாதி மதபேதங்களுக் கெல்லாம் அப்பாற் பட்டவர்கள். இதைப் பற்றி யெல்லாம் விவாதமும் ஆராய்ச்சியும் நமக் கென்னத்திற்கு? நாம் பார்த்து அனுபவிக்க வேண்டிய தெல்லாம் அவனும் அவனுடைய சகாக்களும் தீட்டி வைத்திருக்கும் சித்திரங்களைத் தானே? சித்திரங்கள் ஆயிரம் வருஷங்களுக்கு மேலாகவே அழியாதிருப்பது அதிசயத்திலும் அதிசயமே. மூலிகைகளிலிருந்து எடுத்த வர்ணம் என்று மட்டும் சொல்வதற்கில்லை. உலோகங்களிலிருந்தும் வர்ணத்தை வடித்தெடுத்திருப்பார்கள் போல் தோன்றுகிறது. சாதாரண வர்ணத்தில் கூட இந்தச் சித்திரங்களைத் தீட்டி உங்கள் கண்களுக்கு விருந்தளிக்க என்னால் இயலவில்லை. ஏதோ பேருச் சித்திரங்களைத் தந்தே உங்களைத் திருப்தி செய்யவேண்டியிருக்கிறது. நமக்கும் ஒரு 'அஜந்தா' உண்டு. அதை நாமும் பார்த்து விட்டோம் என்று கொஞ்சம் திருப்தி அடையலாம் அல்லவா!

# வருஷத்துக்கு ஒருநாள்





ஸ்ரீகாம் குருஸ்வாமி

பார்க்கப் போனால், வருஷத்திற்கு ஒரு நாள் தான். ஆனால் ஒரு வருஷத்தைப் போலவா மற்றொரு வருஷம்!

"வைத்தியத்தைப் பார்த்தாயா! நமது கமலியை அதற்கு ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது" என்று கேலியாகப் பேசிக் கொண்டார்கள் வக்கீல் வீட்டார். இது போன தீபாவளியின் போது.

* ° °

வக்கீல் சோமசுந்தரத்தின் வீட்டில் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தேன். முதலில் கோபி மாத்திரம் படித்தான்; அப்புறம் அவன் தம்பி விசுவும் சேர்ந்தான். பழகிப் போனதில் எல்லோரும் பட்சமாக இருந்தார்கள் என்னிடம். தீபாவளி யன்றைக்கு வரச்சொல்லி யிருந்தார்கள். நம்முடைய மனதிற்குள் குதூகலம் இல்லா விட்டால் என்ன? பிறர் சந்தோஷப் படுவதைப் பார்ப்பதே சந்தோஷம் அல்லவா? அன்றைக்குப் பாடம் இல்லை என்றாலும், கூப்பிட்ட மரியாதைக்குப் போனேன்.

கட்சிக் காரர்கள் கூட்டம் அந்த வீட்டில் மாத்திரம் என்றைக்கும் ஒரே மாதிரி. [illegible] கச்சேரி சாத்தியிருந்தாலும் கூட, வாய்தா தேதிக்கு ஒரு வாரத்திற்கு முன்னிருந்தே கட்சிக்காரர்கள் காத்திருப்பார்கள். அப்போது தான் சமயம் பார்த்து விவரம் முழுவதும் நன்றாகக் கேட்டுத் தெரிந்துகொள்ள முடியும். சில பேர் [illegible] ராத்திரி ஒன்பது மணிக்கும் பத்து மணிக்கும் வருவார்கள். வெளியூரிலிருந்து வரப்பட்டவர்கள் வராண்டாவிலேயே ராத்திரி படுத்துக் கொள்வார்கள். வராண்டாவில் விஸ்தாரமாக வேண்டிய இடம் இருந்தது.

என்னைப் பார்த்ததும், "நீயார் அம்மா? உனக்குச் சொந்த ஊர் எது? கல்யாணம் ஆயிற்று?" என்றெல்லாம் மேலும் மேலும் கேள்வி கேட்பார்கள். எல்லாவற்றிற்கும் பொறுமையாகப் பதில் சொல்வேன். ஆனால் பதிலுக்கு அவர்களைப் பற்றி ஒரு விஷயம்கூட நான் கேட்பதில்லை. என்னுடைய சுபாவமே அப்படி.

"இவளுக்கு விவகாரம் வந்தாலும் வந்தது. நாளில்லை, பொழுதில்லை. வந்து இப்படி உட்கார்ந்து விடுறேன். ஒவ்வொரு மகசூலுக்கும் தகராறு. உடனே வக்கீல் வீட்டிற்கு ஓட்டம். தீபாவளி சமயம் பார்த்துக் குறுவை மகசூல். சம்பாவுக்குச் சங்கராந்தி. ஆண்டு அனுபவிக்கிறதுக்குத் தம்பிள்ளை தமையனாகப் பார்த்து ஒருத்தன் சம்பாதித்து வைத்திருக்கிறானே—அவனைச் சொல்ல வேணும்!" என்று சரமாரியாகப் பேசுவாள் வக்கீலின் சம்சாரம். ஆனால் அந்தத் தம்பிள்ளை அம்மாள் அப்படி வருவதைக் குறித்து உள்ளூறச் சந்தோஷம் தான் வக்கீலின் சம்சாரத்திற்கு. "வைத்தியம் என்றாலும் நன்றாக விதரணை தெரிகிறது" என்று சேர்த்துச் சொல்லிக் கொள்வாள். வக்கீலுக்குச் சன்மானம் செய்வதோடு நிற்பதில்லை, கட்சிக்காரியாக வரும் அந்த அம்மாள். வக்கீல் வீட்டிலுள்ள ஒவ்வொருவரையும் திருப்தி செய்து வந்தாள். குழந்தைகளுக்குத் தின் பண்டம்; வக்கீலின் பெரிய பெண்களுக்கு அவ்வப்போது வெள்ளிப் பாத்திரங்கள்; மிகவும் குஷியாக இருந்த சமயம் வக்கீல் சம்சாரத்திற்கு ஒரு கல்லிழைத்த அட்டிகைகூட வாங்கிக் கொடுத்தாள்.

வக்கீலுக்கு ஒரு வகையில் உறவு என்ற விஷயமும் இருந்தது. அந்த அம்மாள் வந்தால், "தில்லை அத்தை வந்து விட்டார், தில்லை அத்தை வந்து விட்டார்" என்று ஒவ்வொருவரும் குதிப்பார்கள். தினம் ஒரு வேளை தான் சாப்பாடு அந்த அம்மாளுக்கு. அந்த ஒரு வேளைச் சாப்பாடு அங்கேதான் சாப்பிட வேண்டும் என்று ஆசார உபசாரம். அம்மாள் அந்தப் பக்கம் எழுந்து போனபிறகு கேலியும் பரிகாசமும். வைத்தியம் என்று அவளைக் குறித்து அனுதாபப்படுவது போல் சிரிப்பதும் அப்போது தான். அந்த அம்மாள் நாற்காலியில் உட்காருவது போலவும் பேசுவது போலவும் அபிநயம் செய்து காட்டுவார்கள். நாலைந்து நாளும் இதே நாடகம்.

கட்சிக்காரி அம்மாளின் புருஷர் சிங்கப்பூரில் நிறையச் சம்பாதித்தாராம். இங்கே திரும்பி வந்து பல இடங்களில் நிலமும் வீடும் வாங்கினார். ரொக்கமும் பத்திரமாக வைத்திருந்தார். பிள்ளையில்லை. அவர் காலமாகி விட்டதும் சொத்துக்களைப் பராமரிக்கும் பொறுப்பு அவர் சம்சாரத்தைச் சேர்ந்து விட்டது. உரிமை யில்லாதவர்கள் கூட 'ஆனமட்டும் ஆக்கிரமித்துப் பார்ப்போம், அகப்பட்ட மட்டில் லாபம். அந்த அம்மாள் வாதியாகப் போய், சாட்சிகள் காலில் விழுந்து, முறையாக்கிக் கொண்டு வரும்போது பார்த்துக் கொள்ளலாம்' என்று முனைந்தார்கள். அந்த அம்மாளுக்குப் பணம் நிறைய செலவழிந்தது; ஆனால் அவர்கள் முயற்சி பலிக்கவில்லை. வக்கீல் சோமசுந்தரம் அந்த மட்டில் உறுதியாகப் பார்த்துக் கொண்டார். இந்த விவரம் அவர் குடும்பத்தில் உள்ளவர்கள் அவ்வப்போது பேசிக் கொண்டதிலிருந்து நான் அறிந்தது.

° ° °

"ஏன்டி, பெண்ணே! இப்படி வா! உன்னை நன்றாகப் பார்க்க வேணும்" என்று சொல்வது யாரைப் பார்த்தோ என்று நான் பேசாதிருப்பேன். ஆனால் என் கையைப் பிடித்து இழுத்தபோதுதான் சட்டென்று நின்று ஒரு கணம் முகத்தை ஏறிட்டுப் பார்த்

தேன். "ஏழெட்டு மாசத்திற்கு முன்னாடி வந்த போதே உன்னைப் பற்றிக் கேட்கவேணும் என்று இருந்தேன். அப்போது பார்த்ததற்கு இப்போது இளைத்துப் போயிருக்கிறாயே! அப்போதே உன்னோடு பேசாமல் போனது இன்னும் என் மனசை உறுத்திக் கொண்டிருக்கிறது" என்றாள் கட்சிக்காரி அம்மாள்.

இவ்வளவு பரிவோடு என் தாயார் கூட என்னைப் பார்த்துப் பேசியதில்லை. அந்தக் குரலில் இருந்த அன்புத் துடிப்பும் கலங்கமில்லாத அவளுடைய பார்வையும் என்னை என்னவோ செய்தது. பதில் சொல்ல முடியாமல் சற்று நிதானப்படுத்திக் கொண்டு நின்றேன். இவளையா பைத்தியம் என்கிறார்கள்!

"உனக்கு என்ன வயசாகிறது?"

"பதினேழு."

"ஏன் இன்னும் கல்யாணம் செய்து கொள்ளவில்லை? தாயார் தகப்பனார் இல்லையா?"

இதற்கு நான் மௌனமாகத் தலையசைத்து 'இல்லை' என்று பதில் சொன்னேன்.

"எவ்வளவு படித்திருக்கிறாய்?"

"பத்தாவது வகுப்போடு நிறுத்தி விட்டேன்."

"இவ்வளவுதானா? பி. ஏ. க்குக் குறையாது என்று நினைத்தேன்!"

மறுபடியும் நான் மௌனம் சாதித்தேன்.

"என்னிடத்தில் ஒன்றையும் ஒளிக்காமல் சொல்லு. வீட்டில் யார் யார் இருக்கிறார்கள் உன்னோடு?"

"சித்தி இருக்கிறாள்; எங்கள் அப்பாவுக்கு இளையாள். அப்புறம்........"

"அப்புறம்?"

"அத்தான் ஒருத்தர்; அவருக்கும் தாயார் தகப்பனார் இல்லை. சாப்பிட மட்டும் வீட்டிற்கு வருகிறார். கடையிலேயே படுத்துக்கொள்வார்."

"கடை யென்றால் என்ன கடை?"

"கம்பௌண்டர் பரீட்சை தேறியிருக்கிறார். இங்கிலீஷ் மருந்துக் கடையில் உத்தியோகம்."

"என்ன வயசு இருக்கும்?"

"இருபத்தி நாலு."

"அவனை நீ கல்யாணம் செய்து கொள்ளலாம் அல்லவா? உனக்குப் பிடித்த இடந்தானே?"

"வெகு நாளாய்ப் பேச்சு அப்படித்தான். ஆனால் பிராப்தம் வேண்டாமா?"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

"அப்பா வைத்துவிட்டுப் போன சொத்தெல்லாம் கடன்காரனுக்குப் போய்விட்டது. நாங்கள் சம்பாதிக்கிறது மூன்று பேர் சாப்பாட்டிற்குத்தான் காணும்."

"உன் பேர் என்ன சொன்னாய்?"

"கமலி."

"ஊரில் இல்லாத பெயராயிருக்கிறதே. சரி; உன்னை நான் நாளைக்குப் பார்க்கிறேன்."

இப்படி அந்த அம்மாள் என்னிடம் நாலு வார்த்தை பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுவிட்டுத்தான், "நமது கமலியை அந்தப் பைத்தியத்திற்கு ரொம்பவும் பிடித்துப்போய் விட்டது" என்று வக்கீல் வீட்டில் எல்லோரும் கேலி செய்தார்கள்.



..."என் வீட்டுக்கு வரும் கட்சிக்காரர்களுடன் நீ பேசுவது உண்டா?" என்று வக்கீல் கேட்டார்...

அப்புறம் அந்த அம்மாளை நான் பார்க்கவில்லை.

கோர்ட் சாத்துகிற சமயம். அதனால் வக்கீல் வீட்டிலும் காத்துக் கிடப்பவர்கள் இல்லை. குழந்தைகளுக்குப் பரீட்சை முடிந்ததும் எல்லோருமாகக் கோடைக்கானல் கிளம்பிவிடுவார்கள். மும்முரமாக இரண்டு குழந்தைகளுக்கும் ஏக காலத்தில் கவுனைத் தூலையில் ஏந்திக்கொண்டிருந்தேன். "சாவித்திரி! உன்னைத்தானே! இங்கே வா!" என்று இரைந்து கூப்பிட்டார், முன் பக்கம் ஆபீஸிலிருந்து வக்கீல். தபால்காரன் வந்து விட்டுப் போனான்போலிருக்கிறது. வக்கீல் சம்சாரமும் வீட்டின் உள்ளே இருந்த நடையைத் தாண்டிக்கொண்டு ஆபீஸ் பக்கம் போனாள். "பிரைவேட் வாத்தியார் வந்திருந்தால் அவளை நான் கூப்பிட்டேன் என்று வரச்சொல்லு" என்றார் வக்கீல். அது என் காதில் விழுந்தது.

* * *

"என் வீட்டிற்கு வரும் கட்சிக்காரரோடு நீ பேசுவது உண்டா?" என்று வக்கீல் கேட்டார்.

திடீரென்று என்னை இப்படிக் கேட்பதற்கு என்ன காரணம் என்று நினைத்தேன்.

"என்ன கேள்வி இது? அவள் உண்டு. அவள் காரியம் உண்டு. ஒருத்தரோடு அவள் பேசி நான் அறியேன்" என்று எனக்காகப் பரிந்து பேசினாள் சாவித்திரி அம்மாள்.

"நாங்கள் இங்கே தரும் சம்பளம் குறைவு என்று யாரிடத்திலாவது புகார் சொன்னதுண்டா?"

சற்றுத் தைரியம் பிறந்தது. "யாரிடத்திலும் அதைப் பற்றி நான் வாயைத் திறந்ததில்லையே!" என்றேன்.

"சரி; பாரோதி அம்மாளுக்கு உன் மேல் அவ்வளவு சிரத்தை ஏற்படக் காரணம்?"

"ஏன்? அந்தப் பைத்தியம் என்ன செய்திருக்கிறது?" என்று சாவித்திரி அம்மாள் கேட்ட பிறகுதான் எனக்குப் பாரோதி அம்மாள் என்பது யார் என்று பிடிபட்டது.

வக்கீல் சாவித்திரி அம்மாளின் கேள்விக்குப் பதில் சொன்னார்:

"சொத்தை யெல்லாம் தர்மத்திற்கு எழுதி வைப்பதற்காக உயில் ஒன்று கேட்டிருந்தாள். முக்கியமாக எழுத வேண்டிய தோரணையில் ஒரு நகல் அனுப்பி யிருந்தேன். சாகும்போது ஸப்-ரிஜிஸ்ட்ராரை வீட்டில் வரவழைத்து ரிஜிஸ்டர் செய்யச் சொல்லி யிருக்கிறாள். அதில் '**வக்கீல் சோமசுந்தரம் வீட்டில் பிரைவேட் சொல்லித் தரும் கமலி தன்னுடைய அத்தானை விவாகம் செய்து கொள்ளவும் அவர்கள் சொந்தமாக மருந்துக் கடை வைத்து நடத்தவும் முதல் ரூபாய் ஐயாயிரம்**' என்று சேர்த்துப் பூர்த்தி செய்திருக்கிறது. சட்டப்படி சாட்சி எல்லாம் சரி."

* * *

அது சம்பந்தமான ஆட்சேபங்கள் எல்லாம் தீர்ந்து. கோர்ட்டார் கையிலிருந்து பணம் இப்போதுதான் கைக்கு வந்து சேர்ந்தது. இந்த வருஷத்துத் தீபாவளி இந்த விதம் நடக்கிறது!

# பேபி, பால, குமாரிகள்




"என்ன ஸார், இது? சுத்த பத்தாம் பசலியாயிருக்கிறீரே! பேபி விமலா யாருன்னு தெரியாதா? அதோ மிருதங்கம் வாசிக்கிறாளே, அந்தக் குழந்தைதான்!"

# இந்த வருஷத்துப்



# பிரமுகர்கள்



# யோகாசனப் பயிற்சி









அண்ணன் தீக்குச்சியார் தம்பி தீக்குச்சியாரிடம், "நீ தினமும் யோகாசனப் பயிற்சி செய்து வந்தால் உன் உடம்பு பருத்துப் புஷ்டியாக ஆவாய்" என்று உபதேசித்தார்............



ஆனால், தம்பி தீக்குச்சியார் எவ்வளவுதான் யோகாசனப் பயிற்சி செய்து பார்த்தும் இன்னும் குச்சி மாதிரிதான் இருக்கிறார்!



# வாத்தியார் வாஞ்சி

"சக்க! சக்க!!"

பக்கத்து அறையிலிருந்து அன்பை அள்ளிக் கொண்டு அந்தக் குரல் கேட்டது.

அழைப்பின் சொந்தக்காரி சரக வென்ற 'சக்க' கொஞ்சுகள் குழைத்துக் கொண்டு குரல் வந்த திக்கை நோக்கிக் குதித்தோடினுன்.

பிறகு அந்த அறையிலிருந்து 'கம்' மென்று மல்லிகைப் பூ மணம் வந்தது. கட கடவென்று சிரிப்பொலி கேட்டது. அத்துடன் வளையலொலி யும் கூடிக்கொண்டது.

★

இந்தக் கோலாகலம் இன்று நேற்றல்ல. அந்த இளந் தம்பதிகள் அவ் வீட்டிற்குக் குடி வந்த காலத்தி லிருந்து நடக்கிறது. கவிஞர்களுக்கு வாயிருந்தால் அதைப் பற்றி எவ் வளவோ சுவாரஸ்யமான கதைகள் சொல்லலாம்.

ஆனால் வாயும் இருந்து, இரண்டு கண்களும் இருந்துங்கூட அடுத்த போர்ஷனில் குடியிருந்த ஞானதி அம்மாள் ஜடப்பொருளாகத்தா னிருந்தாள். அன்றுடம் இருந்த இடத்தில் இருந்தபடியே அந்த இன்ப நாடகத்தை இலவசமாகப் பார்த்துக் கொண்டு வெறுமனே தா னிருந்தாள்!

"ஏதோ சிறுசுகள் போலும் போடுருர்கள்" என்ற தாராள சிந்தையாலோ, "நாமும் அந்தக் காலத்தில் இப்படித்தானே இருந் தோம், இது என்ன அதிசயம்!" என்ற விசேஷ அலட்சியத்தாலோ அந்த அம்மாள் வாய் மூடி மௌனி யாக இருந்துவிடவில்லை. ஒரு ஏழை வாத்தியாரின் அருமையானுக்கு,— மாதம் ரூ. 22 சம்பாதிக்கும் புருஷ னுக்கு வாழ்க்கைப்பட்ட ஒருத்திக்கு,— இதை யெல்லாம் பார்த்துப் பொருமைப்படவோ ஆசைப்படவோ என்ன உரிமை இருக்கிறது என்றுதான் அவள் நினைத்தாள்.

அதை ஞானதி எண்ணிப் பார்த்த போது பேதை உள்ளம் சலன மடைந்தது; விம்மிற்று; தேம் பிற்று. வாழ்க்கையில் ஏழை வாத்தி யாருக்கு வாழ்க்கைப் படுவதைவிட பெரிய துரதிருஷ்டம் இருக்க முடி யாது என ஏதோ ஒன்று சொல்லிற்று.

போர்டு பள்ளிக்கூட வாத்தி யார் வாஞ்சிநாதய்யருக்கு ஞானதி அம்மாள் வாழ்க்கைப்பட்டு, இராம ர் காட்டிற்குப் போய்த் திரும்பி வந்த வருடங்கள் ஆகிறது. இன்று வரை இந்த ஞானதி "சுகம்" என்ற வார்த்தையைப் பற்றிக் கேள்விப் படவில்லை. ஒரு குன்றி மணி தங்கத் திற்கு வழி கிடையாது. இரண்டு ரூபாயை வீசி எறிந்து வாய்க்குப் பிடித்ததை வாங்கித் தின்றோம் என்றில்லை. ஒரு நல்ல புடவை யைக் கண்டிருக்க மாட்டாள். அதி கம் சொல்வானேன்? இரண்டு வேளை வயிறு உண்டு. 'அக்கடா' வென்று இருக்க அவளைக் காலமும், தேகமும், விதியும் விட்டு விடவில்லை.

**நவீனன்**

வாத்தியார் வாஞ்சிநாதய்ய ரைச் சொல்லக் குற்றமில்லை. வாத் தியாராகவே பிறந்தவர்; தொழி லில் புலி. மாணவர்களிடம்கூட நல்ல பேர் எடுத்தவர். ஆனால் 15 வருஷ சர்வீஸில் அவருக்கு ரூ. 22 வரைதான் சம்பளம் உயர்ந்திருந் தது! அது தொழிலின் சாபக்கேடு. அதற்குப் பாவம், அவரும் அவரது ஒரே நிலைப்பாகையும், இற்சல் கோட்டும், மைபடிந்த கட்டை விர லும், வற்றிப் போன தொண்டை யும் என்ன செய்ய முடியும்?

வாஞ்சிக்கு ஞானதியிடம் அபார வாஞ்சை என்னமோ உண்டு. உரி மைக் கையில் பிடித்துக் கொண்டு, தனக்கு அபார சேவை செய்கிறுள். அப்படிப் பட்டவள் தனக்குச் சம் சாரமாக வாய்த்தது ஏதோ புண் ணியத்தின் சாயை என்று எண்ணிப் பெருமைப்படுகிறவர் அவர்.

இந்தப் பெருமைக்கும், ஞானதி அம்மாளின் நீண்டகாலப் பொறு மைக்கும் ஒரு நாள் எதிர்பாராத சோதனை வந்தது.

"அம்மாமி!" என்று கூவிக் கொண்டே சரக ஞானதியம்மா விடம் வந்தாள். புதுப் புடவையின் மொட மொடப்பும், கூந்தலில் அடர்ந்து அட்டகாசமாக வளர்க் திருந்த மல்லிகைப் பூக் தோட்டமும் சேர்ந்து வந்தன.

"வாடியம்மா, வா!" என்று சரகவை வரவேற்றுள் ஞானதி.

"அம்மாமி! எப்பப் பார்த்தா லும் வீட்டிலேயே அடைஞ்சு கிடக் கிறேளே. உங்களுக்குக் கஷ்டமா யில்லே? இன்னிக்கு மேட்னிமா




'மாடினி ஷோ'வுக்கு இவர் ஒரு 'பிரீ பாஸ்' வாங்கிக் கொண்டு வந்திருக்கார். போய்விட்டு வருவோம் வாருங்களேன். நல்ல தமிழ்ப் படம்" என்றாள் சரசு.

ஜானகிக்கு மனது கிடந்து அடித்துக் கொண்டது. போய்விட்டுத்தான் வருவோமே என்று தோன்றிற்று. ஆனால் அவரை — பள்ளிக்கூடத்துக்குப் போயிருக்கும் அவரை — ஒரு வார்த்தை கேட்காமல் எப்படிப் போவது? சாயங்காலம் களைப்புடன் வரும் அவருக்கு ஒரு டம்ளர் ஜலம் கொடுத்து வரவேற்க என்னைத் தவிர யாரிருக்கிறார்கள்? சொல்லாமல் கொள்ளாமல் இப்படித் திடீரென்று புறப்பட்டுப் போனால் அவர்தான் என்ன நினைத்துக் கொள்வார்?......

"நானுந்தான் இந்தப் பட்டணத்துக்குக் குடி வந்து விளையாட்டுப் போல பத்து வருஷமாகிறது. இன்று வரை ஒரு நாள் சினிமா டிராமா உண்டா? அல்லது 'பீச்'சுக்குத்தான் அழைத்துக் கொண்டு போயிருக்கிறாரா? கிடையாது. இல்லை, கேட்கிறேன்? இப்படி உழைச்சு உழைச்சு என்னத்தைக் கண்டேன்? ஒரு இனும் டிக்கெட்டில் கையை உதறிக்கொண்டு போகக் கூடச் சுதந்திரம் அற்றவளாகப் போய் விட்டேன்! சே! சே! என்ன மனுஷி? என்ன வாழ்க்கை?"

இப்படி அவளுக்கும் உள்ளத்திற்கும் அரை மணி நேரம் அபார போராட்டம் நடைபெற்றது. இறுதியில், நடுவில் வந்த நினைவு வெற்றிகரமாக வாபஸாகி, கடமை உணர்ச்சியே வெற்றி பெற்றது.

"நீ கொடுத்து வைத்த மகராஜி! போய் விட்டு வாடியம்மா!" என்று சரசுவுக்குச் சொல்லி அனுப்பினாள்.

★

அன்று மாலை வாஞ்சிநாதய்யர் வழக்கம் போல வாடி வதங்கி வீட்டிற்குள் நுழைந்து ஒரு "அப்பாடா!" போட்ட போது, அவருக்காக அதிசயம் காத்திருந்தது.

ஜானகியம்மாள் பாயில் அலங்கோலமாகப் படுத்தபடி விம்மிக் கொண்டிருந்தாள். வாஞ்சிநாதய்யர் பரபரப்புடன் அவளருகே பாய்ந்தோடி, "ஜானகி, என்ன! உனக்கென்ன?" என்று துடித்துப்போய்க் கேட்டார்.

பத்து நிமிஷத் தேம்புதலுக்குப் பிறகு, துக்கம் வந்து நெஞ்சில் முட்டிமோத, "என்ன! ஒன்றுமில்லை; என் தலை எழுத்தை நொந்து அழுகிறேன். நான் அழப் பிறந்தவள். அழுகிறேன்" என்ற பீடிகையுடன் மத்தியானம் நடந்த சம்பவங்களைச் சொல்லிவிட்டு, "ஹோ!" வென்று அழுதாள்.

வாத்தியார் கல்லாய்ச் சமைந்து போனார். பதினைந்து வருடங்களுக்குப் பிறகு ஜானகியின் வைராக்ய இருதயம்



இப்படி அசைந்து கொடுக்கும். கேவலம் ஒரு சினிமா ஆசைக்காக அது இடிந்து கொறுங்கும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. ஆச்சரியத்தால் அசைவற்றுப்போய், "அடி அசடே! நீயா இப்படிச் சொல்கிறாய்? என் ஜானகியா இப்படிப் பேசுகிறாள்?" என்று சொல்ல நினைத்தார்.

ஆனால் சாமர்த்தியமாகச் சமாளித்துக்கொண்டு தமக்குள் பேசிக்கொண்டார்: "ஆமாம். அவள் சொல்வதில் தவறு என்ன இருக்கிறது? ஜானகி எனக்கு வாழ்க்கைப் பட்டு என்ன சுகத்தைக் கண்டாள்? அவளை இவ்வளவு காலமாக வெறும் சமையல் இயந்திரமாகத்தானே வைத்திருக்கேன்?"

"இதோ வந்துவிட்டேன்" என்று சொல்லி எங்கேயோ வெகு வேகமாக வெளியே போனார்.

★

**ப**தினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு "ஜானகி! எழுந்திரு......வா சினிமாவிற்குப் போகலாம்" என்று ரேழியிலிருந்து ஒரு குரல் சிங்காரமிட்டது. அது வாஞ்சிநாதய்யர்.

ஜானகிக்கு ஆச்சரியமாகப் போயிற்று. கண்களைத் துடைத்துக்கொண்டு பார்த்தாள். சாக்ஷாத் வாஞ்சிநாதய்யரே தான் புன்னகையை வரவழைத்துக் கொண்டு எதிரே நின்று கொண்டிருந்தார்.

கணவனருகே போனாள். "பணம் ஏது?" என்று பரிவுடன் கேட்டாள்.

"அதைப் பற்றி உனக்கென்ன? புறப்படு என்றால் புறப்படேன்!"

"இல்லை! சொல்லுங்கள்! சொன்னால்தான் வருவேன்......"

"நம்ம ஜம்புவிடம் ரொம்ப அவசரம் என்று சொல்லி ஐந்து ரூபாய் கடன் வாங்கிக்கொண்டு வந்தேன்!"

ஜானகியின் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் உருண்டோடி வந்து விழுந்தது. அவள் சொன்னாள்:—

"எனக்கு என்னத்திற்கு இந்த சினிமாவும் டிராமாவும்? ஏதோ தெரியாத்தனமாக, அசட்டுத்தனமாக உளறிவிட்டேன். என்னைப் பெரிய மனது செய்து மன்னித்து விடுங்கள். நாளைக்கு உங்கள் பள்ளிக்கூடத்துப் 'பெரிய' இன்ஸ்பெக்டர் வருகிறார், நம்மாத்திலே சாப்பிடுவார் என்று சொன்னேளே — நாளைக்குச் சமைக்கிறதற்கு அரிசி இல்லை. அந்த ரூபாயை எடுத்துக் கொண்டு போய் அரிசி வாங்கிண்டு வாங்கோ!" என்றாள், புடவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே.

அவள் முகத்தை உற்றுப் பார்த்தார், வாத்தியார் வாஞ்சி. அதிலே ஒரு நிம்மதியைக் கண்டார். "அவள் பேசியது ஆத்மார்த்தம்" என அந்தக் கண்களும் பேசின.

"ஜானகி! என்னை ஆள வந்தவளே!!" என்று அன்புடன் சொல்லி விட்டு, ரேஷன் கார்டையும் பையையும் எடுத்துக் கொண்டு தெருவாசற்படி இறங்கினார்.

அதே சமயம் வாசல் வீதியில் ஆயிரக்கணக்கான பள்ளிக்கூட வாத்தியார்கள், "**எங்கள் சம்பளங்களை உயர்த்துங்கள்**" "**ஏழை வாத்தியார்களின் வயிற்றில் அடிக்காதீர்கள்**" "**உங்கள் சம்பளங்களை மட்டும் உயர்த்திக் கொண்டீர்களே, அது நியாயமா?**" என்று எழுதப்பட்ட அட்டைகளைச் சுமந்து கொண்டும் கோஷித்துக் கொண்டும் கோஷ்டி கோஷ்டியாக அணிவகுத்து 'செக்ரடேரியட்டை' நோக்கிப் போய்க் கொண்டிருப்பதைத் தம் பஞ்சடைந்த கண்களால் கண்டார் வாஞ்சிநாதய்யர்.

ஆச்சரியத்தால் துள்ளிக் குதித்துக்கொண்டே, "அடியே ஜானகி!" என்றார். அதற்குமேல் வார்த்தை ஒன்றும் வரவில்லை. அவர் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் தான் வந்தது!

★

**ரே**ஷன் கடைக்குப் போகிற போக்கில் அவர் இதயம் அவரிடம் சொல்லிக்கொண்டே போயிற்று:

"வாஞ்சி! உனக்கு 'சர்விஸ்' இன்னும் இரண்டு வருஷமோ, ஒரு வருஷமோ? கஷ்டப்பட்ட நாள் எல்லாம் கஷ்டப்பட்டு விட்டாய். இந்த அற்புத எழுச்சியையாவது பாராட்டு. இனி வருங்கால வாத்தியார்களது சம்பள அந்தஸ்தாவது உயரட்டும், அவர்களுக்காவது கதிமோட்சம் பிறக்கட்டும் என்று பிரார்த்தனை செய். அதைக் கண்ணால் கண்டு விட்டோ, காதால் கேட்டுவிட்டோ, மனத் திருப்தியுடன் பகவானுடைய பாதாரவிந்தத்தைச் சரணம் அடை!"


பரமானந்ததாஸ் சோட்டாதாஸ் & ஸன்ஸ்
உயர்ரக பனரஸ், பெங்கால், பட்டு ஜவுளி வியாபாரிகள்,
லக்மிதாஸ் தெரு, பி.டி. மதராஸ்... ஸ்தாபிதம், 1844.
N.P.B.


பட்டு, நூல் ஜவுளி!
அழகிற்கு அழகு செய்வது
அழகான ஆடைகளே!
★ இயற்கை அழகைச் செயற்கையினால்
இன்னும் அழகு படுத்துவது எளிதல்ல.
அதுவும் மானிடர் தங்கள் இயற்கை
அழகை அவரவர் அணியும் ஆடைகளால்
அலங்கரித்து அழகு படுத்துவதென்பது
மிகவும் அரிது. இவ்விதம் அழகை அழகு
படுத்தக் கூடிய ஆடை மிகவும் மேலான
மோஸ்தராகவும் புத்தம் புதிய பேஷனுகவும்
இருக்க வேண்டும். இந்த அம்சங்களில்
பூரண திருப்தி யளிக்கும் "எம். நடேசய்யர்
& கோ"விற்கு இன்றே விஜயம் செய்து
குடும்பம் முழுதையும் அழகுபடுத்துங்கள்
Props M. பழனிசாமி செட்டி
M. நடேச அய்யர்
Chitralaya
M. நடேசய்யர் & கோ
9, வடக்கு மாட வீதி,
மயிலாப்பூர்.....மதராஸ்.

# கவிதைச்



● ● ● நாமக்கல் கவிஞர் ஸ்ரீ இராமலிங்கம் பிள்ளை அவர்களின் அருமையான பாடல் களிலிருந்து நமது சித்திரக் கலைஞர் ஓவியக் கண் கொண்டு பார்த்துத் தீட்டியவை.

★★★

சங்கொலி எழுந்தது
சங்கடம் அழிந்தது
தைரியம் கொள்வாய்
தமிழ் மகனே!

★

அதிகாலை எழுகின்ற
கதிரோன்தன் உறவால்
அலர்கின்ற மலர்போலப்
புதுவாழ்வு பெறுவோம்

★

கூவும் கருங்குயிலே!—ஒரு
குறி சொல்ல மாட்டாயா?
தேவன் அருள்வருமா?—கற்றுப்
தீமைகள் தீர்ந்திடவே



# சித்திரங்கள்



கோழி குலவிவரும்
    கிளி கொஞ்சும்
குழந்தை எழுந்துதுள்ளி
    களி மிஞ்சும்

★

செடிமரங்கள் கொடிகளும்
    ஜீவரென்ற உண்மையை
ஜெகமறிந்து சொன்னமுன்பு
    செய்தறிந்த நாடடா!

★

ஆடிக்கரை புரளும்
    காவேரி ஆற்றருகே
ஏழைப் படகோட்டி
    என்கணவ ராளும்
கூழைக் குடித்துறங்கும்
    குடித்தனந்தான் என்றாலும்
கோழைகள் அல்லவம்மா
    குறைச்சல்உனக் கேதுமில்லே!



# அப்ளாஸ் விபரீதம்


சங்கீத வித்வான் மேல்பஞ்சமம் பிடித்துச் சபையில் அப்ளாஸ் வாங்கினர்.
கடவித்வான் கடத்தைத் தூக்கிப் போட்டபோது சபையோர் கரகோஷத்தைக் கொட்டி விட்டனர்.
அதையெல்லாம் பார்த்த மிருதங்கவித்வான் தாமும் அப்ளாஸ் வாங்கியே தீருவதென்று எண்ணி மிருதங்கத்தைத் தூக்கிப்போட....!
...அதன் விபரீதபலன் பாடகர் தலையிலே விழுந்தது!
சாமா

# வேணுகானம் சரப சாஸ்திரிகள்

★ சூலமங்கலம் வைத்தியநாத யதீந்திரர் ★

நாடக சங்கீத உலகத்தில் ஸ்ரீ சரப சாஸ்திரிகளின் பெருமை அளவிட முடியாதது. வேணுகானத்தில் அவர் அடைந்திருந்த யோக்யதையை நினைத்தால் அவரைத் தெய்வத் தன்மை பொருந்தியவர் என்றே சொல்லத் தோன்றுகிறது. ஸ்ரீ சரப சாஸ்திரியார் பிறந்து இரண்டாவது வயதிலேயே கண் வியாதியால் பார்வையை இழந்தார். அவருடைய ஆயுளும் முப்பது வயதுக்குமேல் இல்லை. இந்தச் சொற்ப காலத்துக்குள் அவர் இணையற்ற கலா விற்பன்னராக விளங்கினார்.

கிளி மொழியைப் பழிக்கக்கூடிய சாரீரத்தை ஈசுவர கிருபையினால் சாஸ்திரியார் இயற்கையிலேயே பெற்றிருந்தார். அத்துடன் ஸம்ஸ்கிருத பாஷையில் வியாகரண சாஸ்திர ஞானத்தோடு பேசுவதிலும் கவனம் செய்வதிலும் திறமை பெற்று விளங்கினார். மராட்டி பாஷையில் வட தேசத்தார்கள்கூட ஆச்சரியப்படும்படியான இலக்கண இலக்கிய ஞானத்துடன் கவனம் செய்யும் சக்தியும் பெற்றிருந்தார். ஆந்திர பாஷையிலும் விசேஷ ஞானம் அவருக்கு இருந்தது. இவ்வளவுடன் தமிழிலும் சாஸ்திரியார் நல்ல பாண்டித்தியம் பெற்றிருந்தார். பிடில் வாத்தியத்திலும் மிருதங்கத்திலும் கச்சேரிகளில் வாசிக்கும் அளவுக்குப் பரிச்சயம் பெற்றிருந்தார்.

வேணுகானம் சம்பந்தமாய் ஸ்ரீ சரப சாஸ்திரியாருடைய வித்வத்தை ஆராயப் புகுந்தால், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாகூட இப்படி அந்த வாத்தியத்தை வாசித்திருக்க முடியுமோ என்று சந்தேகிக்கும்படியாயிருக்கும். பகவான் யமுனாநதி தீரத்தில் வேணுகானம் செய்த பொழுது அந்த கானத்தைக் கேட்டுப் புல், பூண்டு, பறவைகளெல்லாம் ஆனந்த பரவசமாயின என்று கூறப்பட்டிருக்கிறது. அவ்விதமே, ஸ்ரீ சரப சாஸ்திரியார் அவர்கள் புல்லாங் குழல் கச்சேரி செய்யும் பொழுது, சராசர வஸ்துக்களெல்லாம் சந்தோஷப்பட்டதை நான் நேரில் கண்டு அனுபவித்திருக்கிறேன்.

ஸ்ரீ சரப சாஸ்திரியாரின் வேணு வாத்தியத்திலிருந்து உண்டான நாதமானது சுகஸ்வரூபமாகவே விளங்கிற்று. அவருடைய கான ஞானத்தை நோக்குங்கால் சபாநாதன் ஆனந்தத் தாண்டவத்தில் நாதாந்தம் வகித்த பிரும்ம தேவரின் அம்சமென்றே அவரைச் சொல்லலாம். கானத்தில் மிக்க புகழ் பெற்று விளங்கிய கட வாத்தியம் பழநி கிருஷ்ணய்யர், கஞ்சிரா மான் பூண்டியாப் பிள்ளை, தக்ஷிணா மூர்த்திப் பிள்ளை, திருவாடி பாடகர் சுப்ரமண்ய ஐயர், திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர், திருமருகல் நடேசன், எட்டயபுரம் ராமச்சந்திரய்யர் மற்றும் இவர்களுக்குச் சமமான அநேகம் வித்வான்கள் ஸ்ரீ சரப சாஸ்திரிகளின் கச்சேரியைக் கேட்டு அதில் அவருடைய கான ஞானத்தின் மேதையைக் கண்டு இவ்விதம் கான ஞானம் உள்ளவர்கள் எங்கும் கிடையாது என்று கொண்டாடியிருக்கிறார்கள்.

தமக்கு நேத்திரமில்லாத குறையை உத்தேசித்து ஸ்ரீ சாஸ்திரிகள் தம் கச்சேரிக்குத் தாளம் போடுவதற்குப் பிறரை எதிர்பாராமல், காலினாலேயே தாளம் போடுவதற்குப் புதிதாக ஒரு மார்க்கத்தை அமைத்துக் கொண்டார். அவருக்குப் பிறகு வேணுகானம் செய்கிறவர்கள் எல்லாரும் இம்மார்க்கத்தை அனுசரித்துத் தாளத்தை அமைத்துக்கொண்டு கச்சேரி செய்து வருகிறார்கள். ஸ்ரீ தியாகப் பிரும்மத்தின் கீர்த்தனங்களை பட்டணம் சுப்ரமணிய ஐயரும் தியாகய்யரின் சிஷ்யர்களான உமையாள்புரம் பெரியோர்கள் சுத்தமாகக் கானம் செய்த பிரகாரமே, மார்க்கத்திலிருந்து விலகாமல் ஸ்ரீ சாஸ்திரிகளும் வேணுவில் அமைத்து வாசித்து வந்தார். எப்பொழுதாவது எந்தக் கீர்த்தனத்திலாவது ஏதாவது ஒரு சங்கதியைக் கற்பனையாக வாசிக்க வேணுமென்று தோன்றினால் கீர்த்தன மாத்திரத்தில் அதை வாசிப்பார். ஆனால் அது விகட்டு இல்லாமல் மிகவும் பொருத்தமாகவே இருக்கும். கீர்த்தனங்கள் வாசிப்பதில் ஸ்ரீ சரப சாஸ்திரிகளிடம் இன்னொரு விசேஷம். வர்ண மெட்டுக்களை மாத்திரம் வைத்துக்கொண்டு கேவலம் ஆகாரமாய் இல்லாமல் சாஹித்யத்துடன் வாய்ப்பாட்டுப் பாடுவது மாதிரியே இருக்கும். சாஸ்திரிகள் மோகன ராகத்தில் 'பவநுத' கீர்த்தனத்தைத் துரித காலத்தில் வாசித்து வாயுவேக மனோவேகமாக ஸ்வரம் வாசிக்கும் பொழுது வித்வான்கள் பொறி கலங்கி மயங்கும்படியாக இருக்கும். ஆயிரக் கணக்கான உருப்படிகள் சாஸ்திரிகளுக்குப் பாடாந்தரமா யிருந்தாலும் அநேகமாய் அவருடைய கச்சேரியில் சில குறிப்பிட்ட ஒருசிலதை மாத்திரந்தான் கையாண்டு வந்தார்.



சூலமங்கலம் பிரம்மஸ்ரீ வைத்தியநாத பாகவதர்

ஒரு சமயம் சுவாமிமலையில் ஸ்ரீ சரப சாஸ்திரிகள் வீட்டுக் கல்யாணம் ஒன்று நடந்தது. திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர், கஞ்சிரா மான் பூண்டியா பிள்ளை, மிருதங்கம் அழகநம்பியாப் பிள்ளை ஆகியவர்களை உபயமாகச் சேர்த்துக் கொண்டு சாஸ்திரிகள் வேணுகானம் செய்தார். அன்று ஒரு விசேஷ சம்பவம் நிகழ்ந்தது. சாஸ்திரிகளும் கிருஷ்ணய்யரும் சேர்ந்து பல்லவி வாசிக்கும்போது ஒரு ஆவர்த்த ஸ்வரங்களாக, வந்த கற்பனை மீண்டும் வராமல், வெகு நேரம் மாறி மாறி வாசித்து வந்தார்கள். அப்பொழுது கஞ்சிரா வாசித்துக் கொண்டிருந்த மான் பூண்டியா பிள்ளை அவர்கள் உயர்ந்த ஞானஸ்தராகையால் இந்த ஸ்வரங்களின் கற்பனையையும் கானத்தின் கடையையும் கண்டு

பிரமிப்பு அடைந்து விட்டார். பிறகு, சாஸ்திரிகளைப் பார்த்து, "தங்கள் ஞானத்திற்கு ஈடான ஞானமுள்ளவர்கள் எவ்வுலகிலுமில்லை" என்று சொல்லி மிகவும் கொண்டாடினார்.

செட்டிமார் நாட்டில் கோனாப்பட்டு என்ற ஊரில் ஒரு கல்யாணத்தில் சாஸ்திரிகளின் கச்சேரி பழநி கிருஷ்ணய்யர் அவர்களின் கூட வாத்தியத்துடன் நடந்தது. நானும் அந்தக் கச்சேரிக்குப் பக்க வாத்தியமாகப் பிடில் வாசிக்க நேர்ந்தது. நாதஸ்வர வாத்தியத்தில் இணையற்றவராக விளங்கிய திருமருகல் நடேசனும் அந்தக் கல்யாணத்திற்கு வந்திருந்தபடியால், சாஸ்திரிகளின் கச்சேரியைக் கடைசி வரையில் இருந்து கேட்டார். அன்று ஸ்ரீ சரப சாஸ்திரிகள் தோடி ராகம் வாசித்துக் கிருஷ்ணய்யரின் கூட வாத்தியத்துடன் பல்லவி வாசிக்கும்போது நாதஸ்வர நடேசன் மெய்ம்மறந்து கண்கள் நீர் மல்க, "இனி இவ்வளவு சிறப்பாக இந்தத் தோடி ராகத்தை யார் கையாள முடியும்?" என்று சொல்லிக் கச்சேரியை ரொம்ப அனுபவித்தார்.

கச்சேரி முடிந்து சாஸ்திரிகள் ஜாகைக்குப் போகும் பொழுது ஸ்ரீ நடேசனும் கூடவே வந்து சாஸ்திரிகளைப் பார்த்து "ஆண்டவனே, நான் தங்களுடைய வாத்தியத்தைக் கேட்ட பிறகு எப்படித் தொழில் செய்வது என்று புரியவில்லை" என்று சொல்லித் தமது சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டார்.

முதன் முதலில் வேணு வாத்தியத்தைக் கொண்டு கச்சேரி செய்கிற பத்ததியைத் தயார் செய்து பிரசித்தியடையச் செய்தவர் ஸ்ரீ சரப சாஸ்திரிகள்தான். இந்த வாத்தியத்தை இதற்குமுன் சின்ன மேளத்திற்கு உபயோகப் படுத்தி வந்ததாகச் சொல்வார்கள்.

முக்கியமாக சாஸ்திரிகள் அவர்களுடன் பழகி வந்த சிநேகிதர்களுக்குள் நான் ஒருவன் ஆதலால், சங்கீதத்தில் அவருக்கு இருந்த பாண்டித்தியத்தைத் தவிர அவருடைய இதர விசேஷ குணங்களையும் குறிப்பிட வேண்டி இருக்கிறது. ஸ்ரீ ராமபிரான் மாதிரி சத்தியத்தைக் காப்பாற்றுவதில் அவர் ஒரு உத்தம புருஷர். யாருக்காவது ஒரு விஷயத்தைப்பற்றி வாக்குத்தத்தம் செய்துவிட்டால், சந்திர சூரிய கதி மாறினாலும் மாறலாம், அவர் அதை மாற்ற மாட்டார்.

இப்போது எங்கும் பெருமையுடன் விளங்கி வருகிற பல்லடம் வேணுகானம் ஸ்ரீ சஞ்சீவிராவ் அவர்கள் ஸ்ரீ சரப சாஸ்திரிகளுடைய சிஷ்யர் என்பது பலரும் அறிந்த விஷயம். கோயமுத்தூர் ஜில்லா ஊத்துக்குளி ஜமீனுக்கு ஒரு சமயம் சாஸ்திரிகள் கச்சேரி செய்யப் போகும்படி நேர்ந்தது. பல்லடம் சஞ்சீவிராவ் அவர்களின் தகப்பனார் சாஸ்திரிகளைக் கண்டு தம் புதல்வனைச் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டார். அதற்குச் சாஸ்திரிகள் "கும்பகோணம் வரச்சொல்லும் பையனை! பார்க்கலாம்" என்றார். பிறகு அவர் தமது வாக்கை எப்படிப் பரிபாலித்தார் என்பதே இப்பொழுது சஞ்சீவிராவ் அவர்கள் வேணுகானத்தில் அடைந்துள்ள நிலைமையிலிருந்து நன்கு அறியலாம்.

சென்னை ராஜதானியில் இடங்களுக்குத் தக்கவாறு தம்முடைய கச்சேரிக்கு ஒரு தொகையை நிர்ணயித்து வைத்திருந்தார் சாஸ்திரிகள். அந்தத் தொகைக்கு ஒரு

பழைய காலத்து சங்கீத வித்வத் கோஷ்டியின் சில பிரமுகர்களை இந்தப் படத்தில் காணலாம். மேல் வரிசை இடது கோடியில் நிற்பவர் அழகநம்பியாப் பிள்ளை; அடுத்து நிற்பவர் வீணை தனம்மாள். நடு வரிசையில் வலமிருந்து இடம்: பிடில் கோவிந்தசாமிப் பிள்ளை, ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதர், திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர், கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யர், தஞ்சாவூர் நாராயண பாகவதர், திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகள்




தயாராகிறது!
T.R. ராஜினி
ஸ்ரீராம்
M.V. மணி
வித்வான் ஸ்ரீனிவாசன்
முதலியோர் நடிக்கும்
மதனமாலா
(தமிழ்)
டைரக்ஷன்:
K. வேம்பு
வசனம்:
உதயகுமாரன்
விபரங்களுக்கு ஸ்ரீ ராமானந்தா பிக்சர்ஸ 8ர. லாண்டன்ஸ் ரோடு. கீழ்பாக்கம் மதராஸ்.



நாத விஜயம்
நடிகர்கள்:
மதுரை
மாரியப்ப சுவாமிகள்.
ஞானமணி M.V.மணி
பங்கஜவல்லி
நடனம்:
நடனம் நடராஜ்
பாட்டு அமைப்பு:
மாரியப்ப சுவாமிகள்
இசை:
கிரீன் ஆர்க்கெஸ்ட்ரா
கதை: வேலவன்
டைரக்ஷன்.
R.சந்தர்
மணியம்.
கிரீன் பிக்சர்ஸ் ★ மதராஸ்.



# அமர தாரா



## முன்னுரை

பர்மாவிலிருந்து தாய்நாட்டிற்குத் திரும்பி வந்த பிறகு என் உள்ளம் அமைதி இழந்து அலைப்புண்டிருந்தது. ஓரிடத்தில் நிலையாக இருப்பது சாத்தியமில்லாமல் போயிற்று. என் பணி சிலவை வியாஜமாகக் கொண்டு தேச யாத்திரை செய்யத் தொடங்கினேன். அந்தத் தேச யாத்திரையைப் பெரும்பாலும் வட இந்தியாவிலேயே செய்யும்படி தனியான காரணம் ஒன்றும் இருந்தது.

வீர ராஜ புத்திரர்களின் நாட்டில் அதிசயமான வீரச் செயல்கள் நிகழ்ந்த புராதனமான கோட்டை கொத்தளங்களையும், பாழடைந்த பழைய நகர்களையும், அழகு குடிகொண்ட புதிய பட்டணங்களையும், அந்தப் பட்டணங்களிலே வீர விநோதங்களுக்குப் பெயர்போன சிருங்கார அரண்மனைகளையும் சுற்றிப் பார்த்துச் சலித்த பிறகு, கடைசியாக அஜ்மீர் ஸ்டேஷனிலிருந்து பம்பாய்க்குப் போவதற்கு டிக்கட் வாங்கினேன். அஜ்மீரில் டிக்கட் கொடுத்த ஸ்டேஷன் குமாஸ்தா ஒரு எச்சரிக்கை செய்தார். "வழியில் ரட்லம் சந்தியில் ஏதோ கலாட்டா நடப்பதாகத் தெரிகிறது. கால திட்டப்படி ரயில் போய்ச் சேருவது நிச்சயமில்லை. நீங்கள் வேறு மார்க்கமாய்ப் போவது நல்லது!" என்று அவர் சொன்னார்.

அதற்கு நான் "எத்தனையோ கலாட்டாக்களை நான் பார்த்திருக்கிறேன், ஐயா! பரவாயில்லை; டிக்கட் கொடுங்கள்!" என்றேன்.

அஜ்மீர் ஸ்டேஷனில் ஜனங்கள் அங்கங்கே கும்பல் கூடிப் பரபரப்புடன் பேசிக்கொண்டிருந்த விஷயம் என்ன என்பது மேற்படி டிக்கட் குமாஸ்தாவின் எச்சரிக்கையின் மூலம் எனக்குத் தெரிய வந்தது.

ரயில் புறப்பட்டபோது அதில் வழக்கத்துக்கு மாறாகக் கூட்டம் ரொம்பக் குறைவாக இருந்தது. ஏறியிருந்தவர்களில் போலீஸ்காரர்கள், இந்திய சிப்பாய்கள், இங்கிலீஷ் டாமிகள் ஆகியவர்கள் தான் அதிகமாயிருந்தார்கள்.

இத்தனை நாளும் ரயில் பிரயாணத்தில் கூட்ட நெரிசலில் இடித்து அவஸ்தைப்பட்ட எனக்கு இது பெரிதும் உற்சாகத்துக்குக் காரணமாயிருந்தது. ஒருவருமே ஏறியிராத ஒரு இரண்டாம் வகுப்பு வண்டியைக் கண்டு பிடித்து அதில் ஏறிக் கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டேன். பிரயாணத்துக்கான உடையைக் களைந்து விட்டுக் கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டு நன்றாகக் காலை நீட்டிக்கொண்டு படுத்தேன். ரயிலும் கிளம்பிற்று.

## 1. ரட்லம் ஜங்ஷன்

நான் நிம்மதியான கவலையற்ற தூக்கம் தூங்கி எத்தனையோ காலம் ஆகிறது என்றாலும், ஓடும் ரயிலின் ஓசையும் சுழலும் சக்கரங்களின்

# வாழ்வு

கல்கி

எந்நாளும் பெரும்பாலும் என்னைக் கண்ணயரச் செய்வது வழக்கம். எத்தனை நேரம் அன்று நான் தூங்கினேனோ தெரியாது. பழைய வாழ்க்கைச் சம்பவங்களைப் பற்றிய கனவு கண்டு திடீரென்று தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்தேன். ரயில் ஓடாமல் நின்றிருந்தது என்று தெரிந்தது. நின்ற இடம் ஸ்டேஷன் இல்லை என்றும் என் உள்ளுணர்வு சொல்லிற்று. ஸ்டேஷன் என்றால், அதற்கென்று தனி உரிமையுள்ள சில சப்தங்கள் கேட்கும். வண்டியில் இடம் பிடிக்க ஓடுகிறவர்களின் கூமாட்டம், ஏறி இறங்குகிறவர்களுடைய தர்ப்பாட்டம், 'காபி டீ' 'காப்பித்' கூப்பாடு, போர்ட்டர்களின் ஆரவாரம், — இவற்றிலிருந்து ரயில் பெரிய ஜங்ஷனிலோ சிறிய ஸ்டேஷனிலோ நிற்கிற தென்பதைக் கண்டு பிடிக்கலாம். ஆனால், இங்கே அம்மாதிரி சப்தங்கள் இல்லை. எங்கேயோ வெகு தூரத்திலிருந்து இனம் தெரியாத சப்தங்கள் கேட்டன. வண்டியின் பலகணி ஒன்றைத் திறந்து உள்ளே குப் என்று புகுந்த குளிர்ந்த பனிக் காற்றைப் பொருட்படுத்தாமல் வெளியே தலையை நீட்டினேன். என்னைப் போலவே பல தலைகள் வண்டிக்கு வெளியே நீட்டப்பட்டிருந்தன. ஒரு சிலர் கீழே இறங்கி சாவகாசமாக நடந்து கொண்டிருந்தார்கள். எதிரே கொஞ்ச தூரத்தில் ஒரு பட்டணம் இருப்பது தெரிந்தது. எப்படித் தெரிந்தது என்றால், அந்தப் பட்டணத்தில் ஆங்காங்கே சில வீடுகள் தீப்பிடித்து எரிய, மேற்படி தீயின் வெளிச்சத்திலே பட்டணம் தெரிந்தது! பட்டணம் தெரிந்த திசையிலிருந்து படார், படார் என்று துப்பாக்கி குண்டுகள் வெடிக்கும் சத்தம் வந்துகொண்டிருந்தது.

அடுத்த வண்டியிலிருந்து தலையை நீட்டியவரைப் பார்த்து, "என்ன, ஸார், விசேஷம்! ரயில் எங்கே வந்திருக்கிறது?" என்று கேட்டேன். "சட்டம் ஸ்டேஷனுக்கு அருகில் வந்திருக்கிறது; ஊரில் ஏதோ கலாட்டா நடப்பதுபோல் காண்கிறது!" என்றார்.

அஜ்மீர் ஸ்டேஷனில் டிக்கட் குமாஸ்தா சொன்னது சரிதான் என்று நினைத்துக் கொண்டேன்.

சில நிமிஷத்துக்கெல்லாம் ரயில் கார்டின் விசில் சத்தம் கேட்டது; ரயிலும் புறப்பட்டது. மெதுவாக நகர்ந்து சென்று கைகாட்டி மரத்தைத் தாண்டி சட்டம் ஸ்டேஷனுக்குள் போய் நின்றது. வண்டியிலிருந்த பிரயாணிகள் முதலியோர் மள மள வென்று கீழே இறங்கினார்கள். பிளாட்பாரத்தில் அங்கு மிங்கும் ஜனங்கள் கும்பல் சேர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பக்கம் போன ஸ்டேஷன் அதிகாரி ஒருவரை நிறுத்தி, "என்ன, ஐயா, விசேஷம்? வண்டி இதற்கு மேல் போகுமா? போகாதா?" என்று கேட்டேன். அவர் தமது வாயிலிருந்த சிகரெட்டைக் குப் பதில் சொல்வதற்காக எடுக்கலாமா, வேண்டாமா என்று சிறிது யோசனை செய்து விட்டு, பிறகு ஒரு நிர்ணயத்துக்கு வந்தவராய், "கொஞ்ச தூரத்துக்கப்பால் ரயில் பாதை சேதமாகி யிருக்கிறது. செப்பனிட்டுக் கொண்டிருக்கிறார்கள். இனி மேல் பொழுது விடிந்த பிறகு தான் ரயில் புறப்படும்" என்றார்.



# சாண்டுவின் சந்நியாசம்

ரா.கி.



நம்ம 'சண்டு'வை உங்களுக்குத் தெரியுமோ, இல்லையோ? தெரியும் என்று ஒப்புக்கொண்டு விடுங்கள்! தெரியாது என்று நீங்கள் சொன்னால் அவன் உங்களை விட்டு விடப் போகிறானா என்ன? முதுகு வலிக்கு ஆளாவதுதான் பலனாக முடியும்.

முதன் முதலில் சண்டுவை நான் சந்தித்தபோது அப்படித்தான் சால் ஜாப்பு சொல்லிப் பார்த்தேன். திடீரென்று முதுகில் ஒரு பலமான தட்டு விழவே, திடுக்கிட்டுத் திரும்பினேன். சண்டு உட்கார்ந்து கொண்டிருந்தான். "என்ன, அப்பேன்! என் முழிக்கிறாய்! சண்டுவை அடையாளம் தெரியவில்லையோ?" என்று என் இரண்டு தோள்களையும் பிடித்துக் குலுக்கினான். பள்ளிக்கூட ஆசிரியர்களின் கூட்டம் ஒன்றில் நான் பின்வரிசையில் உட்கார்ந்து சொற்பொழிவுகளைச் செவிமடுத்துக் கொண்டிருந்தபோது இந்த மாதிரியான சம்பவம் நடந்தது.

"ஆமாம், தெரியத்தான் இல்லை!" என்றேன்.

"ஓஹோ!" என்று சண்டு சிரித்துவிட்டு, "அந்தக் காலத்தில் எப்படி இருந்தாயோ, அப்படியேதான் இன்னும் இருக்கிறாய். கொஞ்சங்கூட உருவத்திலோ, குணத்திலோ மாறுதல் இல்லை!" என்றான்.

"எந்தக் காலத்தில்?" என்று கேட்டேன்.

"என்னப்பா, பெரிய ஆளாயிருக்கிறாயே? நெம்பாத்திலே படித்துக் கொண்டிருந்த காலத்திலேதான்."

நான் நெம்பாத்துக்கு அதுவரையில் போனதே கிடையாது. ஆனால் மேலும் மறுதளித்தால் முதுகுக்கு அபாயம் வரும் என்று பயந்து, "சரிதான்!" என்றேன்.

"ஏனப்பா, கிருஷ்ணசாமி, என்னை ஏமாற்றலாமென்று பார்த்தாய்?" என்று சொல்லி மறுபடியும் முதுகிலே ஒரு தட்டுத் தட்டினான்.



"எனது நாமதேயம் கிருஷ்ணஸ்வாமி இல்லை; நாராயண ஸ்வாமி!" என்றேன்.

"ஆகா! வந்துட்டாயா வழிக்கு? அப்படிச் சொல்லு! எங்கே கிருஷ்ண சாமி என்றதும், உன் பெயர் கிருஷ்ண சாமிதான் என்று சொல்லி டிமிக்கி கொடுக்கப் பார்க்கிறாயோ என்று சோதித்தேன். அப்பனே, நாராயண சாமி! உன் பெயர் எனக்குத் தெரியாதென்று நினைத்துக் கொண்டாய்!"

உண்மையில் என் பெயர் நாராயண சாமியும் இல்லை! ஆனால் அதைச் சொல்லி என்ன பிரயோஜனம்?

இப்பேர்ப்பட்ட ஆளைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டும் என்று நினைத்து, "சண்டு! இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"என்னத்தைச் செய்கிறது? உன் முதுகுக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டு பள்ளிக்கூட உபாத்தியாயர்களின் தியாகங்களைப் பற்றிய அழுகையைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்! இப்படி எத்தனையோ நாளாகத்தான் பேசுகிறார்கள். யாருக்கு என்ன பிரயோஜனம்? புதுடில்லி வரையில் போய் [illegible] தாடியைப் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கத் தயாராயிருந்தால் அல்லவா வழி பிறக்கும்! சுத்த டாலு டாலன்கள்!"

"கொஞ்சம் மெதுவாய்ப் பேசு!" என்று அவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட பிறகு, "நான் கேட்கிறேனே என்று கோபித்துக் கொள்ளாதே! அப்படியானால், நீ உபாத்தியாயர் இல்லையா?" என்றேன்.

"நல்ல கேள்வி கேட்டாய், அப்பா! டிபுடி கலெக்டருக்குப் பிள்ளையாகப் பிறந்துட்டு, அந்தப் பாழும் பரீட்சையிலே ஒரு மார்க்குக் குறைந்து போனதினாலே ஐ. சி. எஸ். ஸுக்குப் போக முடியாமல் உட்கார்ந்திருக்கேன் நான்! என்னைப் பார்த்து வாத்தியார் வேலையிலிருக்கிறாயா என்று நீ கேட்கிறாயே! உன்னைப் போன்ற ஆசாமிகள் இருக்கிற வரையில் இந்த உலகம் உருப்படப் போகிறதில்லை! ஒருநாளும் உருப்படப் போகிறதில்லை! நான் சொல்லுகிறது தெரிந்ததோ, இல்லையோ!" என்று என் முதுகின் மூலம் அதை அழுத்தமாய்த் தெரியப்படுத்த முயன்றான்.

"தெரிந்தது அப்பனே! தெரிந்துவிட்டது!" என்று கதறினேன்.

இம்மாதிரியாக, எனக்கும் சண்டுவுக்கும் அறிமுகம் ஏற்பட்டது. அப்புறம் சண்டுவும் நானும் எதிர்பாராத இடங்களில் எதிர்பாராத விதமாகவெல்லாம் சந்தித்து நாளொரு முதுகும் பொழுதொரு தட்டுமாக எங்கள் நட்பை வளர்த்துக் கொண்டு வந்தோம்.

★

ஒரு நாள் சண்டுவைச் சந்தித்தபோது "இப்போது என்ன செய்கிறாய்?" என்று கேட்டேன்.

"அப்படிக் கேள், சொல்கிறேன். இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறேன் என்றுதானே கேட்கிறாய்? இந்த உலகத்துக்குப் புத்தி புகட்ட வழி தேடிக் கொண்டிருக்கிறேன். இந்த உலகம் இருக்கிறதே; மகா முட்டாள் உலகம். பணம் உள்ளவனுக்குத்தான் இந்த உலகத்தில் மதிப்பு. பணக்காரன் என்னத்தை உளறிக் கொட்டினாலும் வாயைப் பிளந்து கொண்டு கேட்கிறார்கள். பணமில்லாதவன் எவ்வளவு அறிவாளியாயிருந்தாலும் அவன் பேச்சு அம்பலத்தில் ஏறுகிறதில்லை."

"உலகம் அப்படித்தான் இருக்கிறது. என்ன செய்கிறது?" என்று சண்டுவை ஆமோதித்தேன்.

"ஆனால் உலகம் என்ன செய்யும்? உலகத்தைக் குறை கூறி என்ன பயன்? உலகத்தைப் படைத்த கடவுளைச் சொல்ல வேண்டும். நான் மட்டும் கடவுளாயிருந்தால் என்ன செய்வேன் தெரியுமா? நமது அருகுள்ளனி புதுகுள்ளனி செட்டியார், அன்று

மலேரியா முதலியார், அப்பண்ணு அமக்கண்ணு அய்யங்கார், திருவனந்தி தகப்பாஜி ஐயர், டபின் நிமோனியா டிஸாமியா, பிரோஜுமல் டிமிக்கிலால் டிக்கர்லால், பயானகதுல்ல மயான தான் பயங்கர்லா ஆகிய அவ்வளவு பணக்காரப் பேர்வழிகளையும் கூப்பிட்டு வரிசையாக நிறுத்துவேன். நிறுத்தி 'உங்கள் ஒவ்வொருவரிடமும் எவ்வளவு பணம் இருக்கிறது? உண்மையைச் சொல்லுங்கள்!' என்று காதைப் பிடித்துத் திருகுவேன். அவர்கள் உண்மையைச் சொல்லியாக வேண்டும். சொல்லாவிட்டால் யார் விடுகிறார்கள்! பிறகு, 'இவ்வளவு பணத்தையும் என்ன மாதிரி செலவு செய்யப் போகிறீர்கள்?' என்று கேட்பேன். அவர்கள் திருதிருவென்று முழிப்பார்கள்! 'செலவு செய்ய வழி தெரிந்த பேர்வழி இதோ ஒருவன் இருக்கிறான். ஒவ்வொருவரும் உங்கள் பணத்தில் சரி பாதியை நமது கண்டுவிடம் உடனே ஒப்புவித்து விட்டு மறு காரியம் பாருங்கள்!' என்பேன். அவர்கள் அப்படியே செய்வார்கள். செய்யாவிட்டால் யார் விடுகிறார்கள்? தானே கதறிக் கொண்டு பணத்தைக் கொண்டு வந்து கல கல வென்று கொட்ட வேண்டாமா?"

ஆனால் கண்டுவின் இஷ்டப்படி கடவுள் நடப்பதாகத் தெரியவில்லை. எனவே என்னிடம் ஒரு ஐந்து ரூபாய் நோட்டும் டிராம் செலவுக் கென்று தனியாக நாலு அணாவும் வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தான்.

★

அடுத்த தடவை நான் கண்டுவைப் பார்த்தபோது, "பணமா! சீ! பணம் இங்கே யாருக்கு வேண்டும்? பணத்தைக் கொண்டு போய் உடைப்பிலே போடு!" என்றான். நான் திடுக்கிட்டு நிற்கையில், "பணத்தினால் மனித வர்க்கமே நாசமடைந்து வருகிறது! பணக்காரர்கள்தான் உலகத்தைப் பாழ் பண்ணி வருகிறார்கள்! பணம் சம்பாதிக்கிற எண்ணத்தையே நான் விட்டு விட்டேன்!" என்றான்.

"பின்னே என்ன உத்தேசம் செய்திருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"உலகத்தை உத்தாரணம் செய்யப் போகிறேன்! மனித வர்க்கத்தை மேலோங்க நிலைமைக்குக் கொண்டுவரப் போகிறேன்! ஆமாம்; தீர்மானம் செய்து விட்டேன்!" என்றான்.

"எப்படி!" என்று கேட்டேன்.

"எப்படியா? சொல்கிறேன், கேள். நான் எழுத்தாளன் ஆகப் போகிறேன். அச்சடித்த எழுத்துக்கு உள்ள சக்தி உலகத்தில் எதற்கும் இல்லை. ஒரு விஷயம் அச்சில் வந்து விட்டதானால், முட்டாள் ஜனங்கள் அது எவ்வளவு அபத்தமானாலும் அப்படியே விழுங்கி விடுகிறார்கள்! இந்த உலகத்தை முன்னுக்குக் கொண்டு வருவதற்கு எழுத்தாளனாவது ஒன்றுதான் சரியான வழி!" என்றான்.

"ரொம்ப சந்தோஷம்!" என்றேன்.

"ஆனால் உன்னை மறந்துவிடுவேன் என்று பயப்படாதே! உலகத்தை முன்னுக்குக் கொண்டு வந்தவுடனே உன்னையும் கவனித்துக் கொள்கிறேன்!" என்று அபயம் அளித்தான்.

★

மறுபடியும் கண்டுவைப் பார்த்த போது, "எழுத்தாளன் ஆகும் முயற்சியில் எவ்வளவு தூரம் வெற்றியடைந்திருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"அப்பனே! உலகத்திலே வேறு எந்தத் தொழில் வேணுமானாலும் செய்யலாம். தெருக் கூட்டலாம்; தோட்டம் வைக்கலாம்; மந்திரி வேலை வேணுமானாலும் பார்க்கலாம். ஆனால் எழுத்தாளனாக மட்டும் ஆகக் கூடாது. அதிலும் நமது நாட்டில் இப்போது உள்ள பத்திரிகாசிரியர்கள் இருக்கும் வரையில் எழுத்தாளனாகவே ஆகக் கூடாது. பத்திரிகாசிரியர்களா இவர்கள்? சுத்தத் திருடர்கள்!"

"ஏனப்பா, இப்படி ஒரே யடியாக வெறுத்து வாங்குகிறாய்?"

"பின்னே என்ன என்று கேட்கிறேன்! ஒன்று இரண்டல்ல ஐந்தாறு கவிதைகளைத் திருடிக் கொள்கிறார்கள்! அனுப்பிய கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதும் கிடையாது!"

"ஆமாம், அப்பா, ஆமாம்! அநேக பத்திரிகாசிரியர்கள் அப்படித்தான் செய்கிறார்கள்!" என்றேன்.

"ஓஹோ! நீ மட்டும் தப்பித்துக் கொள்ளலாம் என்று பார்க்கிறாயோ? நீயும் அதே வர்க்கந்தானே!"



"ஆம்; வாஸ்தவந்தான்! மன்னித்துக்கொள்!" என்றேன்.

"மன்னிக்கிறதாவது, மண்ணாங்கட்டியாவது? நீங்கள் பத்திரிகாசிரியர்கள் இருக்கிறீர்களே, மகா மோசக்காரர்கள்! எழுத்தாளர்கள் உயிரோடிருக்கும் போது அவர்களைப் பட்டினி போட்டுக் கொல்லுகிறீர்கள். செத்துப் போன பிறகு ஜெயந்தி விழா செய்து ஞாபகச் சின்னம் கட்டுகிறீர்கள்!"

"போகட்டும்; அது ஒரு திருப்தியாவது இருக்கிறதோ இல்லையோ?"

"நல்ல திருப்தி!"

"சரி; மேலே என்ன செய்யப் போகிறாய்?" என்றேன்.

"இனிமேல் ஒருவனை நம்பி ஒரு காரியம் செய்வதில்லையென்று தீர்மானித்து விட்டேன். நானே ஒரு பத்திரிகை வெளியிடுகிற தென்று நேற்று இரவு பன்னிரண்டரை மணிக்கு முடிவு செய்து விட்டேன்."

"ரொம்ப சந்தோஷம்."

"அதெல்லாம் வெறுமனே வாயால் சந்தோஷம் என்று சொன்னால் மட்டும் போதாது. சந்தோஷத்தைக் காரியத்திலே காட்டவேணும்."

"எப்படிக் காட்டுகிறது?"

"ஆயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கு எழுதிக் கொடுத்துக் காட்டுகிறது. எழுத்தாளனுக்கு எழுத்தாளனும், பத்திரிகைக்காரனுக்குப் பத்திரிகைக்காரனும் உதவி செய்யாவிட்டால், வேறு யார் உதவி செய்வார்கள்?"

என்னிடம் ஆயிரம் ரூபாய் இல்லை என்று சத்தியம் செய்ததின் பேரில் "சரி; ஒரு பூஜ்யத்தைக் குறைத்துக் கொள்!" என்று சொல்லி, அப்புறம் இன்னொரு பூஜ்யத்தையும் குறைத்துக் கொண்டு கடைசியில் பத்து ரூபாய் வாங்கிக்கொண்டு போனான்.

மறு முறை கண்டுவைப் பார்த்த போது, "என்னப்பா! சொந்தப் பத்திரிகை ஆரம்பித்து விட்டாயா?" என்று கேட்டேன்.

"பத்திரிகை வைக்கக் கொண்டு போய்க் குப்பையிலே போடு! இந்தப் பத்திரிகை களைப் போல் உல



பாதிப் பிரதிக்ஞையை ஜல்லு நிறைவேற்றப் போகிறாள்! அவளைக் கதாநாயகியாக வைத்துத்தான் நான் கதையும் ஸினேரியோவும் எழுதியிருக்கிறேன். இன்னும் ஐந்தாறு மாதம் மட்டும் தாமதமாயிரு; அப்புறம் பார் அற்புதத்தை!" என்று சொல்லிவிட்டுச் சுண்டு நடையைக் கட்டினான்.

என் முதுகைத் தட்டக்கூட அவன் மறந்து விட்டுப் போனது எனக்கு அளவில்லாத, அளவில்லாத, அளவில்லாத ...... அட சுண்டு! ...... அளவில்லாத ஆச்சரியத்தை அளித்தது!

★

பிற்பாடும் சில மாத காலம் சுண்டு அடிக்கடி என்னைச் சந்தித்தபோது 'ஜல்லு' 'ஜல்லு' என்று சொல்லி என் பிராணனை வாங்கிவிட்டான். காது செவிடாய்ப் போய்விட்டாலே தேவலை என்று தோன்றியது. ஜல்லுவின் அசல் பெயர் லீலா மனோகரி என்று அறிந்தேன். சுப்பிரமணியன் என்னும் பெயர் சுண்டு என்று திரிந்திருக்கும்போது லீலா மனோகரி ஜல்லு ஆகக்கூடாதா?

ஜல்லுவும் அவள் தாயாரும் அநாதைகள் என்றும், ஏதோ ஸினிமாவில் சில்லறைப் பாத்திரங்களாக நடித்தும், குரூப் டான்ஸுகளில் ஆடியும் ஜீவனம் நடத்திவருகிறார்கள் என்றும் தெரிந்தது.

அத்தகைய ஜல்லுவிடம் சுண்டு தன் உள்ளத்தை முழுதும் பறிகொடுத்திருந்ததோடு, அவளை உலகம் மெச்சும் ஸினிமா நட்சத்திரமாகச் செய்து விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்ததை அறிந்தேன்.

சுண்டுவின் சுபாவம் எனக்குத் தெரியுமாதலால் ஜல்லுவிடமும் அவள் தாயாரிடமும் "ஐயோ! பாவம்!" என்று இருந்தது. இவனுடைய வெறும் வாய் புரட்டைக் கேட்டு அவர்கள் ஏமாந்துபோய்விடப் போகிறார்களே என்று இரக்கப்பட்டேன். அவர்களை ஒரு நாள் நேரில் பார்த்து எச்சரிக்கலாமா என்றுகூடத் தோன்றியது.

நல்ல வேளையாக, அந்த எச்சரிக்கைக்கு அவசியமில்லாமல் போயிற்று. ஒருநாள் சுண்டு தலைவிரி கோலமாய் அதாவது கிராப்புத் தலையை வாராமல் ஓடி வந்து, "அப்பனே! இந்த உலகம் இருக்கிறதே, மகா சண்டாள உலகம்; மகா மோசமான உலகம்; அயோக்கிய உலகம்; அக்கிரம உலகம்; மோச உலகம்; நாச உலகம்! இந்த உலகத்தில் இனி ஒரு நிமிஷங்கூட என்னால் வாழ்க்கை நடத்த முடியாது. இதை ஒரே அடியாக விட்டொழித்துத் தலை முழுகிவிடப் போகிறேன்" என்றான்.

"நூறு தடவை சரி!" என்றேன்.

"சரி என்று ஒரு தடவை சொன்னால் போதாது; நூறு தடவை சொல்லவேணும்!" என்றான்.

"நூறு தடவை சரி!" என்றேன்.

"இந்த மோச உலகத்தைத் துறந்து சந்நியாசம் வாங்கிக் கொள்வது என்று நிர்ணயித்து விட்டேன். யார் தடுத்தாலும் கேட்கமாட்டேன்" என்றான்.

"அடடா! ஜல்லுவின் கதி என்ன ஆகிறது?" என்றேன்.

"ஜல்லு! ஜல்லு!! கல்லு ஜல்லு! அவளாலேதான், அப்பா, நான் சந்நியாசம் வாங்கிக்கொள்ளப் போகிறேன். ஜல்லு செய்த மோசடியினால்தான்!"

கொஞ்சம் கொஞ்சமாக விசாரித்து ஒருவாறு விஷயம் இன்னதென்று தெரிந்து கொண்டேன்.

ஜல்லுவுக்காகச் சுண்டு கதையும் 'டயலாக்'கும் எழுதி ஒரு டாக்கி முதலாளியிடம் எடுத்துக் கொண்டு போனான். தன்னை டைரக்டராகவும் ஜல்லுவைக் கதாநாயகியாகவும் எடுத்துக் கொண்டால் அந்த அற்புதமான கதையைக் கொடுப்பேன் என்றான். இது சம்பந்தமான பேச்சு வார்த்தை நடந்தபோது, ஜல்லு மேற்படி டாக்கி முதலாளியைச் சந்திக்க நேர்ந்தது. சில தினங்கள் பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து நடந்தன. கடைசியில், மேற்படி டாக்கி முதலாளி ஜல்லுவைக் கதா நாயகி எடுத்துக்கொள்வதற்குப் பதிலாகத் தம்முடைய சொந்த நாயகியாகவே ஏற்றுக்கொள்ள முன் வந்தார்! ஜல்லுவுக்கும் மேற்படி முதலாளிக்கும் கலியாணம் நிச்சயமாகி விட்டது. சுண்டு உலகத்தைத் துறந்து சந்நியாச ஆசிரமத்தை மேற்கொள்ள எண்ணியதற்குக் கொஞ்சம் காரணம் இருக்கத்தான் செய்தது!

ஆனால், சுண்டுவாவது, சந்நியாசம் வாங்கிக் கொள்வதாவது, சீக்கிரத்து காலில் ஜல்லுவை மறந்துவிட்டு இன்னொரு கல்லுவைப் பிடித்துக்கொண்டு திரிவான் என்று நான் எண்ணினேன். அவனிடமும் சொன்னேன். சுண்டு வெகு கோபத்துடன் என்னை முறைத்துப் பார்த்துவிட்டுப் போய்விட்டான்.

★

ஒரு மாதத்துக்கெல்லாம் சுண்டுவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. "என் பேச்சை நீ நம்பவில்லையல்லவா? இத்தனாம் தேதி இன்ன மணிக்கு இந்த இடத்துக்கு வந்து பார்!" என்று எழுதியிருந்தான்.

என்னதான் செய்யப் போகிறான் என்று பார்ப்பதற்காக நான் குறிப்பிட்ட இடத்துக்குப் போயிருந்தேன்.

சுண்டு தன் அழகான கிராப்புத் தலையை மழுங்க மொட்டையடித்துக் கொண்டு காவி வஸ்திரம் தரித்துக் கொண்டு கையில் கமண்டலத்துடன் காட்சியளித்தான்.

"அட பாவி! சொன்ன வாக்கை நிறைவேற்றி விட்டாயா?" என்று சத்தமிட்டேன்.

உடனே, "ஸைலன்ஸ்" என்று ஒரு இடி முழக்கக் குரல் கேட்டது.

"போ! அப்பால் போ!" என்று பல குரல்கள் கட்டளையிட்டன.

யாரோ ஒருவன் ஓடிவந்து என்னை அப்பால் இழுத்துப் போனான்.

"ஷூட்!" என்றது மறுபடியும் அந்த இடி முழக்கக் குரல்.

ஜல்லுவினால் நிராகரிக்கப்பட்ட சுண்டு வாழ்க்கையில் வெறுப்படைந்து "மாய உலகம்" என்னும் படத்தில் கூட சந்நியாசி வேஷம் போட்டுக் கொண்டு நடிக்கிறான் என்று அறிந்த பிறகுதான் என் மனம் ஒருவாறு நிம்மதி அடைந்தது.

போகட்டும்! சுண்டு எந்த வழியிலாவது நாலு பணம் சம்பாதித்து யோக்யமாக வாழ்க்கை நடத்தினால் சரி!

ஆம்; நூறு தடவை சரி! சுபம்.



# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்
## லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1937)

தலைமை ஆபீஸ்: மதராஸ்

★

இந்தியாவில் பிராஞ்சுகள்:

| | |
|---|---|
| ஆலப்புழை | மாயவரம் |
| பெங்களூர் ஸிடி | நாகப்பட்டணம் |
| பம்பாய் (போர்ட்) | புதுக்கோட்டை |
| பம்பாய் (மாத்திங்) | பி. அழகாபுரி |
| கல்கத்தா | புரசவாக்கம் (மதராஸ்) |
| கன்னிக்கோட்டை | சேலம் |
| கண்ணனூர் | ஸ்ரீவில்லிப்புத்தூர் |
| கோயமுத்தூர் | சிவகங்கை |
| தேவக்கோட்டை | தாத்பத்ரி |
| குடியாத்தம் | திருச்சிறுப்பள்ளி |
| நமிந்துப்பூர் | தஞ்சாவூர் |
| கர்னூல் | திருநெல்வேலி (டவுன்) |
| காரைக்குடி | திருவாரூர் |
| கும்பகோணம் | திருவனந்தபுரம் |
| மதுரை | தூத்துக்குடி |
| | வேலூர் |

★

பட்டுவாடா ஆபீஸ்கள்:

| | |
|---|---|
| மன்னார்குடி | திருநெல்வேலி (ஜங்ஷன்) |
| பட்டுக்கோட்டை | கூத்தாநல்லூர் |
| சீர்காழி | குத்தாலம் |
| முத்துப்பேட்டை | ஆற்காடு |
| புதுப்பட்டி | |

★

வெளிநாட்டு பிராஞ்சுகள்;

இலங்கை : கொழும்பு

மலேயா : ஈப்போ, கோலாலம்பூர், மலாக்கா, பினேங்கு, சிங்கப்பூர்.

பர்மா : ரங்கூன்

அயல்நாட்டு ஏஜண்டுகள்:

லண்டன்: தி சாஸ் நாஷனல் பாங்க் ஆப் தி ஸிடி ஆப் நியூயார்க், லண்டன். தி மிட்லண்டு பாங்க் லிமிடெட், லண்டன்.

நியூயார்க்: தி சாஸ் நாஷனல் பாங்க் ஆப் தி ஸிடி ஆப் நியூயார்க்.

★

சேப் டெபாஸிட் சர்வீஸ்;

உங்களது பாதுகாப்புக்கான சேப் டெபாஸிட் லாக்கர்கள் மதராஸ் ஆபீஸில் உள்ளன. விவரங்களுக்கு விண்ணப்பித்துக் கொள்ளவும்.




N. P. B.

## புதுப்பாக்கம் பர்மெனென்ட் பண்டு லிமிடெட்

**(பாங்க்)**

**68, பைகிராப்ட்ஸ் முதல் தெரு, இராயப்பேட்டை போஸ்ட், மதராஸ்.**

ஆபீஸ் மணி நேரம்:—காலை 7 முதல் 10 வரை: மாலை 3 முதல் 4-30 வரை.
விடுமுறை நாள்:—பிரதி ஞாயிற்றுக்கிழமையும், பாங்க் லீவ் நாட்களும்.

இந்த பண்டில் ரூ. 50-ம் அதற்கு மேற்கொண்டும் வைத்து கரன்ட் அக்கவுண்ட் ஆரம்பிக்கலாம். இதற்காக எந்தவித செலவும் கிடையாது. செக் மூலம் ஒரே நாளில் பல தடவைகளில் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம். வருஷத்திற்கு ரூபாய் 100-க்கு ஒன்று விகிதம் வட்டி கொடுக்கப்படும்.

1 வருஷத்திற்கு 3½%, 2 வருஷத்திற்கு 4%, 3 வருஷத்திற்கு 4½% கொண்ட பிக்ஸட் டிபாஸிட்டுகளும் எடுக்கப்படும். இவைகளுக்கு வட்டி பிரதி மாதம் பெற்றுக் கொள்ளலாம்.

ரிக்கரிங் டிபாஸிட்டில் ஷேர் ஒன்றுக்கு 2 ரூபாயாக 45 மாதம் கட்டினால் ரூபாய் 100-12-6 கொடுக்கப்படும்.

சேவிங்ஸ் பாங்க் டிபாஸிட்டும் எடுக்கப்படும். அதில் ரூ. 5/- வரை கணக்கில் வைத்துக் கொள்ளலாம்.

பொன், வெள்ளி முதலிய நகைகள் மீது ரூ. 5 முதல் கடன் கொடுக்கப்படும். வட்டி மாதம் 1-க்கு 100-க்கு 8 அணா 4 தம்பிடி. காலையிலும் மாலையிலும் நகைகளை, பணம் கட்டின உடனே, வாபீஸ் பெற்றுக் கொள்ளலாம். இதற்காக பிரத்தியேகமான எந்த செலவும் கிடையாது. வீடுகள், போஸ்டல் பாலிஸிகள், கவர்ன்மெண்ட் பாண்டுகள் இன்னும் மற்ற நாணயமுள்ள வஸ்துக்களின்பேரில் பணம் கடனாகக் கொடுக்கப்படும். இதற்கு வட்டியை நேரில் தெரிந்து கொள்ளலாம்,

**பு. சிவப்பிரகாச முதலியார்,**
செக்ரடரி & டிரஷரர்.

---

## ஒரிஜனல் விஸ்வநாத அய்யர் மிட்டாய்க் கடை

**ராஜ வீதி :: கோயமுத்தூர்**

இனிய சுவை, நன்மணம், சுத்தமான நெய்,
நாவுக்குருசி, விருப்பத்திற்கு ஏற்றதும், தேகா
ரோக்கியத்துக்கு உகந்ததும் எதுவெனில்,
ஐம்பது ஆண்டு புகழும் அனுபவமும் பெற்ற

**ஒரிஜனல் விஸ்வநாத அய்யர் மிட்டாய்க் கடையே!**

யாவரும் வந்து நல்ல காபியையும், பலவகைப் பலகாரங்களையும் உண்டு ஆனந்தமடைய விரும்புகிறோம்.

**C. V. செல்லப்ப அய்யர்,**
உரிமையாளர்



அழகிய ஆடைகள்
நாராயண் டெக்ஸ்டைல்ஸ்
வடக்கு மாடவீதி, மயிலாப்பூர்
மதராஸ்.
murli



தீபாவளி வாழ்த்துகள்
விரைவில் வெளி வருகிறது!
ஸ்ரீ கண்ணா பிலிம்ஸ்
திருமழிசை ஆழ்வார்
டைரக்ஷன்
D.S.கோட்னிஸ்
P.S.செட்டியார்
இசையரசு
தண்டபாணி தேசிகர்
R.பாலசுப்பிரமணியம், S.V.சுப்பையா
K.K.பெருமாள், M.R.சுவாமிநாதன்
T.S.துரைராஜ், மாஸ்டர் பத்மநாபன்
D.V.நாராயணசாமி, M.S.வேலப்பன்
வித்வான் S.T.சீனிவாசன்
தேவசேனா, P.S.சிவபாக்கியம்
குமாரி கல்யாணி, பிரேமாவதி
மற்றும் பலர் நடிப்பது
சுந்தரராஜுலு
திரைக்கதை
பாடல்
இசை
P.S.செட்டியார், சிவன், S.V.வெங்கடராமன், தனபால், R.T.கிருஷ்ணமூர்த்தி

# பருத்தி
# காய்த்த புடவை!

★

பருத்தி புடவையாக காய்ப்பதில்லை. நூலாகவும் நூற்பதில்லை. பருத்தி தரும் பஞ்சை ஆலையிலிட்டு, கொட்டை நீக்கி, நூலாக்கி, சாயம் ஏற்றி, கைத்தறிகளிலும் மில் தறிகளிலும் துணிகளாக நெய்து அழகு பெற நமது கண்ணாடி அலமாரிகளில் அடுக்கி உங்களை "வாங்கோ, வாங்குங்கோ" என்று உபசரித்து உங்களுக்கு தேவையானவைகளை கொடுத்து திருப்தி செய்வதே வியாபாரம்.

இவையெல்லாம் யுத்தத்தால் ஏற்பட்ட கஷ்டத்தால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. நமக்கு வேண்டியவை எல்லாம் கிடைப்பதில்லை. எனினும், தேவைக்கும், அதற்கு மேலும் இஷ்டம்போல் வாங்கும் காலம் ரொம்ப தூரத்தில் இல்லை — அதுவரையும்

## பொறுத்துக் கொள்ளுங்கள்!

★

## ஜெனரல் சுதேசிஸ் லிமிடெட்

| தலைமை ஆபீஸ்: எஸ்பிளனேட் | சென்னை | பிராஞ்சு: வேப்பேரி |
|---|---|---|


அசோகா
சுருட்டு
குணத்திலும்
மணத்திலும்
சிறந்தவை
மணிலா பிராண்ட்
CIGAR
ASOKA
தயாரிப்பவர்:-
M.A. வெங்கட்ராமன்
அசோகா சுருட்டு தொழிற்சாலை — கோயமுத்தூர்.
பிராஞ்ச்கள் : திண்டுக்கல் & தம்பம்பட்டி.


தன்மானமிலாத தயங்கொளி சால்
மின் வானமும் மண்ணும் விளங்குற ஓர்
பொன்மான் உருவங்கொடு போயினனால்
நன்மான் அனையாள்தனை நாடுறுவான்.
பொய்யாமென ஓது புறஞ்சொலினால்
நையா இடை நோவ நடந்தனளால்
வைதேகிதன் வால்வளை மென்கைகளும்
கொய்யா மலரால் மலர் கொய்துறுவான்!
–கம்ப ராமாயணம்
வர்மா

# மகானும் மன்னரும்

அரச வாழ்வைத் துறந்துவிட மன்னர் மகாஜனகர் எண்ணினார். ஆனால் அவருடைய பட்டமகிஷி சிவாலியும் இராஜ்யத்தின் பிரஜைகளும் மன்னரின் அந்த எண்ணத்தை மாற்றப் பல முறைகளைக் கையாண்டனர்.

அந்தச் சமயத்தில் ஹிமாசல பர்வதத்தின் குகையில் ஏழு நாள் இறைவனின் சான்னித்தியம் பெற்றுப் பேரானந்தத்தில் மூழ்கியிருந்த மகான் நாரதர் "யான் பெற்ற இன்பத்தைத் தாங்களும் பெற விரும்புகிறவர்கள் இந்த வையகத்தில் யாரேனும் உண்டா?" என்று தேடிக் கொண்டு புறப்பட்டு வந்தார்.

பட்டத்து யானைமீது பரிவாரம் சூழ வந்த ராஜா மகா ஜனகரை, மானினம் ஓடியாடித் திரியும் ஒரு மலர்ச் சோலையில் மகான் நாரதர் எதிர்கொண்டார். பல அரிய தத்துவங்களை மன்னருக்கு உபதேசித்தார். புத்த பகவானுடைய பூர்வ அவதாரக் கதைகளில் ஒன்றாகிய இந்தக் கதையின் முக்கியமான நிகழ்ச்சியை,—அதாவது மகா புருஷரிடம் மன்னர் பிரான் உபதேசம் பெறும் மகத்தான காட்சியை,—அஜந்தா ஓவியக் கலைஞர்கள் அழியாத வர்ணங்களால் சித்திரித்திருக்கிறார்கள்.

சற்று உயர்ந்த பீடத்தில் அமர்ந்திருக்கும் மகான் நாரதர் நமது புராணக் கதைகளில் வரும் குறும்புக்காரக் கலகக்கார நாரதர் அல்லவென்பதை அவருடைய முகத்திலே பிரதிபலிக்கும் அன்பையும் அமைதியையும் பார்த்து அறியலாம்.

அவருடைய உபதேசத்தைப் பக்தி சிரத்தையுடன் மன்னர் கேட்கிறார் என்பதை அவருடைய முகபாவத்திலும், கண் பார்வையிலும், கரம் குவித்திருக்கும் பாணியிலும், காட்டியிருக்கிறான் கலைஞன்!

அத்துடன் அழகிய கிரீடத்தையும், சிறந்த ஆபரணங்களையும் கர்ண குண்டலங்களையும் மன்னனுக்கு அணிவித்திருப்பது பார்ப்பவர்களுக்கு "ஆமாம், அரச போகமும் ஆடையாபரணமும் இன்னும் இந்த மன்னனுக்கு அரை நாழிகைப் பேறுதான்! போட்டுக் கொண்டு போகட்டுமே!" என்று எடுத்துச் சொல்வது போலிருக்கிறது!

பத்து வயது என்று மதிக்கக்கூடிய இளவரசனும் தரை மீது கையை ஊன்றி அந்த மகானை வணங்கும் காட்சி நம் உள்ளத்தை உருக்கி நமக்கும் பக்தி சிரத்தையை உண்டாக்குகிறது.

இளவரசருக்குப் பின்னாலிருக்கும் பெண்மணிதான் அந்த உபதேசத்தை எவ்வளவு ஊன்றிக் கேட்கிறாள்!

பொதுவாக மன்னரைச் சுற்றியுள்ள எல்லோருடைய மனதிலும் ஒரு பக்கத்தில் மகானிடம் பக்தியும், மற்றொரு பக்கத்தில் மன்னர் துறவறத்தை மேற்கொள்வாரோ என்ற கவலையும் போராடுவதை அவர்களுடைய முக பாவங்கள் புலப்படுத்துகின்றன.

ஆனால் அந்த மீசைக்காரனுக்கு மட்டும் இதெல்லாம் ஒன்றுமே பிடிக்கவில்லையென்று தோன்றுகிறது. அவனுக்குத் தோழன் ஒருவனும் கீழே உட்கார்ந்திருக்கிறான். "எல்லாம் நுழைந்துவிட்டது! வால் மட்டும் பாக்கி;" என்று சொன்னவனைப்போல் அவன் சப்பளம் போட்டு உட்கார்ந்து யானையை உற்றுக் கவனித்துக் கொண்டிருப்பதைப் பாருங்கள்!

இப்படி மகான் நாரதரின் உபதேசத்தை ஒவ்வொருவரும் எந்தெந்த விதத்தில் கேட்டார்கள் என்பதை அஜந்தா சைத்திரிகர்கள் ஆயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்னால் அழியா வர்ணங்களில் தீட்டினார்கள். அந்தச் சித்திரத்தை இப்போது எழுதிய புத்தம் புதிய சித்திரத்தைப்போல் நமது 'மணியம்' பெயர்த்து எழுதி வந்து நமக்கு அளித்திருக்கிறார்.

# மானும் மலரும்

மகா கவிகள் தாங்கள் எந்த சம்பவத்தைப் பற்றிப் பாடுகிறார்களோ அதைக் கண் முன்னால் பார்த்துக்கொண்டே பாடுகிறார்கள். பாட்டைப் படிக்கிறவர்களின் கண் முன்னாலும் அந்தக் காட்சியானது தத்ரூபமாக வந்து நிற்கிறது. இதனால்தான் ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் தமது கம்பர் கட்டுரைகளுக்குக் "கம்பர் தரும் காட்சி" என்ற பொதுத் தலைப்பை அளித்தார்.

கம்ப ராமாயணத்தில் கம்பர் எத்தனை எத்தனையோ அபூர்வ அழகு வாய்ந்த காட்சிகளைக் காண்கிறார்; நம்மையும் காணும்படி செய்கிறார்.

இராம லக்ஷ்மணர்களும் சீதையும் பஞ்சவடியில் ஆசிரமம் கட்டிக்கொண்டு வசித்த நாட்களில் கம்பர் ஒரு சமயம் இரண்டு அபூர்வமான அரிய காட்சிகளைக் கண்டார்.

இரண்டு மான்கள் ஒன்றையொன்று எதிரிட்டு நின்றன. இரண்டு மலர்கள் ஒன்றுக்கொன்று இணையாகக் காட்சி தந்தன.

மான்களில் ஒன்று பொன் மான்; மற்றொன்று பெண் மான்.

இராவணனால் தூண்டப்பட்ட மாரீசன் அழகிய பொன் மான் உருவம் கொண்டான். தன்னுடைய பொன் மேனியிலிருந்து வீசிய நிகரில்லாத ஒளியினால் வானகமும் வையகமும் விளங்கச் செய்துகொண்டு நல் மானை நிகர்த்த மங்கை சீதையை அணுகி வந்தான்.

இப்படியாக மானும் மானும் அழகிலே போட்டி போட்டுக் கொண்டு அருகருகே நிற்பதைக் கம்பர் பார்த்தார்.

அப்போது சீதை என்ன செய்து கொண்டிருந்தாள்? ஏற்கனவே வருந்தப்பட்டுக் கொண்டிருந்த தன்னுடைய இடையானது* மேலும் நோகும்படி நடந்து கொண்டிருந்தாள். எதற்காக? காட்டுக் கொடிகளிலே மலர்ந்திருந்த மலர்களைக் கொய்வதற்காகத்தான்.

சீதை மலர் பறிப்பதற்காகத் தன் வளை அணிந்த மென்மையான கரத்தை நீட்டியபோது இரண்டு மலர்கள் ஒன்றையொன்று அணுகி நிற்பதைக் கம்பர் கண்டார்.

அவற்றில் ஒன்று கொய்ய முடியாத மலர்: அதாவது சீதையின் மலரையொத்த கரம்!

இன்னொன்று கொய்யக்கூடிய மலர்; அது கொடியில் இருந்தது.

கொய்ய முடியாத மலர் கொய்யக்கூடிய மலரைப் பறிக்கப்போன காட்சியைப் பார்த்துக் கம்பர் வியப்படைந்தார். அந்த வியப்பு பின்வரும் வரியில் அற்புதமாக வெளியாகிறது:

"கொய்யா மலரால் மலர் கொய்துவாள்!"

---

* "சீதைக்கு இடையே இல்லை: அது வெறும் பொய்த் தோற்றந்தான்!" என்று உலகினர் சொன்னார்களாம். அதனால் சீதையின் இடையானது மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்ததாம். இடை சிறுத்திருப்பது பெண்களுக்கு அழகு என்னும் விஷயம் இப்படி அலங்காரமாகச் சொல்லப்படுகிறது.

# பந்து பயின்றாளே!

பொங்கு கனங்குழை மண்டிய கெண்டை
　　புரண்டு புரண்டாட — குழல்
மங்குலில் வண்டு கலைந்தது கண்டு
　　மதன்சிலை வண்டோட — இனி
இங்கிது கண்டுலகென்படும் என்படும்
　　என்றிடை திண்டாட — மலர்ப்
பங்கய மங்கை வசந்த சவுந்தரி
　　பந்து பயின்றாளே!

—குற்றாலக் குறவஞ்சி.

"கல்கி" தீபாவளி மலர் 1948

# இரவும் உதயமும்

"நாணினள் எல ஏகினள்
நளிர் கங்குலாகிய நங்கையே!" —கம்பர்

விடியற் காலத்தில் சூரியோதயம் ஆவதற்கு முன்னால் உறக்கம் நீங்கி எழுந்திருப்பவர்கள் பாக்கியசாலிகள். இரவு பகல் இருபத்து நாலு மணி நேரத்தில் மிக அழகான காலம் அந்த விடியற் காலந்தான். அந்த மனோகரமான காலை நேரத்தின் அழகைப் பார்த்து அநுபவிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.

அப்படிக் கொடுத்து வைத்தவர்களிலே ஒருவர் ஸ்ரீ கனு தேசாய். அதிகாலையில் இரவின் இருள் சிறிது சிறிதாக மறைந்து உதயத்தின் ஒளி கொஞ்சம் கொஞ்சமாகப் பரவி வானத்தையும் பூமியையும் தழுவும் காட்சியை ஸ்ரீ கனு தேசாய் பலமுறை பார்த்திருக்கிறார். பார்த்து விட்டுத்தான் இந்தக் கற்பனைச் சித்திரத்தை எழுதியிருக்கிறார்.

கருப்பு நிறம் அழகா? சிவப்பு நிறம் அழகா? கருப்பிலும் ஒரு அழகு இருக்கிறது; சிவப்பிலும் ஒரு அழகு இருக்கிறது. ஆனால் சிவப்பு நிறந்தான் அழகு என்று எண்ணுகிறவர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களில் இராவாகிய மங்கையும் ஒருத்தி. உதய கன்னியானவள் செக்கச் செவேலென்ற நிறத்துடன் நாலாபுறமும் செம்பொன்னொளியைப் பரப்பிக்கொண்டு வருவதைப் பார்த்ததும் இரவுக்குப் பொறாமையும் கோபமும் நாணமும் ஒருங்கே பொங்குகிறது. அந்த கர்வக்காரி உதயகன்னி இருக்கும் இடத்தில் அவளுக்கு நிற்பதற்கே இஷ்டமில்லை. அங்கிருந்து விரைவாக அகன்று செல்லப் பார்க்கிறாள். போகும்போது தன்னுடைய எரிச்சலைக் காட்ட ஏதாவது செய்யவேண்டுமென்று அவளுக்குத் தோன்றுகிறது. உதயகன்னியின் கையிலுள்ள புஷ்பத் தட்டிலிருந்து சில புஷ்பங்களை எடுத்து எறிந்துவிட்டுப் போகிறாள்.

காலை நேரத்தில் இரவு எப்போது கழிகிறது, பகல் எப்போது ஆரம்பமாகிறது என்று யாராவது வரையறுத்துச் சொல்ல முடியுமா? முடியாது.

இரவின் இருளும் உதயத்தின் ஒளியும் பிரிக்க முடியாமல் ஒன்றோடொன்று மயங்கி நிற்கும் காட்சியை ஸ்ரீ கனுதேசாயின் சித்திரத்தில் பார்க்கிறோம்.

இரவு வாழ்க! உதயமும் வாழ்க!

# வ ர க வி

நாட்டு மொழியையும் பாட்டினிசையில் — மிக்க
நல்ல கற்கண்டினிமை சொட்டுமேயடா

பாட்டினில் மந்திர தந்திரங்கள் கண்டவருண்டோடா — அதன்
ஈசன் திருவருள் என்(று) என்றுரையாயடா!

—கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை

கிராமாந்திரங்களிலே பட்டிக்காட்டு ஜனங்கள் பேசும் கொச்சை மொழிகளைக் கையாண்டு பாரதியார் பாட்டு இயற்றினார். எளிய அந்தப் பாட்டுகளிலே கற்கண்டின் இனிமை சொட்டுவதைக் காண்கிறோம். ஆனால் பாரதியாரின் கவிதையில் இனிமை மட்டுந்தானா இருக்கிறது? இனிமையோடு சக்தியும் இருக்கிறது. பரம்பரை பரம்பரையாக முனி புங்கவர்கள் ஓதிவந்த வேத மந்திரங்களில் சக்தி உண்டு என்பார்களே. அத்தகைய சக்தி பாரதியாரின் கவிதை வரிகளிலும் இருக்கக் காண்கிறோம். இது என்ன அதிசயம்? வெறும் ஏட்டிலே அச்சிட்ட எழுத்திலே இப்படிப்பட்ட மந்திர சக்தியும் இருக்குமா? — அந்தப் பாடல்களைப் பாடிய கவிஞர் இறைவன் திருவருள் பெற்றிருந்ததினாலேதான் அவருடைய வாக்குக்கு இத்தகைய சக்தி ஏற்பட்டிருக்க வேண்டும்.

* *

இப்படியெல்லாம் மகாகவி பாரதியாரின் பாடல்களைக் குறித்துக் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை வியந்து பாராட்டுகிறார். அவ்விதம் அவர் பாராட்டி எழுதிய பாட்டே ஒரு மந்திரம் போலத்தான் அமைந்திருக்கிறது!

# சந்திரன்

பாலைமுறித்து படர்ந்தவெண்ணெய் — ஒரு
　　பந்தாய் உருண்டு திரண்டதுவோ
மேலாம் உலகினில் ஒளிசெய்யவே — ஈசன்
　　விண்ணக மீட்ட விளக்கிதுவோ !

★　★　★

பறக்கச் சிறகிருந்தால்
　　வெண்ணிலா வே — உன்றன்
பக்கம்வந்து சேருவேனே
　　வெண்ணிலா வே !

பால்போல் நிலவெறிக்கும்
　　வெண்ணிலா வே — என்றன்
பாங்கில்வரவே வாடவாராய்
　　வெண்ணிலா வே !

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

"சக்தி" தீபாவளி மலர் 1946

# காந்தி மகன் காந்தி

இந்தியாவிலுள்ள பத்திரிகைகளுக்குக் காகிதம் சம்பாதிப்பதற்காக இந்த வருஷ ஆரம்பத்தில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி அவர்கள், அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும், கானடா, யுனைடெட் ஸ்டேட்ஸ், டென்மார்க் முதலிய தேசங்களுக்குச் சென்று, போன காரியத்தை வெற்றியுடன் முடித்துக்கொண்டு திரும்பி வந்தார்.

1. நியூயார்க்கில் ஒரு பெரிய மாளிகையின் மேல்மாடியில் நின்று ஸ்ரீ தேவதாஸ் நகர் காட்சியைப் பார்க்கிறார். அவருக்குப் பின்னால் 'கிரைஸ்லர்' மோட்டார் கம்பெனியின் கோபுரம் வானளாவி நிற்கிறது.

2. டென்மார்க் தேசத்தின் தலைநகரான கோபென்ஹாகென் பட்டணத்தின் வீதியில் ஸ்ரீ தேவதாஸ் நடை பயில்கிறார்.

3. இங்கிலாந்தின் மூது பெருங் கிழவரும் உலகம் வியக்கும் பேராசிரியருமான ஸ்ரீ பெர்னார்ட் ஷா, காந்தி மகன் காந்தியின் தோள்மீது கை போட்டுக்கொண்டு குலாவி மகிழ்கிறார்.

4. கானடாவிலுள்ள பிரபல காகித வியாபாரக் கம்பெனியின் பிரமுகர்கள் ஸ்ரீ தேவதாஸ் காந்திக்கு வரவேற்பு அளிக்கிறார்கள்.

# தீப லக்ஷ்மி

"தீப மங்கள ஜோதீ நமோ நம"

பகலைப் படைத்ததோடு இரவையும் படைத்த இறைவனை வணங்கி வாழ்த்துகிறோம். இரவு என்பது ஒன்று இல்லா விட்டால் விளக்கு என்பதாக ஒன்று ஏற்பட்டிரா தல்லவா?

அந்தி மயங்கி இரவு சூழ்ந்து வரும் மாலை வேளையில் வீட்டு வாசலில் தீபத்தை ஏற்றி வைத்தால் அதைவிட அழகான காட்சி வேறொன்று மில்லை; மனோகரமான காட்சியும் வேறு கிடையாது.

அந்த அழகை அநுபவித்து விட்டுத்தான் நமது முன்னோர்கள் தீபம் ஏற்றுவதை மங்களமான காரியங்களில் ஒன்றாகக் கருதினார்கள். தீபத்தை 'லக்ஷ்மி' என்று சொன்னார்கள். தீப மங்கள ஜோதியைக் கடவுளாகவே கருதி வழிபட்டார்கள். மலை உச்சியில் பெரிய தீபத்தை ஏற்றி நெடுந் தூரத்துக்கு நெடுந் தூரம் தெரியச் செய்து உற்சவமாகக் கொண்டாடினார்கள். ஆலயங்களில் லட்ச தீபம் ஏற்றிப் பார்த்து மகிழ்ந்தார்கள். வீடுகளில் தீபமேற்றுவதற்கென்று பண்டிகைகளும் ஏற்படுத்தினார்கள்.

தீபாவளிப் பண்டிகை தினத்தில் தீப லக்ஷ்மியைப் போற்றி வணங்கி இந்தப் பாரத புண்ணிய பூமிக்கு நித்திய மங்களத்தை அளிக்க வேண்டும் என்று பிரார்த்திப்போமாக!

# சிவானந்த நடனம்

மதுவிரி கோதை
மடவரற்(கு) அம்ம!
புது விருந் துண்ண
உன்னை
அதிசயம் விளைக்கும்நின்
அற்புதக் கூத்தே! —குமரகுருபரர்

எல்லா வஸ்துக்களுக்குள்ளும் இறைவன்தான் இருக்கிறான் என்று சொன்னால் ஆட்சேபம் ஒன்றும் இல்லை. எல்லாப் பூண்டுகளுக்குள்ளும் இறைவன் இருக்கிறான் என்று சொல்லலாம்; எல்லாப் பிராணிகளுக்குள்ளும் அவன் இருக்கிறான் என்றும் சொல்லலாம். ஆனால் நமக்குள்ளேயும் இறைவன் இருக்கிறான் என்று சொல்லும்போது வருகிறது ஆபத்து!

நம்முடைய உடல், உயிர் (உடலில் நிகழும் மாறுபாடுகள்), உணர்ச்சி ஆகிய மூன்று தத்துவங்களும் இறைவனது தத்துவங்கள் என்று சொல்ல வரும்போது நமக்கே ஆபத்து வந்து விடுகிறது. அதன் பலனாக, நம்முடைய சொந்த தத்துவங்கள் எல்லாம் இல்லாமல் போய் விடுகின்றன; அதாவது எரிபட்டுப் போகின்றன!

இந்த விஷயத்தை நம்மவர்கள் சொல்லும்போது "இறைவன் அக்னி மயமாயிருக்கிறான்" என்று சொன்னார்கள்.

பேரண்டத்தை நிறைத்துக் கொண்டிருக்கும் அண்டங்கள் எல்லாம் எங்கும் நிறைந்ததாயுள்ள அந்த அக்னிக்கு இரையாகி விடுகின்றன.

பேரண்டத்தையே சுற்றிச் சுழன்று வரும் அக்னிப் பிரவாகமாக இறைவனுக்கு உருவம் கொடுத்தார்கள் நம் பெரியோர்கள். சிவபெருமானது நடனம் அந்த உருவமே யாகும்.

இப்படி எல்லாவற்றையும் இறைவன் சிர்மூலம் பண்ணினாலும் அதனால் ஆன்மா அடைவது பேரானந்தமே.

ஆகவே அக்னி மயமான நடராஜ தத்துவத்துக்குள் அருளாகிய தாய்த் தத்துவமும் இருக்கவே செய்கிறது. தாயான பார்வதி தேவி அந்த நடனத்தைக் கண்குளிரப் பார்த்து அனுபவிக்கிறாள்.

கலை வல்லார் கனுதேசாய் இந்தப் படத்தில் சிவபெருமானது ஆனந்த நடனத்தை அக்னிப் பிரவாகமாகவும், பார்வதி தேவியின் கருணையைத் தண் தாமரையோடு ஒட்டிய நீலமேக வர்ணமாகவும் சித்திரித்திருக்கிறார்

குமரகுருபரரின் பாடலும் அந்த உண்மையையே நன்றாக எடுத்துச் சொல்லுகிறது. அக்னி மயமான சிவபெருமானுடைய அற்புத நடனத்தைப் பார்க்கப் பார்க்கப் பார்வதி தேவிக்கு எவ்வளவு புதிய புதிய அதிசயங்களும் ஆனந்தங்களும் ஏற்படும் என்பதை நினைக்கும்போது குமரகுருபரருக்கு ஒரே வியப்பாய்ப் போய்விடுகிறது. அந்த வியப்பு பாடலின் அமைப்பிலும் அற்புதமான முறையில் வெளியாகிறது!

COVER PRINTED AT THE TIMES OF INDIA PRESS, BOMBAY.


SRI UMAYAL WEAVING ESTABLISHMEN
CANNANORE, N. MALABAR.
உமையாள் கைத்தரிகள்: பெட்ஷீட், டேபி
ள் விரிப்பு, விரிப்புரகங்கள், டர்க்கி டவல்கள்,
துண்டுகள், தற்கால பெண்களுக்கேற்ற
பலரகங்களில் உடைகள், உயர்தர ஷர்டிங்.
ஸ்ரீ உமையாள்